உ

சிவமயம்

# திருவாவடுதுறை திருத்தல வரலாறு



ஸ்ரீ அதுல்யகுஜாம்பிகை சமேத
ஸ்ரீ கோமுக்தீஸ்வரர்

## திருவாவடுதுறை ஆதீனம்




உ
சிவமயம்

# திருவாவடுதுறை திருத்தல வரலாறு

ஆதீனக் குருமுதல்வர்
ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள்
கோடாபிஷேகத் திருநாள்
(சித்திரை - அசுவதி)
விழா மலராக வெளியிடப்பெறுகிறது.

திருவள்ளுவர் ஆண்டு 2049,
மெய்கண்டார் ஆண்டு 795
விளம்பி ஆண்டு, சித்திரைத் திங்கள் 30,
13-05-2018 - ஞாயிற்றுக்கிழமை

திருவாவடுதுறை ஆதீனம்

உ

சிவமயம்



ஸ்ரீ தல விநாயகர்

## திருக்கோயில் முகவரி

கண்காணிப்பாளர்,
ஸ்ரீ கோமுக்தீசுவரர் திருக்கோயில்,
திருவாவடுதுறை, குத்தாலம் வட்டம்,
நாகை மாவட்டம் - 609 803.
போன் : 04364 - 232055
செல் : 94439 00408.

45/4

உ
சிவமயம்

# திருவாவடுதுறைத் திருத்தலவரலாறு

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருவாவடுதுறை ஸ்ரீ அதுல்யகுஜாம்பிகை சமேத ஸ்ரீ கோமுக்தீஸ்வரப் பெருமான் திருக்கோயில் தலவரலாறு

இஃது
திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்து நான்காவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**
அருளாணையின் வண்ணம் வெளியிடப்பெறுகிறது.

ஆசிரியர்
**முனைவர். ப. சுவாமிநாதன், திருவாவடுதுறை.**

**திருவாவடுதுறை ஆதீனம்**

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | திருவாவடுதுறைத் திருத்தல வரலாறு |
| நூலாசிரியர் | : | முனைவர். ப. சுவாமிநாதன் எம்.ஏ., பி.எட்., பிஎச்.டி., திருவாவடுதுறை. செல் : 9443484655 |
| வெளியீடு | : | திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை. |
| வெளியீட்டு எண் | : | 777 |
| வெளியீட்டு நாள் | : | 13.05.2018 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | ஏழாம் பதிப்பு |
| பிரதிகள் | : | 3,000 |
| தாள் | : | சேஷாயி 13.7 |
| நூல் அளவை | : | 1/8 டிம்மி |
| பக்கங்கள் | : | 176 |
| விலை | : | ரூ. 40/- |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை. |
| புத்தகக்கட்டு | : | பின் பைண்டிங் |
| பொருள் | : | கோயில் வரலாறு |

45/4

# திருவாவடுதுறை திருத்தலவரலாறு

## பொருளடக்கம்

உ

சிவமயம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணை
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில் திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

– காஞ்சிப் புராணம்.
( ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் )

உ

சிவமயம்



ஆதீனக் குருமுதல்வர்

ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள்



அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயிலின் கிழக்கு கோபுர வாயில்

## திருவாவடுதுறை ஆதீனக் குருமுதல்வர்
# ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள்
### அருள் வரலாற்றுச் சுருக்கம்

உலகம் ஓர் குலம்; உலகு அனைத்தும் இன்புற வேண்டும் என்ற பரந்தமனம் படைத்தது ஆசாரியப் பரம்பரை. திருக்கயிலையில் உண்டாகிய இப்பரம்பரைக் காலம் பல கடந்து இடையறாது இந்நாள் வரை வளர்ந்து வருகிறது. கயிலைப் பரம்பரையின் மெய்கண்ட சந்தான ஆசாரியர்களில் ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியரிடம் உபதேசம் பெற்ற ஸ்ரீ அருள் நமசிவாயரிடம் தீட்சை பெற்றவர் ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசர். அவரிடம் சிவஞான அபிடேகமும், உபதேசமும், ஆசாரிய பரம்பரையைப் பாதுகாத்து வர திருஆணையும் பெற்று, திருவாவடுதுறையில் ஆதீனத்தைத் தோற்றுவித்த முதற்பெரும் குருமூர்த்திகள் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள்.

இவர்கள் சோழ மண்டலத்தில் நாகை மாவட்டம் மயிலாடுதுறைக்கு மேற்கே 3 கி.மீ தொலைவில் அமைந்த மூவலூர் என்னும் ஊரில் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவர்கள். இவர்களது பிள்ளைத் திருநாமம் வைத்தியநாதன் என்பது. இளம் பிராயத்தில் இவர்கள் தம் பெற்றோருடன் புள்ளிருக்குவேளூரில் (வைத்தீசுவரன் கோயில்) ஸ்ரீ வைத்தியநாதப் பெருமானை வழிபட்டுத் திருவருளில் ஒன்றிய சிந்தையினராக மனமுருகி நின்றபோது, பெருமானே ஒரு சிவாச்சாரியர் திருமேனி தாங்கி வந்து சிவலிங்கத் திருமேனி ஒன்றினைத் தந்தருளிய பேறுடையவர்கள்.

தல யாத்திரையாகத் தம் அடியார் திருக்கூட்டத்துடன் மூவலூர் சேர்ந்த ஸ்ரீ சித்தர்சிவப்பிரகாசர், சிறிய பெருந்தகையராக விளங்கிய வைத்தியநாதரைக் கண்டார்கள். சிவஞானப் பேற்றிற்கு உரிய குறிகளையும் திருவருட்குறிப்பையும் உணர்ந்து, பெற்றோர் இசைவுடன் பிள்ளையைத் தம்முடன் அழைத்துக் கொண்டு திருவாவடுதுறையை அடைந்தார்கள்.

அங்கு ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசர் அப்பிள்ளைக்கு ஞானதீட்சை புரிந்து நமசிவாயம் என தீட்சாநாமம் சாத்தி, குரு பரம்பரையில் தாம் பெற்ற சிவஞான உபதேசத்தை அருளிச் சிவஞான ஆனந்த அனுபவம் கைவருமாறு அனுக்கிரகம் செய்தார்கள். குருமரபில் தாம் பெற்ற ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியர் பூஜை செய்த ஸ்ரீ ஞான மாநடராஜப் பெருமானையும்,

தம்முடைய ஆன்மார்த்த மூர்த்தியையும் பூசித்து வரும் அதிகாரத்தையும் வழங்கினார்கள். தாம் வீற்றிருந்த இடத்தில் வரைகீறி அமைக்கப்பெற்ற அறையுள் அமர்ந்து சைவ சித்தாந்த மரபு தழைக்கச் சிவஞான உபதேசம் செய்துவர ஆணையருளி, தாம் திருமறைக்காட்டிற்கு எழுந்தருளினார்கள்.

ஸ்ரீ நமசிவாய தேசிக மூர்த்திகள் தம் ஞானாசிரியர் திருவாணையின் வண்ணம் அவர் வகுத்த அறையிலிருந்து, வரும் பக்குவ ஆன்மாக்களுக்குச் சிவஞான உபதேசம் அருளி சுத்தாத்துவிதச் சைவ சித்தாந்தப் பரிபாலனம் செய்து வந்தார்கள்.

இவ்வண்ணம் ஆதீன முதற்பெரும் குருமூர்த்திகளாக வீற்றிருந்து சுத்தாத்துவிதச் சித்தாந்த நன்மரபு தழைக்கச் செய்த ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள், திருக்கயிலாய பரம்பரை, குரு சந்தானம் வளர்ந்தோங்கி வர, தாம் தோற்றிவித்த ஞானகுருபீடத்திற்குத் தக்கவரை தேர்ந்தெடுக்க திருவுளம் பற்றியபோது ஆதீனத்து இரண்டாவது குருமூர்த்திகளாக விளங்கியருள மறைஞான தேசிகரின் பக்குவ நிலையை உணர்ந்து அவர்களுக்கு சிவஞான உபதேசமும் ஆசாரிய அபிடேகமும் செய்தருளினார்கள். அந்நிலை யிலேயே மறைஞான தேசிகர் தைல தாரைபோல இடையறாது உருகி சிவானந்த நிட்டை கூடினார்கள், (இவர்கள் நிட்டை கூடிய இடம் திருவாவடுதுறையில் மறைஞான்த் தபோவனம் என்று அன்று முதல் போற்றப்படுகிறது.) பின் அம்பலவாண தேசிகருக்கு ஞானாபிடேகம் செய்து துவிதீய ஆசாரியராக (இளைய சந்நிதானம்) அமைத்து, ஒரு தை மாதம் அசுவதி நன்னாளில் சித்தாந்த சுத்தாத்துவித முத்தி அடைந்தருளினார்கள். ஆதீனக் குருமுதல்வர் ஞான சமாதித் திருக்கோயிலில் நாள்தோறும் காலை அபிடேக ஆராதனைகளும் இரவு தீபாராதனையும் நடைபெற்று வருகின்றன. மாதந்தோறும் அசுவதி நட்சத்திரத்தில் குருமூர்த்திகளுக்குச் சிறப்பு வழிபாடுகளும் தோத்திர நூல்கள் பாராயணமும் செய்யப்பட்டு வருகின்றன.

பிரதி வருடம் தை மாதம் அசுவதி நன்னாளில் (மகரத்தலைநாள்) ஆதீன முதற்பெரும் குருமூர்த்திகளாக விளங்கும் **ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின்** குருபூஜை விழா கொடியேற்றத்துடன் துவங்கி தினமும் காலை, இரவு இருவேளைகளிலும் அபிஷேக ஆராதனைகளோடு பத்து நாட்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.



திருவாவடுதுறை ஆதீனம்

24ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# முன்னுரை

## இறைக் கடன்

உலக நாயகராகிய சிவபெருமான் நம்மீது கொண்ட அளப்பரும் கருணையினாலே நாம் உய்யும் பொருட்டு இந்நிலவுலகில் திருக்கோயில்களில் இலிங்க உருவினராய் எழுந்தருளி அருள்பாலித்து வருகிறார். புராண காலத்திலேயே திருக்கோயில் வழிபாடு சிறப்புற்றிருந்தது. வழிபாடு என்பது நம் முன்னோர்கள் காட்டிய வழியிலேயே சென்று இறையருள் பெறுவதேயாகும். பல தெய்வங்களும் பற்பல தேவர்களும் முனிவர்களும் அரசர்களும் அருளாளர்களும் தலங்கள் தோறும் சென்று திருக்கோயில் வழிபாடு நிகழ்த்தியுள்ளனர். பலன்கள் எதிர்பார்த்து வழிபட்டாலும் பலன்கருதாமல் வழிபட்டாலும் இறை வழிபாட்டிற்குரிய பலன்களைத் தந்தருள்வது இறைக்கடன்.

## இறைவி காட்டிய இறைவழிபாடு

உலக அன்னையாம் உமையம்மை தாமே திருக்கோயில் வழிபாடு செய்தருளி நம்மை வழநடத்தியருளுகின்றார். இறைவன் திருவிளையாடலால் பசுஉரு பெற்ற பார்வதி தேவியானவள் திருவாவடுதுறை தலத்தில் எழுந்தருளியுள்ள ஆவடுதுறை அரனாரை முறைப்படி வழிப்பட்டு பேறுபெற்றார் என்ற புராண நிகழ்வு நமக்காக எளிவந்த பிராட்டியாக அவர் எழுந்தருளிய தன்மையைப் புலப்படுத்துகிறது. அம்மை ஆ (பசு) உருவில் வந்து தம் சாபம் அடுதலை (நீக்கம்) ப் பெற்றார் என்றால் இத்திருத்தலப் பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ ?

## ஆதீனமும் அரனாலயமும்

சமய நிறுவனங்களில் முதன்மையானவை திருக்கோயில்களும் மடங்களுமே. சைவ சமயத்தில் இவ்வகை நிறுவனங்கள் தமிழகத்தில் தான் அதிகம். குறிப்பாக தஞ்சை மாவட்டத்தில் திருக்கோயில்களாலும் ஆதீனங் களாலும் சைவம் தழைத்தோங்குகிறது. 273 பாடல் பெற்றத் தலங்களில் 190 தலங்கள் சோழநாட்டில் உள்ளன. இவற்றிலும் காவிரித் தென்கரை தலங்கள்தான் அதிகம் (127). அவற்றில் தலத்தாலும் ஆதீனத்தாலும் புகழ் பெற்ற ஊர் திருவாவடுதுறையே.

திருவாவடுதுறையின் புகழினை எடுத்துரைக்கும் போது திருக்கோயிலையும் ஆதீனத்தையும் பிரிக்க முடியாது. சேர்த்தே அறிதல் வேண்டும். இத்திருவாவடுதுறைக்கு நாற்பால் எல்லை கூறும்போது கிழக்கே திருத்துருத்தியும் (குத்தாலம்) தெற்கில் திருக்குளம்பியம் (திருக்கோழம்பம்) மேற்கே குரங்காடுதுறையும் (ஆடுதுறை) வடக்கே திருக்கோடிக்காவும் (திருக்கோடிக் காவல்) இருக்க நடுவே இத்தலம் விளங்குகிறது எனலாம்.

## 'ஆ' வளம் நிறைந்த ஆவடுதுறை

திரு + ஆ + அடு + துறை = திருவாவடுதுறை. ஆக்கள் அடுத்த துறை – ஆவடுதுறை. ஆ – பசு ; துறை – ஆற்றுத்துறை. பசுக்கள் நிறைந்துள்ளதும்காவிரியாற்றின் ஆற்றுத்துறையில் அமைந்துள்ளதுமான ஊர். சோழநாடு காவிரியால் வளம் பெற்ற ஊர். காவிரியின் இருமருங்கிலும் உள்ள தலங்கள் பல 'துறை' என்றே பெயர் பெற்றன. தவத்துறை, பராய்த்துறை, மாந்துறை, கடப்பந்துறை போன்ற ஊர்களை இதற்குச் சான்றுகளாகக் கூறலாம்.

சோழநாடு வயல்கள் நிறைந்த மருத நிலம். காவிரி முதலான ஆறுகளால் வளம் பெற்றவை. நீர்வளமும் நிலவளமும் மிகுந்த இப்பகுதிகளில் பசுவளமும் இயல்பாகவே மிகுந்திருக்கும். திருமூலர் திருவாவடுதுறைக்கு வந்த காலத்தில் ஆநிரை மேய்ப்போனாகிய மூலன் என்பானின் உடலில் புகுந்து பசுக்களை மேய்த்தார் என்ற வரலாறு இத்திருவாவடுதுறையின் பசு வளத்தைக் காட்டுகிறது. ஆவளம் மிக்குள்ள காவிரிக் கரையிலுள்ள ஊர் ( ஆ, அடு, துறை ) எனப் பொதுப் பெயராகத் தோன்றினும் இறைவி பசு (ஆ) வடிவம் கொண்டு இறை வனை வழிபட்ட பதி (ஊர்) என்பதே இத்தலத்தின் முதன்மைச் சிறப்பாகும்.

## இத்தலத்து தனிச்சிறப்புகள்

இறைவன், ஒரு பூசத் திருநாளில் அம்மையின் கோ (பசு) உரு நீக்கி பழைய உருவில் அவரை அணைத்து எழுந்தருளிய திருக்கோலத்தில் அணைத்தெழுந்த நாயகர் என்ற திருப்பெயரில் இத்திருக்கோயிலில் அருள்பாலிக்கிறார். பிரிந்த தம்பதியரும், கருத்து வேறுபாடுகள் கொண்ட கணவன் மனைவியரும் இத்தலத்து அருள்மிகு அணைத்தெழுந்த நாயகரை வழிபட்டால் பிரிந்தவர்கள் சேர்ந்தும் பிரச்சனைகள் நீங்கியும் மனமகிழ்வு எய்துவர்.

இத்திருக்கோயிலில் மகாநந்தி (14 அடி 9 அங்குலம் உயரம்) மிகவும் சிறப்பு வாய்ந்தது. நந்தித்தலம் என்றதொரு பெயரும் இத்திருவாவடுதுறை திருக்கோயிலுக்கு உண்டு. பிரதோஷ வழிபாடு இத்தலத்தின் தனிச்சிறப்பு. இத்திருக்கோயிலின் மதில்களில் நந்திகள் கிடையா. திருமாளிகைத் தேவருக்காக மதில்நந்திகள் உயிர்பெற்று எழுந்து போரிட்டன என்பது இக்கோயிலின் தலப்புராணச் செய்தி.

திருவாரூர் தியாகேசர் போன்று இத்தலத்திலும் தியாகேசர் தனிச்சன்னிதி உண்டு. முகுசுந்த மாமன்னனுக்கு மகப்பேற்றினை அருளிய இத்தியாகேசர் புத்திரத் தியாகேசர் என்ற திருநாமத்துடன் இத்தலத்தில் அருள்பாலித்து வருகிறார்.

திருமாளிகைத்தேவர் இத்தலத்தில் இருந்து இத்தல இறைவனருளால் நிகழ்த்திய அற்புதங்கள் பல உள. அவற்றை இத்தலவரலாற்று நூலின் அகத்தே தனித்தலைப்பில் படித்து பயன் பெறுக.

பத்தாம் திருமுறையாகிய திருமந்திர அருள்நூலைத் தந்தருளிய திருமூல நாயனார் இத்தலத்து இறைவனை வழிபட்டு படர் அரசின் கீழ் இருந்து 3000 ஆண்டுகள் தவமிருந்து ஆண்டுக்கொரு பாடலாக 3000 பாடல்கள் தந்தருளினார். மேலும் திருமூலரின் ஞானசமாதித் திருக்கோயிலும் இத்தலத்தில்தான் உள்ளது. இங்கு இன்றும் யோக மார்க்கத்து அன்பர்கள் பலரும் இக்கோயிலிலுள்ள திருமூலர் சன்னிதியில் தனித்திருந்து யோகமும் தியானமும் செய்து உடலும் உள்ளமும் உரம் பெறுகின்றனர் என்பது கண்கூடு.

இத்திருக்கோயிலின் வசந்த மண்டபத்தைக் குலோத்துங்க சோழன் அழகுற அமைத்துள்ளான். இம்மன்னனே இத்தலத்திற்கு அருகில் உள்ள திருவாலங்காட்டு திருக்கோயிலையும், வடபத்திர காளியம்மன் கோயிலையும் எழுப்பிவித்தான் என்று கல்வெட்டுகள் கூறுகின்றன. அக்காலங்களில் இத்தலத்தில் திருமூலர் நாடகம் நிகழ்ந்தது பற்றியும், வைத்தியக் கல்லூரி ஒன்று இயங்கியது பற்றியும் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது.

### திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா

இத்தகு வரலாற்றுச் சிறப்பும் புராணச் சிறப்பும் தேவாரப்பதிகச் சிறப்பும் பெற்ற இத்திருக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத்தின் அருளாளு

கையில் பொலிவுடன் விளங்குகின்றது. இவ்வாதீனத்தின் **இருபத்து நான்காவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்களின் நேரடி அருட்பார்வையில் இயங்கிவரும் இத்திருக்கோயில் தூய்மையுடனும் அருட் பொலிவுடனும் விளங்குகிறது.

## ஆதீன அருட்பணிகளில் சில . . .

இத்திருக்கோயிலைப் பல்லாற்றானும் சீரிய முறையில் பரிபாலனம் செய்தருளி ஆதீனத்திற்குரிய ஐம்பதிற்கும் மேற்பட்ட திருக்கோயில்களை நன்கு சிறப்புற புரந்தருளுவதுடன் உரிய காலங்களில் திருப்பணிகள் செய்துவித்து திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாக்கள் நிகழ்த்தியும், சைவ சித்தாந்த சாத்திரங்கள், பன்னிரு திருமுறைகள், பலஅரிய தமிழ் நூல்கள் போன்றவற்றைத் தக்கோர் கொண்டு பதிப்பித்தும், சைவசித்தாந்தம் மற்றும் திருமுறை நேரடி பயிற்சி மையங்களை நாடுமுழுவதும் நடைபெறச் செய்து சைவ மெய்யன்பர்களை நெறிப் படுத்தியருளியும் தக்கோர்க்கு தீட்சைகள் தந்தருளியும் அன்பர்கள் அனைவருக்கும் நேரில் தரிசனம் கொடுத்தருளுதலோடு அருளுரைகள் உபதேசித்தும் தங்கள் ஊர்களிலும் இல்லங்களிலும் நடைபெறும் விழாக்களுக்கு அன்பர்களின் வேண்டுகோளுக்கு கருணை செய்து அருள்வாழ்த்துரைகளும் பிரசாதங்களும் அனுப்பிவித்தும் செய்தருளுகின்ற மகாசந்நிதானம் அவர்களின் செவ்விய திருப்பணிகள் ஏராளம்; ஏராளம். அவற்றை விரிப்பின் பெருகும் ; தொகுப்பின் எஞ்சும்.

பத்திப் பணித்துப் பரவும் அடிநல்கிச் சுத்த உரையால் துரிசறச் சோதித்து நித்தமும் ஆட்கொண்டு சித்தம் இறையே சிவகுருவான சீர்வளர்சீர் குரு மகாசன்னிதானம் அவர்களின் உலப்பிலா ஆனந்தத் திருவடி இணையினை எண்ணத்தாலும் எழுத்தாலும் சொல்லாலும் செயலாலும் தொழுது, அடியேனையும் ஒருபொருட்டாக்கி சைவத் தமிழ்ப் பணிகளில் ஆழ்த்திய பேரருட் திறத்தினை நினைந்து நினைந்து, நெகிழ்ந்து மகிழ்ந்து போற்றுகின்றேன்.

என்றும் குருவருட்பணியில்
அடியேன்,
**முனைவர். ப. சுவாமிநாதன்.**



மகா நந்தி

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருவாவடுதுறை
# ஸ்ரீ அதுல்ய குஜாம்பிகை சமேத
# ஸ்ரீ கோமுக்தீசுவரர் திருக்கோயில் தலவரலாறு

பிறக்க முத்தி ஆரூரில், காண முத்தி
சிதம்பரத்தைப், பிரியா(து) உற்றங்கு
இறக்கமுத்தி காசிதனில், நினைக்க முத்தி
சோணகிரி என்பர், இந்தச்
சிறப்புறும் கோமுத்திநகர் பிறந்தவர்க்கும்
இறந்தவர்க்கும் தெரிசித்தோர்க்கும்
மறப்பறஉள் நினைத்தவர்க்கும் துதித்தவர்க்கும்
இருந்தவர்க்கும் வழங்கும் முத்தி.

*- திருவாவடுதுறைப் புராணம்.*

## திருவாவடுதுறை – பெயர் விளக்கம்

உலக முதல்வனாகிய சிவபெருமானை நினைந்து அன்பால் வழிபடுவது இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மைப் பயனையும் ஒருங்கே அளிக்கவல்லது. இவ்வழிபாட்டிற்குத் துணையாக நிற்பவை திருக்கோயிலும், இறைவனை வழிபட்டு உய்யும் நெறியினை உள்ளவாறு விளக்க வல்ல குருபரம்பரையும் ஆகும். இந்த இரண்டு சாதனங்களும் இறைவன் திருவருளால் தொன்று தொட்டு இறைவனால் இணைக்கப் பெற்று இலங்கும் தனிச்சிறப்பு உடையது "திருவாவடுதுறை" என்னும் திருத்தலம்.

இத்திருத்தலத்தில் சிவபெருமான் விளக்கமாக வீற்றிருந்து தன்னை அடையும் உயிர்களுக்கு இம்மை மறுமை இன்பங்களைத் தோற்றமில் காலமாக அளித்தருளி வருகின்றான் என்பது புராணத்தாலும் நாயன்மார்கள் வரலாற்றாலும் விளங்கும் உண்மை.



**உபதேச பரம்பரை**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் திருமூலர் சிவபிரான் அருளாணைவழி தங்கி யோகிருந்து தமிழில் உள்ள முதல் ஆகம நூலாகிய திருமந்திரத்தை உபதேச நூலாகவைத்து ஆசாரிய பரம்பரையை நிறுவியது இத்தலத்தில் தான்.

பிற்காலத்தில் திருக்கயிலை அருள்மரபில்வந்த மெய்கண்ட சந்தானத்தில் சிவஞானபோதம் என்னும் தலைமணி ஞான நூலை உபதேச நூலாகக் கொண்டு ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகரால் நிறுவப்பெற்ற ஞான ஆதீனத்திற்குத் தலைமைத்தானமாக விளங்கிவருவதும் இத்திருத்தலமே ஆகும்.

இன்னும் இத்தலத்தில் எண்ணில் கோடி சித்தர்கள் வாழ்ந்திருந்து தமிழகத்தில் உள்ள நன்மக்களுக்கு அருள்நெறியை விளக்கி வந்துள்ளனர். இதனால் இத்திருத்தலம் நவகோடி சித்தபுரம் என்னும் பெயரைப் பெற்று விளங்குகிறது.

சிவபெருமான் திருவாவடுதுறையில் ஏழாம் நூற்றாண்டில், திருஞான சம்பந்தப் பிள்ளையார்க்கு 1000 செம்பொன்பொதிந்த உலவாக்கிழியை அருளிச்செய்தார் என்பது பலரும் அறிந்த உண்மை. இந்தக் காரணம்பற்றி இத்திருக்கோயிலில் எழுந்தருளி உள்ள பெரிய நாயகர்க்குச் செம்பொன்தியாகர் என்னும் திருப்பெயர் வழங்குகின்றது.

**திருஆவடுதுறை – முப்பொருள் விளக்கம்**

இனி திருவாவடுதுறை என்னும் திருப்பெயர் உலகியற்பொருளும் ஞானயோக நுண்பொருளும் கொள்ளும்படி அமைந்திருத்தல் எண்ணி இன்புறுதற்கு உரியது.

1.கங்கையை விடப் புனிதம் உடையது எனப்போற்றப் பெறும் காவிரியின் தென்கரையில் பெரியோர்களும் பொதுமக்களும் திருவுடன் வாழ்ந்து இன்புறுதற்கூரிய பல துறைகள் அமைந்துள்ளன.

அவற்றின் இயற்கை அழகுபற்றி அத்துறைகளும் அவற்றை அடுத்துள்ள திருத்தலங்களும் மயிலாடுதுறை, குரங்காடுதுறை என்றாற்போல வழங்கிவந்தன. அவற்றுள் திருவாவடுதுறை என்பது ஆக்கள் எனப்படும் பசுக்கள் கூட்டமாக வந்து அடுதற்கு உரிய நீரும் நிழலும் புல்வெளியும் உள்ள துறையாதல் பற்றி இது 'திரு ஆ அடு துறை' எனப்பட்டது எனச் சொற்பொருட் காரணம் கூறுதல் உலகியற்பொருள் ஆகும். 'ஆவடுதண் துறை' என அப்பர் சுவாமிகளும் 'அலைபுன்ல் ஆவடுதுறை' எனத் திருஞான சம்பந்தரும் வழங்குவது பற்றி இப்பொருள் உணரப்படுகின்றது.

2. இனி ஆஉருஎய்திய அம்மை இத்தலத்தையடுத்து அவ்வுரு நீத்து தன் பண்டை அருள்ஒளி உருவை எய்தினமை பற்றியும் திருவாவடுதுறை எனக் கொள்ளலாம். இது புராணச் செய்தி.

3. ஞானயோக நுண்பொருளை வடநூலார் சுவாபதேசம் எனக்குறிப்பர் ; ஆ என்பது பசு எனப் பொருள்படும் ; அஃது ஆகுபெயராய், பசுத்துவம், பசுத்தன்மை, இருள்மலம் என்னும் பொருளைக்குறிக்கும் அதனை அடும் - நீக்கும் அருள் துறை ஆதல்பற்றி திருவாவடுதுறை எனப்பட்டது என்பது ஞானயோக நுண்பொருள். இப்பொருளைக் கோமுத்திபுரம் என்னும் இதன் வடமொழிப் பெயர் ஆதரிக்கின்றது.

**கோகழி என்னும் திருவாவடுதுறை**

இன்னும் அம்மையின் கோஉரு (பசுஉரு) கழிந்த இடமாதல் பற்றியும் இந்தத் திருத்தலம் கோகழி என மாணிக்கவாசகரால் குறிக்கப்பட்டதென்பதும் பெரியோர்களது கொள்கை. இக்கருத்துப்பற்றி நோக்கின் திருவாசகம் முதற்பாட்டாகிய சிவபுராணத்தில் வரும் 'கோகழி ஆண்ட குருமணி' என்பது திருவாவடுதுறையில் பல பக்குவ ஆன்மாக்களை ஞான நெறிகாட்டி ஆட்கொண்டஒண் குரவன் எனப் பொருள்படும்.



அதனை அடுத்துவரும் 'ஆகம மாகிநின்று அண்ணிப்பான்' என்னும் தொடர் திருமூலரால் அருளிச் செய்யப் பெற்றத் தமிழாகமமாகிய திருமந்திரத்தின் உட் பொருளாகி சிவஞானிகள் உள்ளத்தே நின்று இனிப்பவன் என்னும் பொருளைத்தரும். கோகழி என்னும் தொடரைத் திருக்கோவையாரில் வரும் வான்கழி என்னும் தொடரொடு ஒப்பிட்டும் உண்மை அறியலாம் என்றும் கூறுவர்.

## திருத்தலத்தின் தனிச்சிறப்புகள்

1. பசுவாக வந்த உமையன்னை தமது பதியைப் (சிவபெருமானை) பாசத்துடன் வழிபட்டு பேறு பெற்ற 'பதி' என்பதே இவ்வூரின் முதன்மைச் சிறப்பாகும்.
2. இல்லறத்தார் இடர்களைக் களைய அணைத்தெழுந்த நாயகராய் தனிச் சன்னிதி கொண்டு அருள்பாலிக்கும் திருத்தலம்.
3. சம்பந்தர்,அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வர் பெருமக்களால் பாடல்பெற்ற திருத்தலம்.
4. தேவர்கள் இத்தலத்தில் படர் அரசமரமாக விளங்க அதன் கீழ் (போதியம்பலம்) இறைவன் திருநடனம் செய்தருளிய தலம்.
5. தருமதேவதை இத்தலத்து இறைவனை வழிபட்டு அவருக்கு வாகனமாகும் பேறு பெற்று இத்தலத்தி லேயே'பெரியநந்தியாக'எழுந்தருளிய நந்தித்திருத்தலம்.
6. இத்தலத்து இறைவன் திருமாலுக்குத் துளசி மாலை அளித்து பிருந்திமயல் தீர்த்தருளிய புராணத் திருத்தலம்.
7. அழகிய விநாயகர், அகத்தியமாமுனிவருக்கு ஞானோபதேசம் செய்தருளிய ஞானத் திருத்தலம்.
8. குருத்துரோகம் புரிந்த அக்னிதேவனுக்கும், வெண்குட்ட நோய் பற்றிய அகத்தியருக்கும் சாபவிமோசனம் அளித்தருளிய பரிகாரத் திருத்தலம்.





9. சிவபெருமானின் வியர்வைத் துளியிலிருந்து பிறந்த செவ்வாய், கிரகப்பதம் பெற்று, செவ்வாய்க் கிழமையில் அன்னதானம் செய்து பேறுபெற்ற திருத்தலம்.
10. திருஞானசம்பந்தர் தம் தந்தையின் வேள்விக்காக இத்தலத்து இறைவனிடமிருந்து பூதம் வாயிலாக 1000 பொற்காசுகள் இக்கோயிலின் பலிபீடத்தில் பெற்ற தங்கத் திருத்தலம்.
11. சுந்தரமூர்த்தி நாயனார் தம் உடற்பிணி தீர உளமுருகி இத்தலத்து இறைவனைப் பாடியருளிய தேவாரத் திருத்தலம்.
12. முசுகுந்த மாமன்னனுக்கு மகப்பேறு அருளி இத்தலத்தைத் திருவாரூராகவும், தம்மைத் தியாகேசராகவும் இறைவன் காட்டியருளிய வரந்தரும் திருத்தலம்.
13. திருமூலர் இத்தலத்தில் அரச மரத்தின் கீழ் 3000 ஆண்டுகள் யோகிருந்து 3000 பாடல்களைக் கொண்ட திருமந்திர ஞானப்பெருநூலை அருளிய திருமந்திரத் திருத்தலம்.
14. திருமாளிகைத் தேவர் இத்தலத்து இறைவனை நாள்தோறும் வழிபட்டு பல அற்புதங்களை நிகழ்த்தியருளிய தலம்.
15. அகத்தியர், திருமூலர், திருமாளிகைத் தேவர், போகர், கருவூர்த் தவர், கொங்கணச் சித்தர் முதலான நவகோடி சித்தர்கள் இத்தலத்து இறைவனை வழிபட்டு அட்டமா சித்திகளாய் பெற்றுவந்த சித்தர் வாழ் திருத்தலம்.
16. கோங்செங்கட்சோழன், சேரமான் பெருமாள் நாயனார், வரகுண பாண்டியன் என மூவேந்தர் களாலும் இத்தலத்தில் தனித்தனி லிங்கங்கள் பிரதிட்டை செய்து வழிபட்டு பேறு பெற்ற மூவேந்தர் திருத்தலம்.
17. இத்தலத்து இறைவன் அருளால் சித்தர் சிவப்பிரகாசர் நமசிவாய மூர்த்திகளைக் கொண்டு ‘திருவாவடுதுறை ஆதீனம்’ ஸ்தாபிதம் செய்தருளிய ஆதீனத் திருத்தலம்.



# தலவரலாற்றின் முக்கியத்துவம்

'கோயில் வரலாறு' என்பது குறிப்பிட்டதொரு கோயிலின் பெருமைகளைக் கூறும் ஆன்மீக நூல்தானே. இதனால் இக்கால சமுதாயத்திற்கு ஏதேனும் பயன் உண்டோ? என எண்ணுவோரும் உண்டு. தல நூல்கள் சமுதாய நலன் கருதியே அமையும்.

சமயத்திலிருந்துதான் சமுதாயம் தோன்றியது. இன்று சமுதாயத்தினின்று பிரிக்க முடியாத ஓர் அங்கமாகிவிட்ட சமயம், இனத்தாலும் மொழியாலும் பிளவுபட்ட மக்களை ஒன்றிணைக்கிறது. தனிமனித நல்லொழுக்கமே சமயவாழ்வில் முதலிடம் பெறுகிறது. ஒவ்வொரு மனிதனும் பிறரைச் சார்ந்தே வாழ்கிறான். தனிப்பட்ட ஒருவனின் நடத்தை அவனைச் சார்ந்தவர்களையும் பாதிக்கிறது. சமயம் ஒருவனை நல்வழிப் படுத்தும் போது அவனைச் சார்ந்த பிறரையும் தம்பால் கவர்கிறது; நற்பண்புகளை வளர்க்கிறது; நாட்டையும் நன்னிலைக்கு உயர்த்துகிறது.

திருக்கோயில் தலவரலாற்று நூல்கள் சமயம் சார்ந்தவை என்றாலும் சமுதாய நலன்களை பல்லாற்றானும் பெருக்குவனவாகவே அமைகின்றன என்பதை அந்நூல்களை ஆழ்ந்து படிப்போரால் உணர முடியும். அவற்றுள் சில :

1. தலவரலாற்று நூல்கள் இன்றைய ஊர்களின் பழைய வரலாறுகளை எல்லோரும் அறியத் தருவன.
2. ஊரின் பெயர்க்காரணம், பழங்காலக் கட்டிடக்கலை அமைப்பு, சிற்பம், ஓவியம், நடன்ம், பாடல், இசை, இலக்கியம் போன்றக் கலைகளைப் பற்றிய விரிவான அறிவினைத் தருகின்றன. இவை பற்றிய நம் முன்னோர்களின் நுண்ணறிவையும் வெளிக் காட்டுகின்றன.
3. ஒரு குறிப்பிட்ட ஊரின் கலைக்களஞ்சியமாகவும் விளங்குகின்றன.

4. படிக்காத மக்களையும் படித்தவர்களாக்குகின்றன.
5. தலப் பயணங்களுக்கு ஊக்கமளித்து வழிகாட்டுகின்றன.
6. அதனால் வியாபாரங்கள் பெருகி பலருக்கும் வேலை வாய்ப்புகளும் பெருகுகிற சூழ்நிலையை உருவாக்குகின்றன.
7. நெடுஞ்சாலைகளும் உள்ளூர்ப் பாதைகளும் சீரடைந்து வெளியூர் மக்களைத் தங்களூருக்கு வரவேற்கும் மனப்பான்மையை மக்களிடம் வளர்க்கின்றன.
8. எறும்பு, சிலந்தி, குரங்கு, யானை போன்ற விலங்குகள் கூட நற்பேறு பெற்றன; நாமும் பெறுவோம் என்ற தன்னம்பிக்கையை ஊட்டவல்லன.
9. தாம் வாழும் இடம்பற்றிய பெருமிதம், உயருணர்ச்சி, சொந்த ஊர்ப்பற்று, அதன் காரணமாக நாட்டுப்பற்று ஆகியன வளர வழிசெய்வன.
10. எங்கும் நிறைந்துள்ள இறைவன் ஒருவனே - அவன் இங்கும் ( நம்மூரிலும் ) இருக்கிறான். 'யாதும் எனது ஊரே, யாவரும் எமது உறவினர்' என்ற உலகளாவிய எண்ணத்தை மக்கள் மனங்களில் வித்திடுகின்றன. ஆக, மக்களிடையே நல்லொழுக்கம் வளர்வதற்கு தலவரலாற்று நூல்கள் பெரிதும் துணைபுரிகின்றன.
11. கோயில் திருவிழாக்களில் பலதரப்பட்ட மக்களும் ஒன்று கூடுகின்றனர். அதனால் ஒற்றுமை ஏற்படும்; உறவுகளும் வலுப்பெறும்.

இவ்வாறு நாடெலாம் வளர, நல்குரவு ( வறுமை ) ஒழிய ஞானமா நெறியெலாம் தழைக்க ஆடவர் பெண்டிர் அறத்தினில் ஓங்கச் செய்வன தலவரலாற்று நூல்களே. 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற உயர்ந்த நோக்கம் உள்ளத்தில் மலரச் செய்து 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற உண்மையை உணரச் செய்யும் தலவரலாற்று நூல்களைப் படித்தறிவோம்; பிறர்க்கும் கொடுத்துதவுவோம்.

## திருவாவடுதுறை திருக்கோயில் தரை வரைபடம் - விளக்கம்

1.ஸ்ரீ கோமுக்தீசுவரர் (மூலவர்)
2.அர்த்த மண்டபம்.
3.நந்தி மண்டபம்.
4.உற்சவத் திருமேனிகள்.
5.மகா மண்டபம்.
6.ஸ்ரீ தியாகேசர்.
7.சந்தானக் குரவர்கள்-நால்வர்.
8.தியாகராஜர் முன் மண்டபம்.
9.மூன்று சூரியர்கள்.
10.சுந்தரமூர்த்தி நாயனார்(உற்சவர்)
11.திருமுறை கண்ட விநாயகர்.
12.அறுபத்துமூவர் (சிலாரூபங்கள்)
13.சேக்கிழார் (புதிய பிரதிட்டை)
14.கன்னி விநாயகர்
15.ஞானாம்பிகை.
16.காளத்தீசுவரர் ( லிங்கம் ).
17.பாண்டியலிங்கம்.
18.கொங்கணேசுவரர் ( லிங்கம்).
19.கொங்கணேஸ்வரியம்மன்.
20.ஸ்ரீ தட்சிணாமூர்த்தி.
21.அகத்திய மா முனிவர்.
22.தல (அழகிய) விநாயகர்.
23.இலிங்கோத்பவர்.
24.அருள்மிகு சுப்பிரமணியர்.
25.சரசுவதி.
26.மீனாட்சி.
27.சொக்கலிங்கம்.
28.விசுவநாதர் ( லிங்கம் ).
29.சேரலிங்கம்.
30.மகாலெட்சுமி.
31.அணைத்தெழுந்த நாயகர்.
32.பிரமன்.
33.ஸ்ரீ துர்க்கையம்மன்.
34.சண்டிகேசுவரர்.
35.வாகன மண்டபம்.
36.ஸ்ரீ நடராசப் பெருமான்.
37.கோரூபாம்பிகை.
38.சோழலிங்கம்.
39.சனீஸ்வரர்.
40.பைரவர்.
41.பஞ்சலிங்கம் ( 5 லிங்கங்கள் ).
42.சந்திரன்.
43.3ஆவது கோபுர நுழைவாயில்.
44.ஸ்ரீ ஒப்பிலாமுலையம்மை.
45.ஆடிப்பூர அம்மன்.
46.பள்ளியறை.
47.அம்மன்சன்னிதி அர்த்த மண்டபம்.
48.அம்மன்கோயில் முன் மண்டபம்.
49.மடைப்பள்ளி.
50.உக்கிராணம் ( களஞ்சியம் ).
51.திருமூலர் திருக்கோயில்.
52.அம்மன்கோயில் யாகசாலை.
53.சண்டிகேசுவரி.
54.இரண்டாம் கோபுர நுழைவாயில்.
55. கொடிமரம்.
56.மகாநந்தி (கல்லாலான பெரியநந்தி )
57.பலிபீடம் (பொற்கிழி அருளிய இடம்)
58.வசந்த மண்டபம்.
59.திருக்கோயில் அலுவலகம்.
60.வன்னிமரத்து வரசித்தி விநாயகர்
61.யானைக் கொட்டகை.
62.பெரிய பிரகாரம்.
63.வடக்கு நுழைவாயில்.
64.தெற்கு நுழைவாயில்.
65.பசுமடம்.
66.சுவாமிகோயில் யாக சாலை.
67.தலவிருட்சம் ( அரசமரம் ).
68.ஆதிகோமுக்தீசுவரர் திருக்கோயில்.
69.நால்வர் கோயில்.
70.கிழக்குராஜகோபுரநுழைவாயில்.
71.துணைவந்த விநாயகர்.
72.சுப்பிரமணியர்(இருதேவியருடன்).
73.கோமுக்தி தீர்த்தம் (திருக்குளம்)

# திருவாவடுதுறை திருக்கோயில் தரை வரைபடம்



# திருக்கோயில் அமைப்பும் வழிபாட்டு முறையும்

### தலமும் இருப்பிடமும்

தமிழ்நாட்டில் உள்ள திருக்கோயில்களில் தேவாரப் பதிகங்கள் பெற்ற தலங்களே சிறப்புடையன வாகப் போற்றப்படுகின்றன. அவற்றுள் மூர்த்தி, தலம், தீர்த்தம் எனும் மூன்றினும் சிறந்து விளங்கும் திருவாவடுதுறை மிகுந்த சிறப்புடைய தலமாகும்.

இத்தலம் மயிலாடுதுறை - கும்பகோணம் இருப்புப் பாதையில் உள்ள நரசிங்கன்பேட்டைப் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே 2 கி.மீட்டர் தொலைவிலும், மயிலாடுதுறை - கும்பகோணம் கற்சாலையில் திருவாவடுதுறை எனும் பேருந்து நிறுத்தத்திலிருந்து தெற்காக ஒரு கி.மீட்டர் தொலைவிலும் அமைந்துள்ளது. இது காவிரியின் தென்பால் 36ஆவது தலமாகப் போற்றப்பட்டு வருகிறது.

கிழக்கு நோக்கி கம்பீரமாகத் தொன்மை நலச் சிறப்புடன் விளங்கும் திருவாவடுதுறை ஸ்ரீ கோமுக்தீசுவரப் பெருமான் திருக்கோயிலின் முன்பு 'கோமுக்தி தீர்த்தம்' என்ற திருக்குளம் உள்ளது. உமையம்மை முதலான தெய்வங்களும் தேவர்களும் மன்னர்களும் புனித நன்னீராடியதும் தீர்த்தப் பெருவிழா நடைபெறுவதுமான இத்தீர்த்தத்தினைப் போற்றி அதில் நீராடியோ அப்புனித நீரைத் தலையில் தெளித்தோ நம்மையும் புனிதமாக்கிக் கொண்டு கிழக்குக் கோபுரவாயிலில் நுழைவோம்.

### ஸ்ரீ துணைவந்த விநாயகர்

கிழக்குக் கோபுரவாயிலின் வெளிப்புறத்தில் தெற்குப் பகுதியில் ஸ்ரீ துணைவந்த விநாயகரின் தனிச்சிறு



திருக்கோயிலும் வடப்புறத்தில் ஸ்ரீ சுப்பிரமணியர் தனிச்சிறு திருக்கோயிலும் கிழக்கு நோக்கி அமைந்துள்ளன.

முதலில் சைவமர பின் படி விநாயகரை வழிபடுவோம். பார்வதிதேவி பசு உருவில் இத்தலத்திற்கு வந்தபோது துணையாக வந்து அருள்புரிந்தவர் இவ்விநாயகப் பெருமான். அகில உலக நாயகனான சிவபெருமானிடம் இணைந்திருந்து துணை நிற்கும் உலகமாதாவான உமையம்மைக்கே துணைவந்த இவ்விநாயகரின் திருவடியை நாமும் தொழுது நமக்கும் துணை நின்று நம் துன்பங்களைத் தீர்த்தருளப் பிரார்த்திப்போம். உள்ளூர் மக்களின் பேரபிமானம் பெற்ற இக்கணபதியாருக்கு சங்கடஹர சதுர்த்தியிலும் ஆவணி விநாயகர் சதுர்த்தியிலும் மிகச்சிறந்த முறையில் உள்ளூர் மக்களின் வழிபாடு நடைபெற்று வருகிறது.

உள்ளூர் அன்பர்களும் வெளியூர் பக்தர்களும் தாங்கள் வாங்கும் புதிய வாகனங்களை இவ்விநாயகர் திருமுன்பு கொண்டு வந்து புதிய வாகனத்தின் சாவியை இத்துணைவந்த விநாயகரின் திருவடியில் வைத்து சிறப்பு வழிபாடு செய்து தங்கள் பயணத்திற்கும் 'துணை வந்து' அருள்புரிய இப்பெருமானை வழிபட்டு பயன் பெற்று வருகின்றனர் என்பது உள்ளூர் சிறப்புச் செய்தி.

**ஸ்ரீ சுப்பிரமணியர் திருக்கோயில்**

கிழக்கு கோபுரத்தின் வடபால் தனிக்கோயில் கொண்டருளும் ஸ்ரீ சுப்பிரமணியப் பெருமான் புன்னகைத் தவழும் பொலிவுத் திருமுகத்துடன் அருள்பாலிக்கிறார். முருகன் என்றாலே அழகு என்றுதானே பொருள். இந்திராதி தேவர்களும் அகத்தியர் முதலான முனிவர்களும், முசுகுந்தன், பராந்தகசோழன், சேரமான் பெருமாள், வரகுணபாண்டியன் ஆகிய மன்னர்களும் இம்முருகனை வழிபட்டு நற்பேறடைந்த தாகத் தலபுராணம் கூறுகிறது. ஸ்ரீ வள்ளி தெய்வயானை





அம்மன்களுடன் அருள்தரும் இம்முருகப் பெருமானுக்கு நாள்வழிபாடும், வாரந்தோறும் செவ்வாய்க் கிழமைகளிலும், மாதந்தோறும் கார்த்திகைத் திருநட்சத்திரத்திலும், சஷ்டிதிதியிலும் சிறப்பு வழிபாடுகளும் நடைபெறுகின்றன. இவை தவிர இத்தலத்தின் பெரு விழாவான ரதசப்தமியிலும், ஐப்பசி ஆறுநாள் சஷ்டித் திருநாள்களிலும் சிறப்பு அபிஷேக ஆராதனைகளும் சிறப்புற நடந்து வருகின்றன.

**அருள்மிகு ஆதி கோமுத்தீசுவரர்**

கோபுர வாயிலைக் கடந்து உள்ளே சென்றால் வலப் பக்கம் அழகிய சோலையில் ஸ்ரீ ஆதிகோமுக்தீசுவரர் திருக்கோயில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது. இச்சிறு கோயிலில் தெய்வாம்சம் நிறைந்த இலிங்கவடிவினராய் ஆதிகோமுக்திநாதர் அருட்பொலிவுடன் காட்சி அருளுகிறார். இவ்விறை வனுக்கு நேர் எதிரே தலவிருட்சமாகிய 'படர்அரசு' மரம் அமைந்துள்ளது.இந்த ஆதிநாதனை, ஆவடுதுறை அரனை, போதியம்பலத்தாடும் புண்ணியனைக் கண்கள் களிகூர கருத்துள் இருத்தி வழுத்திடுவோம். இவ்ஆதி கோமுக்திஈசுவரர் திருக்கோயில் அளவில் சிறிதாயினும் புகழில் பெரிது; புகல்தல் அரிது. இக்கோயில் கருவறைக்கு வெளியே அர்த்த மண்டபமும் அதனை அடுத்து சிறு மண்டபமும் உள்ளன. இன்றும் இப்பெருமானுக்கு நாள் வழிபாடும் சிறப்பு வழிபாடும் நிறைவுற நடைபெற்று வருகின்றன.

**நால்வர் திருக்கோயிலும் நாகலிங்க மலர்ச்சிறப்பும்**

ஆதி கோமுக்தி நாயகர் திருக்கோயிலுக்குத் தெற்கே உள்ள நந்தன வனத்தில் மேற்கு நோக்கி சிறு கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலுள் கருவறையில் சைவ சமயக் குரவர்கள் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வரின் திருவுருவங்களும் காணப்படுகின்றன. இவ்வரிசை முறை மாறியிருக்கின்றது. ஞானசம்பந்தரும் சுந்தரரும் நடுநாயகமாக எழுந்தருளி இருமருங்கிலும் மாணிக்க வாசகரும் அப்பரும்



அருளுகின்றனர். தேவார மூவரால் பதிகம் பெற்றுள்ள இத்தலம். நால்வருக்கும் தனிக்கோயில் எழுப்பி சிறப்பித்துள்ளது. இச் சைவத் தமிழ் அருளாளர்களை வணங்குவோம்.

அக்கோயிலின் நேர் எதிரே உள்ள நாகலிங்க மரத்தையும் அதில் மலர்ந்துள்ள 'நாகலிங்க மலரினை'யும் கண்டு களிக்கலாம். நாகலிங்கப் பூவின் நடுவிலுள்ள பொகுட்டு சிவலிங்கமாகவும் அதைச் சுற்றிலும் உள்ள மகரந்தக் காம்புகளை முப்பத்து முக்கோடி தேவர்களாகவும் இதற்கு மேலே கவிழ்ந்து பரந்திருக்கும் பகுதியை ஆயிரம் தலைகளைக் உடைய நாகமாகவும் சுற்றிலுமுள்ள செவ்விய இதழ்களைப் பஞ்சாக்கர மந்திரமாகவும் கூறுவர். இறைவனுக்கு உகந்த மலர் இது.

**வரங்கள் தந்தருளும் வரசித்தி விநாயகர்**

இரண்டாவது இராஜகோபுர வாயிலில் நுழைவதற்கு முன் இடப்பக்கம் வன்னிமரத்தடியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ வரசித்தி விநாயகர் திருக்கோயிலுக்குச் சென்று அங்குள்ள விநாயகரை வணங்கி மகிழ்வோம். சித்திகளை வரமாகத் தந்தருளும் வரசித்தி விநாயகரை இவ்விடத்தில் ஸ்தாபித்து புதிதாகக் கோயில் எழுப்பித்து 1949ஆம் ஆண்டு செப்டம்பர் 14ஆம் நாளில் குடமுழுக்கு விழாவும் செய்தருளியவர்கள் இவ்வாதீனத்து இருபதாவது பட்டத்திலிருந்த ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள் அவர்கள். வன்னிமரத்து விநாயகர் தனிச்சிறட
பெரியோர்களின் கூற்று.

**தமிழகத்திலேயே பெரிய நந்தி**

நந்தி மண்டபத்தில் இறைவனை நோக்கி மிகப்பெரிய ரிஷபம் ( மகாநந்தி ) உள்ளது.. இதனைத் தருமவிடை என்று தலபுராணம் கூறுகிறது. இக்கல் நந்தியின் உயரம் 14 அடி 9 அங்குலம், அகலம் 11 அடி 3 அங்குலம், நீளம் 16 அடி 4 அங்குலம், சுற்றளவு 41 அடி 3 அங்குலம். இது தமிழகத்திலேயே மிகப்பெரிய கல்நந்தி

ஆகும். தனித்தனிக் கருங்கற்களினாலானது இந்நந்தி. இது தஞ்சை பெரியகோயிலில் உள்ள ஒரே கல்லாலான நந்தியை விடப்பெரியது (தஞ்சை கல்நந்தியின் உயரம் 12 அடி) நந்தித்தலம் எனப் போற்றப் பெறும் இத்திருவாவடுதுறையின் தனிச்சிறப்புகளில் இந்த 'மகாநந்தியும்' ஒன்று. 'வளர்ந்த நந்தியும் படர்ந்த அரசும்' என்பது இவ்வூர் மக்களிடம் வழங்கும் பழமொழி. இம்மகாநந்திக்கு ஒவ்வொரு பிரதோஷ வழிபாட்டின் போதும் திருக்கோயில் பெருவிழாவின் போதும் சிறப்பு அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன. பெருந் திரளான பக்தர்களின் ஈடுபாட்டுடன் (பங்களிப்புடன்) நடைபெறும் பிரதோஷ வழிபாடு இத்தலத்து தனிச்சிறப்புகளில் ஒன்று.

**பொற்காசுகள் தந்த புகழ்மிக்க பலிபீடம்**

இம் மகாநந்திக்கு பின்பக்கம் உயர்ந்த பலிபீடம் உள்ளது. இப்பலிபீடம் தொன்மை சிறப்பு வாய்ந்தது. சுமார் 1300 ஆண்டுகளுக்கு முன்னர் இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் எழுந்தருளிய போது அவரின் வேண்டுதலை ஏற்று இத்தலத்து இறைவன் ஸ்ரீ ஆவடுதுறை அரனார் பூதம் வாயிலாக ஆயிரம் பொற்காசுகள் நிறைந்த 'பொற்கிழி'யினை இப்பலிபீடத்தில் வைத்தருளினார். பலிபீடத்திலிருந்து பொற்காசுகளை எடுத்த திருஞானசம்பந்தர் அவற்றைத் தம் தந்தையாரிடம் கொடுத்து, "இப்பொற்காசுகள் மேலும் மேலும் வளரும், தாங்கள் கவலையின்றி வேள்விகளை விதிப்படி செய்வீராகுக" என்றருளினார்.

இவ்இறையற்புதச் செயலைச் சேக்கிழாரும் பிறரும் வியந்து போற்றுகின்றனர். இன்றும் இத்திருக் கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறும் ரதசப்தமிப் பெருவிழாவின் ஐந்தாம் திருநாளில் 'ஞானசம்பந்த சுவாமிகள் பொன்உலவாக் கிழி' பெற்று மகிழந்த ஐதீக விழா நடைபெறுகிறது. பூதம் இப்பலிபீடத்தில் பொற்

 

காசுகள் கொண்டுவந்து வைக்கும் பொழுது அப்புராண நிகழ்வு படிக்கப்பெறும். சிறந்த ஓதுவார் மூர்த்திகள் ஞானசம்பந்தரின் திருப்பதிகத்தினை ஓதுவதும், திருஞான சம்பந்த சுவாமிகள் அலங்கரிக்கப்பட்ட புதுப்பல்லக்கில் திருவீதியுலா எழுந்தருளுவதும் காணக்கண் கொள்ளாத் திருக்காட்சி. இவ்அருள் நிகழ்வை அகத்திருத்தி நாமும் இப்பலிபீடத்தைப் போற்றி மகாநந்தியை வழிபட்டு இத்தலத்து இறைவனை உள்ளே செல்வோம். நந்தியைக் கடந்து இரண்டாவது ராஜகோபுரத்தை நெருங்கும் போது இடப் பக்கத்திலுள்ள திருக்கோயில் அலுவலகத்திலிருந்து பணியாளர்கள் அன்புடன் அருகே வந்து நம்மை வழி நடத்தி உள் அழைத்துச் செல்கின்றனர்.

**திருமுறைக் கோயில்**

மூன்றாவது கோபுரவாயிலைக் கடந்து உள்செல்கையில் நுழைவாயிலில் வடப்பக்கத்து மேடையில் 'திருமுறைக் கோயில்' அமைக்கப்பட்டுள்ளது. அதனருகில் மெய்கண்டசாத்திரப் பெட்டகமும், பண்டார சாத்திரப் பெட்டகமும் உள்ளன. அத்தெய்வத் தமிழ்ப் பெட்டகங்களை வணங்கி நேரே அருளும் மாசிலாமணிப் பெருமானை இங்கிருந்தே தொழுது இடப்பக்கம் திரும்பி சிலாரூபமான மூன்று சூரியர்களையும் சுந்தரமூர்த்தி நாயனாரையும் வழிபட்டு தெற்குத் திருச்சுற்றுக்குச் செல்வோம்.

**அறுபத்து மூவரின் அருட்திருமேனிகள்**

தெற்கு பிரகாரத்தின் தென்புறத்தில் 63 நாயன்மார்களின் திருமேனிகள் உள்ளன. அந்த வரிசையில் முதலில் இடபதேவர், விசுவநாதர், விசாலாட்சி, மாணிக்க வாசகர், திருமுறைகண்ட விநாயகர், 63 நாயன்மார்கள், சேக்கிழார் (தொண்டர்சீர் பரவுவார்) உள்ளனர். இவ்விடத்தில் சேக்கிழாரின் திருவுருவம் ஆதீனக் கர்த்தரால் 15.09.1989ல் புதிதாக பிரதிட்டை செய்தருளப் பெற்றுள்ளது.





**புத்திரப் பேறு அருளும் செம்பொன் தியாகேசர்**

ஸ்ரீ தியாகேசப் பெருமான் கிழக்கு நோக்கி தனிச் சன்னிதியில் எழுந்தருளியுள்ளார். முசுகுந்த மாமன்னனுக்கு குழந்தைப் பேறு நல்கியருளியமையால் இவருக்குப் 'புத்திரத் தியாகேசர்' என்ற திருப்பெயரும் உண்டு. இத்தலத்தில் மாசிலாமணியீசர் முசுகுந்தருக்கு நர்த்தன மண்டபத்தில் வீதிவிடங்கராய் நர்த்தனம் செய்தருள் புரிந்தார். துறைசையில் திருவாரூர் காட்சியைத் தந்தருளினார்.

இத்தியாகேசர் திருச்சன்னிதியில் தினந்தோறும் இரவு இரண்டாம் கால பூசையின் போது பஞ்சபுராணம் ஓதுவார் மூர்த்திகளால் பாடப்பெறும். மேலும், அவ்வமயம்

*"நீர்கொண்ட செம்பொன் கமலமும் நீலமும் நீங்கரிய*
*வார்கொண்ட முல்லையும் கோங்கும் மென் காந்தளும் மல்கி ஒல்கிச்*
*சீர்கொண்ட ஆவடுதண்துறைச் செம்பொன் தியாகர் வெற்பில்*
*ஏர்கொண்ட தெய்வமலர்ப் பூங்கொடி ஒன்று எதிர்உற்றதே."*

எனத் தொடங்கும் தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் இயற்றிய திருவாவடுதுறைக் கோவைப் பாடல்கள் பாடப் பெறுகின்றன. இவ்வழக்கம் பல்லாண்டுகளாக இச்சன்னிதியில் நடைபெற்று வருகிறது.

ஆண்டுதோறும் ரத சப்தமிப் பெருவிழாவில் ஐந்தாம் திருநாளில் தியாகராசப் பெருமான் அடியார்கள் போற்ற அசைந்து அசைந்து வந்து நர்த்தன மண்டபத்தில் நர்த்தனம் புரிந்தருளும் திருக்காட்சி நடைபெறும். இப்பெருவிழாவின் 5,8,10ஆம் திருநாட்களில் தியாகேசருக்கு லவண்டை, சுற்று மத்தளம் போன்ற இசைக் கருவிகள் வாசிக்கப்பெறும். மனமார இப்பெருமானைப் போற்றி வழிபட்டு நற்பேறு பெறலாம். குழந்தைப் பாக்கியம் அற்றோர் இப்பெருமானுக்கு சிறப்பு வழிபாடு செய்து மனமுருக வேண்டிக் கொண்டால் புத்திரப் பேறு நிச்சயம் பெறுவர். இதுபோல் பலனடைந்தோர் பலர் உண்டு.



இத்தியாகராசர் பெருமான் சன்னிதியின் முன் மண்டபத்தில் வடக்கு புறத்தில் கிழக்கு நோக்கியுள்ள மெய்கண்டார், அருணந்தி சிவம், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவம் என்ற சந்தானக் குரவர் நால்வரையும் வணங்கி மகிழ்வோம். வெளிப்புற மண்டபத்தில் சன்னிதியின் இருபுறமும் உள்ள தூண்களில் வியாக்கிரபாத முனிவர், பதஞ்சலி முனிவர், சுந்தரமூர்த்தி நாயனார், பரவை நாச்சியார், முசுகுந்த மாமன்னன், அமைச்சர் ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன. இச்சன்னிதியின் நேர் எதிரே சுந்தரமூர்த்தி நாயனாரின் ஐம்பொன் திருமேனி தியாகேசரை நோக்கி கூப்பிய கரங்களுடன் காட்சியளிக்கிறது.

**ஸ்ரீ கன்னி விநாயகர்**

பிரகாரத்தின் கன்னிமூலையில் (தென்மேற்கு) ஸ்ரீ கன்னிவிநாயகர் எழுந்தருளியுள்ளார். இத்திசையை நிருதி மூலை என்பர். இப்பகுதிக்கு அதிபதி நிருதிதேவன். இவன் உலகத்தை அடைந்து இன்புற, இம்மூலையில் அமைந்துள்ள கன்னி விநாயகரை ( நிருதி கணபதி ) வழிபடவேண்டும். குலத்தாலும், செயலாலும், சொல்லாலும், எண்ணத்தாலும் இழிவானவர்கள் கூட, இக்கன்னி விநாயகரை மனமுருகி வழிபட மேன்மையடைவர் என்ற காசிகாண்டம் கூறுகிறது.

**ஞானாம்பிகையின் ஞானத்திருக்காட்சி**

அடுத்த சன்னிதியில் ஸ்ரீ ஞானாம்பிகை அருள்பாலிக்கிறார். ஞானத்தை வேண்டுவோரும், படிப்பில் முதன்மை பெற விரும்பும் மாணவர்களும் இவ்வம்பிகையை முறைப்படி வழிபாடு செய்து போற்றிடப் பேரறிவு பெறுவர். ஞானாம்பிகையைப் போற்றி ஞாலத்தில் புலமைபெற்று நீடுநல்வாழ்வு பெறுவோம்.

**இலிங்கத் திருமேனிகள்**

அடுத்துள்ள இலிங்க வடிவினர்களாகிய ஸ்ரீ காளத்தீசுவரப்பெருமானையும், ஸ்ரீ கொங்கணேசுவரப் பெருமானையும் வழிபட்டு, அன்னை அருள்தரு கொங்கணேஸ்வரியையும் போற்றி எதிர்ப்பக்கமுள்ள தென்முகக் கடவுளை வணங்கச் செல்வோம்.

**ஆலமர்ச் செல்வனின் அருட்திருக்கோலம்**

கருவறையின் தென்புறக் கோஷ்டத்திலுள்ள ஸ்ரீ ஆலமர்ச் செல்வனை அவர் புகழ் போற்றும் பாடல்களை பாடிப் பரவுவோம். இத்தட்சிணாமூர்த்தி பெருமான் அகத்தியருக்கு வெண்குட்ட நோயைப் போக்கி யருளியவர் என்கிறது தலபுராணம். சிவபெருமான் குருவடிவில் அமர்ந்து சின் முத்திரை யொடு நால்வர்க்கும் போதித்தருளும் திருமேனியைத் தரிசித்து அர்ச்சித்து வழிபடுவோர், குருதோஷங்கள் நீங்கி கோடி நன்மை பெறுவர் என்பது ஐதீகம். இத்தட்சிணாமூர்த்தி கோஷ் டத்தின் மேல் முகப்பில் நடராசப் பெருமான் நடனத் திருக்கோலம் கருங்கல் திருமேனியாக குடையுடன் அமைக்கப் பெற்றுள்ளது.

**அகத்திய முனிவரும் அழகிய விநாயகரும்**

தென்முகக் கடவுளின் கிழக்குப்புறமுள்ள கோஷ்டத்தில் அகத்தியர் திருமேனி அருளொழுக அமைந்துள்ள அற்புதக் காட்சியைத் தரிசித்து அடுத்துள்ள (கிழக்குப்புறம்) கோஷ்டத்தில் எழுந்தருளியுள்ள அழகிய விநாயகராகிய தல விநாயகரை வழிபடுவோம். இவ்விநாயகர் அகத்திய மாமுனிவருக்கு ஞானோபதேசம் செய்தருளியவர் என்பது தலப்புராணம் தரும் சிறப்புச் செய்தி. இக்கோஷ்டத்தின் மேலே வேள்வித் தீயின் முன்னர் மீனாட்சி அம்மனைத் திருமால், சிவபெரு மானுக்கு தாரைவார்த்து கைத்தலம் பற்றக் கொடுக்கும் சிறியளவிலான கருங்கல் புடைப்பு சிற்பங்கள்



நுணுக்கமானவை; அற்புதமானவை. அகத்தியர் தேவ கோஷ்டத்தின் மேலே சிவலிங்கத்தைக் கட்டியணைத்து வழிபடும் மார்க்கண்டேயரும், அவ்லிங்கத்தினின்று எழுந்தருளிய சிவபெருமான் தமது திருப்பாதத்தால் எமனை உதைத்தருளும் திருக்காட்சி சிறிய புடைப்புச் சிற்பங்களாகச் சிறந்து விளங்குகின்றன.

**மனமகிழ்வு தந்தருளும் மாசிலாமணிப்பெருமான்**

அழகிய லிங்கத் திருவுருவில் கோமுத்திப் பெருமான் அருள்பாலிக்கிறார். பார்வதிதேவி முதலான பலதெய்வங்களுக்கும் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மாமன்னர்களுக்கும் அருளிய கோமுத்தீசுவரரைத் தெரிசிக்கிறோம். சதுரவடிவிலமைந்த (19 அடி 6 அங்குலம் பக்க அளவு) கருவறையில் கம்பீரமாக கருணை புரிந்தருளும் மாசிலாமணியீசரை வழிபடுவோம்.

"நனவினும் கனவிலும் நம்பா ! உன்னை
மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்"

என்று திருஞானசம்பந்தரும்,

"அடைபவர் இடர்கள் தீர்க்கும் ஆவடுதுறை யனாரே" என்றும் "அஞ்சல் என்று அருள வேண்டும் ஆவடுதுறை உளானே" என்றும் "ஐயன் ஆவடுதண்டுறை யா! எனக் கையில் வெள்வளையும் கழல்கின்றதே" என்றும், "அருவாய வல்வினை நோய் அடையா வண்ணம் ஆவடு தண்டுறைஉறையும் அமரர் ஏறே" என்றும் போற்றிய திருநாவுக்கரசரும் ( அப்பரும் )

"ஆர்வத்தோடும் வந்து அடியிணை அடைந்தேன் ஆவடுதுறை ஆதி எம்மானே" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும் அன்பொடு அகம் குழைந்து போற்றிப் பரவிய ஸ்ரீ கோமுத்திப் பெருமானின் பொற்பாத மலரிணையை அவர் சன்னிதியில் நின்று நாமும் வழிபட்டுய்வோம்.

அர்த்த மண்டபத்திற்கு வெளியே உள்ள நந்தி மண்டபத்தில் சுவாமியை நோக்கி இரு ரிஷபங்கள் உள்ளன. முன்னது செம்பிலானது ; பின்னது கருங்கல்லா

லானது. இந்த இரு இடப தேவர்களுக்கும் மூலவருக்கும் இடையில் குறுக்கே பக்தர்கள் யாரும் செல்லக்கூடாது. இது திருக்கோயில் வழிபாட்டுப் பொதுநெறி.

நந்தி மண்டபத்தின் தென்புறச் சுவரில் இத்தலத்து திருஞானசம்பந்தர் பதிகமான "இடரினும் தளரினும் ..." எனத் தொடங்கும் பாடல்கள் பத்தும் கல்வெட்டுகளாக *01.02.95*ல் பதிக்கப் பெற்றுள்ளது. மேலும் அப்பரின் இத்தலப் பதிகமான "மாயிரு ஞாலமெல்லாம் ..." என்ற பதிகமும், சுந்தரமூர்த்தி சுவாமிகளின், "கங்கை ..." எனத் தொடங்கும் பதிகமும் உள்ளன.

**திருக்கோயிலின் உற்சவத் திருமேனிகள்**

இந்நந்தி மண்டபத்தின் வடப்புறத்தில் வரிசையாக உலாவரும் உற்சவமூர்த்திகள் எழுந்தருளியுள்ளனர். இடமிருந்து வலமாக முதலில் விநாயகர் (நின்றதிருக் கோலம்), சந்திரசேகரர் (அம்மனுடன்), சுப்ரமணியர் (வள்ளி, தெய்வானையுடன்), சண்டேஸ்வரர், அஸ்திர தேவர், பிரதோஷ நாயகர் (அம்மனுடன்) முத்துக்குமார சுவாமி (மயில் வாகனத்தில் அமர்ந்த திருக்கோலம், அருகில் நின்றவாறு வள்ளி, தெய்வயானை அம்மன்கள்), கல்யாணசுந்தரேசுவரர் (அம்மனின் வலக்கரத்தைத் தமது வலத் திருக்கரத்தால் பற்றியவாறு), திருமாளிகைத் தேவர் (நான்கு திருக்கரங்களுடன் அமர்ந்த திருக்கோலம்), பிட்சாடனர் (மான், பூதமுடன்), திருமூலர், திருநந்தி கேசுவரர் ( நின்ற திருக்கோலம் ) திருநாவுக்கரசர் (அப்பர்), மாணிக்கவாசகசுவாமிகள், திருஞானசம்பந்தர் (வலக் கரத்து ஆள்காட்டி விரலால் மேலே சுட்டியவாறு),சாஸ்தா (அய்யனார்), மாரியம்மன் (இரண்டு), பிடாரி ஆகிய தெய்வத்திருமேனிகளைத் தரிசித்து பக்தியுடன் இடப் புறமுள்ள கர்ணதுவார வாயிலாக அடுத்த சன்னிதிக்குச் செல்வோம்.

**சுப்பிரமணியராதி இறைத்திருவுருவங்கள்**

மேற்குப் பிரகாரத்தில் ஸ்ரீ முருகப் பெருமான்



வள்ளி, தெய்வானையோடு எழுந்தருளி அருள்பாலிக்கின்றார். இவர் நான்கு திருக்கரங்களுடன் தெய்வீக கலாம்சத்துடனும் காட்சி தந்தருளுகின்றார். இவரைப் பணிந்து போற்றி அருகிலுள்ள கலைமகள், மீனாட்சி, சொக்கநாதர், விசுவநாதலிங்கம், சேரலிங்கம், மகாலெட்சுமி ஆகியோரையும் தொழுது போற்றுவோம்.

### அணைத்தெழுந்த நாயகர்

திருவிளையாடல் நிமித்தமாகப் பசுவின் உருஎய்திய உமையம்மை இத்திருத்தலத்தை அடைந்துச் சிவலிங்கத் திருமேனியைப் பால் ஆட்டி வழிபட்டபோது சிவபெருமான் அம்மைக்கு அந்த உருவை நீக்கி பழைய உருவில் விளங்கச் செய்தார். அங்ஙனம் விளங்கிய அம்மையை அணைத்த திருக்கோலத்தினராய் இறைவன் முனிவர்களுக்கும் காட்சி அளித்தனர். இத்திருக்கோலம் அணைத்தெழுந்தநாயகர் என இத்திருக்கோயிலின் இரண்டாம் திருச்சுற்றில் வடமேற்கில் தெற்கு நோக்கியத் திருமுன்பு (சன்னிதி) உடையதாய் விளங்குகின்றது. இந்நாயகரை அர்ச்சித்து வழிபடும் தம்பதியர்கள் ஒற்றுமையோடு இல்லறத்தில் மேன்மை அடைவதோடு வாழ்வில் எல்லா நலன்களும் பெற்று இன்புறுவர் என்பது நடைமுறை உண்மை.

### எண்தோள் துர்க்கையும் சண்டேசுவரரும்

வடக்குப் பிரகாரத்தில் கருவறை தேவ கோஷ்டங்களில் பிரமனும் எண்கரத்து துர்க்கையம்மனும் காட்சியருகின்றனர். அருகில் தனிச் சிறு கோயிலில் சண்டிகேஸ்வரர் தெற்கு நோக்கி காட்சி தந்தருளு கின்றார். அவர் சன்னிதியில் நின்று மென்மையாக இருகை களையும் தட்டி, சிவவழிபாட்டுப் பலனைப் பூரணமாகப் பெற்றுய்யலாம். சண்டேஸ்வரர் சன்னிதியில் ஆடை களிலுள்ள நூல்களை எடுத்து இடுவதோ மிகச் சத்தமாக கைத்தட்டுவதோ, விரல்களால் சொடுக்குப் போடுவதோ

கூடாது. அவரது தியானத்திற்கு இடையூறின்றி வணங்குதல் வேண்டும்.

**ஆடல்வல்லானின் அற்புத அருட்திருக்கோலம்**

வடகிழக்குப் பகுதியிலுள்ள ஸ்ரீ ஆடல்வல்லானின் ஐம்பொன் திருவுருவத்தினை குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும் பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால் வெண்ணீறும் அணிந்தருளும் திருக்காட்சியைக் காணும் போது மனிதப் பிறவியும் வேண்டும் இம்மாநிலத்தே என்ற அப்பர் தேவார வரிகளை நினைந்து வணங்குவோம்.

**கோரூபாம்பிகையும் பிற தெய்வங்களும்**

கிழக்குப் பிரகாரத்தின் ஈசானத் திசையில் இத்தல வரலாற்றை வெளிப்படுத்தும் விதமாக உமையன்னை கோ (பசு) உருவத்தில் கோமுக்தீசுவரரை (லிங்கம்) பால் சொரிந்து வழிபடும் கோரூபாம்பிகையின் புடைப்புச் சிற்பம் உள்ளது. அதனருகே சோழலிங்கமும், சனி பகவானும் பைரவரும், பஞ்சலிங்கங்களும் சந்திர பகவானும், அருள்புரிகின்றனர். நுழைவாயிலின் தெற்கு பக்கத்தில் மேற்கு நோக்கி மூன்று சூரிய பகவான்கள் வரிசையாக அருகருகே வீற்றிருந்து அருளுகின்றனர்.

**உலகுபுரந்தருளும் ஒப்பிலாமுலையம்மன்**

ஒப்பிலாமுலையம்மன் என்பது இத்தலத்து இறைவி திருப்பெயர். 'அதுல குஜாம்பிகை' என்பது வடமொழிப்பெயர். இவ்அம்மனை கோவுருநாயகி, ஆவடுதுறை அன்னை, ஆவடுதுறையாள் என்றும் இலக்கியங்கள் போற்றுகின்றன. இவ்வம்மன் சுவாமி கோயிலுக்கு ஈசானத்திசையில் தனியே கோயில் கொண்டு அருள்பாலிக்கிறார். தெற்கு நோக்கிய சன்னிதியில் விளங்கும் இவ்வம்பிகை நின்றத் திருக்கோலத்தில் நான்கு கரங்களுடன் தெய்வாம்ச நிறைவுடன் அருளுகிறார். இவ்வம்மனுக்கு இடப்புறத்தில் பள்ளியறையும் வலப்

 

பக்கத்தில் ஆடிப்பூர அம்மன் சன்னிதியும் அமைந்துள்ளன. சன்னிதியில் உள்ள தூண்களில் இவ்வாதீன குருமகா சன்னிதானங்களின் திருவுருவங்களும் தம்பிரான் சுவாமிகளின் திருவுருவம் ஒன்றும் அழகிய வேலைப் பாடுகளுடன் கூடிய கற்சிலைகளாக உள்ளன.

"*மறைபுகழ் மரகத மணியை மாதவர்க்கு*
*இறைவியை இமையம் ஈன்றெடுத்தக் கன்னியைப்*
*பிறையணி அரனிடம் பெறும் பிராட்டியைத்*
*துறைசை வாழ் இறைவியைத் தொழுது இறைஞ்சுவாம்*"

என்ற இத்தலத்து இறைவியைப் பற்றிய துறைசைப் புராணப் பாடலை ஓதி இறையருள் பெறுவோம்.

**திருமூலரின் ஜீவசமாதித் திருக்கோயில்**

அம்மன் கோயிலின் எதிரிலுள்ள பிரகார நுழைவாயிலின் வழியாக அப்பிரகாரத்தை வலம் வரும் போது வாயு மூலையில் (வடமேற்கு) அமைந்திருக்கும் திருமூலநாயனாரின் ஜீவசமாதித் திருக்கோயிலைக் காணலாம். மூவாயிரம் ஆண்டு தவமிருந்து ஆண்டுக் கொரு பாடலாக மூவாயிரம் திருமந்திரப் பாடல்களை தந்தருளிய திருமூலரின் திருவுருவம் அவரின் ஜீவ சமாதியின் மேலேயே அமைக்கப்பட்டுள்ளது. கருவறை இடையாழி, அர்த்த மண்டபம், முன் மண்டபம், வெளி மண்டபம் என்ற அமைப்பில் உள்ள திருமூலரின் இத்திருக்கோயில் தியானம் செய்வதற்கு அமைதியான சூழலையும் திருமூலரின் நேரடி அருட்பார்வையும் பெற்றுள்ளது. திருமூலர் சன்னிதியில் இன்றும் உள்ளூர், வெளியூர் அன்பர்கள் பலரும் அமர்ந்து தியானம் செய்து பெரும் பயன் பெற்றுள்ளனர்; பெறுகின்றனர்.

# முசுகுந்த மாமன்னன் மகப்பேறு பெற்றமை

### வில்வத்தின் விசேஷம்

"யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை" என்ற எளிய வழிபாட்டு முறையைத் திருமூலர் கூறுகிறார். சிவனுக்கு உகந்த பச்சிலைகளில் மிகவும் உயர்ந்தது 'வில்வ இலை'. இதனை, 'பில்வதளம்' என்று வடமொழியில் கூறுவர். சிவபெருமானின் மூன்று கண்கள் போன்றுள்ள இவ்வில்வத்தின் மூன்று தளங்களிலும் இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி ஆகிய மூவரும் அதிதேவதைகளாக உள்ளனர். வில்வ மரத்திலும் வில்வ இலையிலும் மகாலெட்சுமி வாசம் செய்கிறாள்.

### ஏகவில்வம் சிவார்ப்பணம்

விதவிதமானஎத்தனை மலர்களால் அர்ச்சித்தாலும் வில்வதளத்தினால் சிவபெருமானைப் பூசித்தலுக்கு அவை ஈடாகா. சிவ வழிபாட்டிற்கு வில்வதளமே பிரதானம். ஒரு வில்வதளம் போதும் சிவனை மகிழ்விக்க. "ஏக பில்வம் சிவார்ப்பணம்" என்பது சாத்திரம்.

### வில்வார்ச்சனைப் பலன்கள்

தங்கள் இல்லங்களில் சிவபூசை செய்யாதவர்கள் அல்லது செய்ய இயலாதவர்கள் தம் கையாலேயே வில்வத்தைப் பறித்து அல்லது கிடைக்குமிடங்களில் வாங்கி, சிவாலயங்களில் கொடுத்துச் சிவனை வழிபட்டால் முற்பிறவிகளில் செய்த பாவங்களும் இப்பிறவியில் செய்த பாவங்களும் விலகும். அடுத்தப் பிறவியில் நற்கதி அடைவர். வாழ்கின்ற நாட்களில் சகல நன்மைகளும் வந்து சேரும் என்று ஆகமங்களும், புராணங்களும் கூறுகின்றன.

### வில்வத்தைப் பறிக்கக்கூடாத நாட்கள்

வில்வத்தைப் பறிக்கக்கூடிய நாட்கள் பறிக்கக்



கூடாத நாட்கள் என உண்டு. குறிப்பாக திங்கள் கிழமை, அமாவாசை, சதுர்த்தி, அஷ்டமி, நவமி, பௌர்ணமி, மாதப்பிறப்பு, பிரதோஷம் ஆகிய நாள்களில் வில்வம் பறிக்கக் கூடாது என்கிறது சாத்திரம்.

**மீண்டும் மீண்டும் பயன்படும் வில்வம்**

வில்வப் பத்திரங்கள் உலர்ந்து விட்டாலும் அவற்றைப் பூசைக்கு பயன்படுத்தலாம். ஒருமுறை பூசித்த வில்வமாயிருந் தாலும் (நிர்மால்யம்) மீண்டும் அவற்றைப் பயன்படுத்தலாம். இவ்வாறு பிற பத்ரங்களைப் பயன்படுத்தலாகா. இது வில்வத்திற்கே உரிய விசேஷம்.

**பார்த்தாலும் புண்ணியம்**

வில்வமரத்திற்கு 'ஸ்ரீ விருக்ஷம்' என்ற பெயரும் உண்டு. வில்வப் பழத்தினை 'ஸ்ரீபலம்' என்பர். வில்வ மரத்தைப் பார்த்தாலும், தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாலும் மிகவும் புண்ணியம். வில்வ மரத்தை வலம் வந்து வணங்குவது வழக்கம்.

**குரங்குக்கும் இரங்கியவர்**

வில்வத்தால் உள்ளன்போடு சிவபெருமானை அர்ச்சித்து வழிபட்டால் வேண்டிய வரங்கள் கிடைக்கும்; வளங்கள் நிலைக்கும். அறிந்தும் அறியாமலும் செய்த பாவங்கள் விலகும். வில்வ பத்ரம் அவ்வளவு சிறப்புடையது. செய்வது அறியாமல் வில்வ இலைகளைப் பிய்த்து சிவலிங்கம் மீதிட்ட குரங்குக்கு சக்கரவர்த்தி யாகப் பிறந்து சிறக்க அருளியவர் சிவபெருமான். அந்தப் புராணநிகழ்வு திருவாவடுதுறை தலத்தோடு தொடர் புடையது. விபரம் அறிவோமா? தொடர்ந்து படியுங்கள்.

**முசுகுந்த மாமன்னன் வரலாறு**

திருக்கயிலையில் ஒரு சோலையில் சிவபெரு மானும் உமாதேவியாரும் வில்வமரத்தின் அடியில்





வீற்றிருந்தார்கள். அங்கு இருந்த முசுக்கஞுள் (குரங்குகள்) ஆண்முசு ஒன்று வில்வத்தைப் பறித்துச் சிவபெருமான் மீதும் உமாதேவியார்மீதும் சொரிந்த வண்ணம் இருந்தது. உமாதேவியானவள் இதனைக்கண்டு சினந்தார். சிவபெருமான் உமாதேவியை நோக்கி, 'நம்மைப் பூசிக்கும் முசுவின்பால் சினம்கொள்ளற்க; அருள் செய்வதே தக்கது' என்றருளினார். உமாதேவியார் முசுவிற்கருள் புரிந்தார்; பெருமான் மெய்ஞ்ஞானம் கொடுத்தருளினார். ஞானம் பெற்ற முசு, வில்வ மரத்தினின்று இறங்கிவந்து வணங்கி தன்பிழையைப் பொறுத்தருளுமாறு விண்ணப்பித்தது. சிவபெருமான் முசுவை நோக்கி, "நாம் மகிழும் வில்வத்தைக் கொண்டு நம்மைப் பூசித்தனை; ஆகவே மனுவின் வழித்தோன்றி உலகமுழுவதையும் ஆள்வாயாகுக" என்று அருளினார். ஞானம் பெற்ற முசு, "அடியேன் மானுடப்பிறவியில் மயங்காவண்ணம் இம்முசுவின் முகத்தோடு பிறக்க வேண்டும்" என்று வேண்டியது. சிவபெருமானும் அருள் புரிந்தார். முசுவும் அரிச்சந்திரனது வழித் தோன்றலாகக் குரங்கு முகங்கொண்டு பிறந்தது; அதனால் முசுகுந்தன் எனப் பெயர் பெற்றது. இம் முசுகுந்தன் சோழநாட்டில் கருவூரிலிருந்து அரசாண்டனன்.

**ஆட்சி :**

இவன் ஆட்சி செய்யுங்கால் சூரபன்மன் ஆயிரத் தெட்டு அண்டம் யுகம் நூற்றெட்டுக் காயமதழி வின்றாகிக் கடவுளர்க் கலக்கண் செய்து ஆட்சிசெய்து வந்தனன். ஆகலின் இம்முசுகுந்தன் அந்தச் சூரபன்மனின் ஆணையை மீறுவதற்கஞ்சி ஆட்சிசெய்து வந்தனன். பின்னர் சூரபன்மன் ஆறுமுகப் பெருமானால் அழிந்தமை கேட்டுக் கவலை நீங்கி மகிழ்ச்சியுடன் இருந்தனன்.

**முசுகுந்தன் விண்ணுலகம் செல்லுதல் :**

ஒருசமயம் வலன் என்னும் அவுணன் விண்ணுலகத்தை முற்றுகை இட்டனன். இந்திரனால்



அவனை வெல்ல முடிய வில்லை. முசுகுந்தன் உதவியை இந்திரன் நாடினான். முசுகுந்தன் தேவருலகம் சென்று அவுணர் சேனைகளை அழித்தான். இந்திரன் வலாசுரனைத் தன் குலிசாயுதத்தால் கொன்றான் ; வலாரி எனும் பெயரை எய்தினான்; பின்னர், தனக்குத் திருமால் அளித்த தியாகேசப் பெருமானைப் பூசித்து வழிபட்டான்.

**முசுகுந்தன் தியாகரை வழிபடல் :**

இந்திரன் வழிபட்ட தியாகேசப்பெருமான் - சிவபெருமானும் உமாதேவியும் முருகப் பெருமானும் ஒருங்கியைந்து திருக்கயிலையில் வீற்றிருப்பது போன்று விளங்குவதை முசுகுந்தன் கண்டான்; 'முன்னர்க் கயிலையில் இந்த அருமைக்கோலத்தைக் கண்டு மகிழ்ந்தேன்; இம்மானுடப் பிறப்பில் மயங்கி மறந்தேனே' என்று வருந்தினான் ; பலவாறு துதித்தான். சிவபெருமான் கருணை கூர்ந்து (இந்திரன் கேளாவண்ணம்) முசுகுந்தனை நோக்கி, 'நீ நம்மை நிலவுலகத்தில் வைத்து வழிபடுவாயாக' என்று கூறி அருளினார். முசுகுந்தனும் தியாகேசரைத் தனக்குத் தருமாறு இந்திரனை வேண்டினான்.

"இது திருமாலால் அமைக்கப்பட்ட திருவுருவம் ; இதனை வழிபட்டுத் திருமால் மகப்பேறுபெற்றார்; இதனைத் திருமாலிடத்தினின்று பெற்று நான் பூசித்துவருகிறேன். இம்மூர்த்தியை நீ பெற விரும்பினால் திருமாலின் இசைவு பெறுக" என்றனன் இந்திரன். முசுகுந்தனும் திருமாலின் இசைவு பெற்றான். இந்திரனுக்கோ அம்மூர்த்தியை முசுகுந்தனுக்கு அளிக்க விருப்பமில்லை. ஆகவே அதுபோன்று ஆறு மூர்த்திகளைத் தேவ தச்சனைக்கொண்டு செய்வித்து முசுகுந்தனிடம் ஒவ்வொன்றாகக் கொடுத்தனன். முசுகுந்தன் பெற மறுத்தான். உண்மையான தியாகேசரை இந்திரன் கொடுத்தான். உடனே பெருமானும் 'நாம் உன்பால் வந்தோம்' என்று முசுகுந்தனிடம் கூற, முசுகுந்தன்

மகிழ்ந்தான். இந்திரனும் "யான் முன்னர் அளித்த அறுவரோடு இவரையும் நிலவுலகிற்குக் கொண்டுபோய்த் திருவாரூர் முதலாகிய தலங்களில் வைத்து வழிபடுக" என்று கூறினான்.

**ஏழு விடங்கத் தலங்கள் :**

முசுகுந்தன், நிலவுலகடைந்து திருமால் பூசித்த விடங்கரைத் திருவாரூர் வன்மீகப் பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலில் தாபித்தான். மற்ற ஆறு சோமாஸ்கந்த மூர்த்திகளையும் திருநாகைக் காரோணம், திருநள்ளாறு, திருக்காறாயில், திருக் கோளரியூர்(திருக்கோளிலி),திருவான்மியூர்(திருவாய்மூர்), திருமறைக்காடு என்னும் சிவத்தலங்களிலும் ஓரேநாளில் தாபித்து வழிபாடு செய்வித்துச் சிறப்புத் திருவிழாக்களை யும் நடத்தினான் என்பது கந்தபுராணம் தரும் எழூர்ச் செய்தி.

பிற்கண்ட வெண்பாவும் சப்தவிடங்கத் தலங்களைக் கூறும்.

"சீரார் திருவாரூர் தென்னாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயில் - பேறான
ஒத்ததிரு வாய்மூர் உவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம்"

என்ற பழைய வெண்பா பாடலொன்றும் இவ்ஏழூர்ப் பெயர்களைக் குறிக்கிறது.

**தலமும், விடங்கரும், நடனமும் :**

திருவாரூர் - வீதிவிடங்கர் - அசபா நடனம்.
திருநள்ளாறு - நகரவிடங்கர் - உன்மத்தநடனம்.
திருநாகைக்காரோணம் - சுந்தரவிடங்கர் - பாராவாரதரங்க நடனம்.
திருக்காறாயில் - ஆதிவிடங்கர் - குக்குடநடனம்.
திருக்கோளிலி - அவனிவிடங்கர் - பிருங்கநடனம்.
திருவாய்மூர் - நீலவிடங்கர் - கமலநடனம்.
திருமறைக்காடு-புவனிவிடங்கர்- ஹம்ஸபாதநடனம்.



உலகும் உலகத்திலுள்ள போகங்களும் தேகமும் நீர்க்குமிழி போலத் தோன்றி அழியும் எனத் திருவருளாலே முசுகுந்தன் அறிந்தான். மேலாம் வீட்டை அடைய விரும்பி ஒருநாள் விடங்கத் தியாகேசர் சன்னிதியில் போய்க் கை கூப்பித் தொழுது, "இந்தப் பூபாரத்தை யெல்லாம் சுமப்பதற்கு ஒரு புத்திரனை அடியேனுக்கு அருளி, என்னைத் தவஞானச் சிவபக்தர் கூட்டத்துடன் துணையாகச் சேர்த்து ஆட்கொள்ள வேண்டும்" என்று வேண்டினான்.

**துறைசை வளநகர் அடைதல்**

அன்று இரவு கனவிலே இறைவன் தோன்றி 'இன்னும் உன்னால் யாம் ஏற்றுக் கொள்ளும் பணி உள்ளது. ஆரூர் போலவே ஆவடுதுறையுளும் யாம் எழுந்தருளியுள்ளமையால் அத்தலத்தில் பணி செய்து வருங்கால் புத்திரனும் பெற்று மகிழ்வாய்' என்றருளினார்.

மறுநாள் கனவில் கண்டபடி ஆரூர்ப் பெருமானை வணங்கிப் பல சேனைகளுடன் கோமுத்தி என்று போற்றப்படும் திருவாவடுதுறை திருத்தலத்தின் எல்லையை அடைந்தான். கோமுக்தி தீர்த்தத்தில் நீராடி வெண்ணீறணிந்து, துணை வந்த விநாயகரை முன்னர் வழிபட்டு, கோபுர வாயிலைக் கடந்து அரசினை வலம் வந்தான். பெரிய திருவுருவாயமைந்த நந்தி தேவரைத் தரிசித்த முசுகுந்தன் மாசிலா மணிப் பெருமானின் சன்னிதிக்குப் போகும்போது உண்மை ஞான நோக்கத்தை முசுகுந்தனுக்கு இறைவன் அருளி மாசிலாமணிப் பெருமானே வன்மீக இலிங்கமாகவும், திருஆரூரே அருள் நிறைந்த ஆவடுதுறையாகவும், திருவாரூரைப் போன்றே காட்சி கொடுத்தருளி நர்த்தன மண்டபத்தின் நடுவில் நின்று வீதிவிடங்கராய் நடித்து மாசிலாமணி இலிங்கத் திருமேனியுள் மறைந்தருளினார். இத் திருக்காட்சிகளைத் தரிசித்து முசுகுந்தன் கூப்பிய கரத்துடன் ஆனந்தக் கண்ணீர் சொரிய நின்று போற்றித் துதித்தான்.

"போதகம் புரிவாய் போற்றி ! போதியம்பலத்தாய் போற்றி!
மாதவர்க் கரசே போற்றி ! மாசிலாமணியே போற்றி!
கீதமோ டுறையு நாகக் கிண்கிணிச் சரணா போற்றி!
மேதகு துறைசை வீதி விடங்கனே! போற்றி! போற்றி"

*(துறைசைப் புராணம்)*

மாசிலாமணிப் பெருமான் ஆகாயத்தினின்று அசரீரியாக, 'புத்திரப் பேற்றை இப்போது அளித்தோம். உனக்கு ஞானத்தைப் பின்னர் தருவோம். அதுவரை இத்துறைசையிலிருந்து நம்மைப் வழிபடுவாயாக' என்று அருளினார்.

முசுகுந்தன் தமது திருமாளிகையில் இரவு துயில் கொண்டு விடியற் காலையில் எழுந்து காவிரியில் நீராடி, திருநீறணிந்து திருக்கோயிலை வலம் வந்து தொழுது வந்தார்.

**முசுகுந்தன் நடத்திய ரதசப்தமி**

தை மாத ரதசப்தமிப் பெருவிழாவை (மகோற்சவத்தை)த் தாமே முன்னின்று நடத்தத் திட்டமிட்டு எல்லா நாட்டவர்க்கும் தூதுவர்கள் மூலம் செய்திகளை அனுப்பியும், திருக்கோயிலினை அழகு படுத்தியும் தானங்கள் பல செய்தும் பெருவிழாவைத் தொடங்கி வைத்தான்.

துறைசையினைக் காவல்புரியும் சாஸ்தா, காளி முதலான கிராம தேவதைகளுக்குப் பத்துநாள் திருவிழா வினைச் சிறப்பாக நடத்தி ஸ்ரீ மாசிலாமணிப் பெருமான் திருக்கோயிலில் திருக்கொடியேற்றம் நிகழச் செய்தான். காலையிலும், இரவிலும், ரிஷபம், சூரியன், சந்திரன், மஞ்சம் முதலானவற்றில் சந்திரசேகரரை எழுந்தருளச் செய்து வீதி வலம் நடத்தினான். ஐந்தாம் நாள் விழாவன்று தியாகராசர் ஆடுவதற்கு மகிழ்ந்து, அடியார்கள் போற்ற அசைந்து ஆடி நர்த்தன மண்டபத்தில் வந்து திருநடனம் ஆடினார். இப்படியாக ஆடிக்கொண்டே வசந்த மண்டபத்தை அடைந்து



சிம்மாசனத்தில் பெருமானை எழுந்தருளச் செய்து ஆதிசைவர்களால் செய்யப்படும் பூசையினைக் கண்டு களித்தான். ஒன்பதாம் திருநாளன்று திருவாரூரில் தியாகராசர் திருத்தேர் விழாக் கொள்வதைத் திருத்தேரில் பவனிவரச் செய்து பத்தாம் நாளில் தீர்த்தவாரியினைப் பாங்குற நடத்தினான். மாலையிலே தியாகராசர் இறைவியோடு எல்லோருக்கும் பேரின்பம் கொடுத்தற் பொருட்டுப் பந்தர்க் காட்சியையும் அருளி, தேவியோடு திருக்கோயில் சேர்ந்து அமர்ந்தார்.

**முசுகுந்தன் இறைவன் கழல் சேர்ந்தமை**

துறைசையில் நிகழ்ந்த ரதசப்தமிப் பெருவிழாவில் பங்கு கொண்டு திருப்பணிகளாற்றிய அரசர்கள், வேத விற்பன்னர்கள், ஆதிசைவர்கள் முதலானோர்க்குத் தக்கபடி சன்மானத்தை வழங்கினான்.

**புத்திரப்பேறும், சிவஞானப்பேறும்**

முசுகுந்தனுக்கு இறைவனும் திருவாரூரின் உணர்வை உண்டாக்கி ஆசிரியனாக வந்து ஆட்கொண்டு மூலத்தானத்து இலிங்கத்தில் மறைந்தருளினார். பின்னர் தன் பட்டத்தரசியுடன் திருவாரூர் கோயிலையடைந்து வன்மீகநாதரைப் புகழ்ந்து பாடினான். தாம் அரண்மனையில் இருந்து வரும் நாளில் இறைவன் திருவருளால் எட்டு குழந்தைகள் வந்தடைய வடிவழகு வீரம், கருணை, ஒப்புரவு (நடுவு நிலைமை), கலை, அஞ்சாமை, அறிவு, ஊக்கம், பொறை, கொடை இவைகள் அனைத்தும் பொருந்திய மூத்த மகனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து உலகபாரம் அனைத்தையும் தமது மகனிடம் ஒப்படைத்து 'ஆட்சி செய்து வருக' எனக் கூறினான். பின்னர் சிவன் அடியார் கூட்டத்தில் சேர்ந்து இறைவனது திருவடிகளிலே கருத்தைச் செலுத்தி நிட்டை கூடி,ஆரூர் வாழும் இறைவன் கழலடி சேர்ந்தான்.

## திருமூலர் அருள்பெற்ற வரலாறு

திருமூலரின் வரலாற்றினை அவர் காலத்துப் பின் எழுந்த சைவ இலக்கியங்களாலும் திருமந்திர நூலிலுள்ள பாயிரப் பகுதிப் பாடல்களாலும் அறிகிறோம். திருமூலர் திருவாவடுதுறையில் வாழ்ந்த காலத்தின் பின் எல்லை கி.பி. 5ஆம் நூற்றாண்டு என்பர் ஆய்வாளர்கள். திருமூலர் காலத்துக்குப் பின் அவர் பெயரைக் குறிப்பிடும் முதல் இலக்கியம் சுந்தரரின் ‘திருத்தொண்டத் தொகை’ ஆகும்.

சேக்கிழாரின் பெரியபுராணத்து ‘திருமூலநாயனார் புராணம்’ என்ற பகுதியிலுள்ள 28 பாடல்களும், திருவாவடுதுறை ஆதீனத்து சாத்திரம் சாமிநாத முனிவரின் ‘துறைசைப் புராணத்தில்’ திருமூலரைத் தடுத்தாட் கொண்ட அத்தியாயம் என்ற பகுதியிலுள்ள 76 பாடல்களுமே திருமூலர் வரலாற்றை ஓரளவு முழுமையாகத் தெரிந்துகொள்ள உதவுகின்றன.

**கயிலாயத்து ஒரு சித்தர்**

திருநந்தி தேவரிடம் அருள்பெற்ற அணிமா முதலிய ‘அட்டமா சித்திகளை’ உடைய சிவயோகி ஒருவர் (திருமூலர்) திருக்கயிலையிலிருந்து புறப்பட்டு அகத்தியரைக் காண தென்னாடு (தமிழகம்) வந்தார். வரும் வழியில் திரிவேணி சங்கமம், கங்கை, யமுனை, நருமதை, கோதாவரி ஆகிய புண்ணிய ஆறுகளில் நீராடி திருக்கேதாரம், பசுபதீச்சுரம், காசி, திருக்காளத்தி முதலிய தலங்களில் உள்ள பெருமானைத் தரிசித்து தென்னாடு அடைந்தார்.

தமிழகத்தில் திருவாலங்காடு, திருவண்ணாமலை, திருக்கழுக்குன்றம், காஞ்சிபுரம், சிதம்பரம், சீர்காழி, புள்ளிருக்கு வேளூர் (வைத்தீஸ்வரன் கோயில்), திருக்கடவூர், திருப்பனந்தாள், திருவிடைமருதூர் முதலான சிவத்தலங்களைத் தரிசித்து சோழநாட்டுச் சாத்தனூர் வந்தடைந்தார்.



**பசுக்கள் மீதுவைத்த பாசம்**

சாத்தனூரில் காவிரியின் தென்கரையில் 'மூலன்' என்ற இடையன் ஒருவன் இறந்து கிடந்தான். அருகில் அவன் மேய்த்து வந்த பசுக்கள் மேய்ப்பனின் பிரிவாற்றாமல் கதறிக் கொண்டிருந்தன.

இக்காட்சியைக் கண்ட அச்சிவயோகி, அங்குள்ள பசுக்களின் மீது இரக்கமுற்று தம் யோக சித்தியால் தமது உடலை ஓர் இடத்தில் மறைத்து வைத்துவிட்டு அம்மூலன் உடலில் தம்முயிரைப் ( பரகாயப் பிரவேசமாக ) பாய்ச்சித் திருமூலராய் எழுந்தார்.

**சாத்தனூரில் திருமூலர்**

பசுக்கள் மகிழ்ச்சியுடன் துள்ளிக் குதித்தன ; பின் மேய்ந்து மாலையில் வீடு திரும்பின. அப்பசுக்களுடன் சாத்தனூர் சென்றார் திருமூலர். அங்குள்ள ஊர்ப் பொது மடமொன்றில் இரவு தங்கினார். மூலனின் மனைவி தன் உறவினர்களுடனும் உள்ளூர் மக்களுடனும் அங்கு சென்று திருமூலரை அழைத்தாள். அதற்கு திருமூலர், "எம்மை நீங்கள் அறியமாட்டீர்கள் ; உங்களது தொடர்பு எமக்கு இல்லை ; செல்லுங்கள்" என்று விலக்கினார். அன்று இரவு அங்கேயே துயில் கொண்டார்.

**பழையவுடல் மாயம், புத்துடலில் யோகம்**

திருமூலரின் பழைய உடலைச் சிவபெருமான் பூதகணங்கள் வாயிலாக எடுத்துவரச் செய்து, திருவாவடு துறைப் போதிவனத்து வாயுமூலையில் அருட்பூரணத்தில் கலப்பித்தருளினார்.

மறுநாள் அவ்வூர் மக்கள் மற்றும் மூலன் மனைவியிட மிருந்தும் விலகிச் சென்று, தான் ஏற்கனவே மறைத்து வைத்து இடத்தில் தன் பழைய உடலைத் தேடினார். அது (எங்கும்) காணக் கிடைக்கவில்லை. வருத்தமுற்று "இதுவும் இறைவன் திருவருளே" என நினைந்து திரும்பி வந்து சாத்தனூர் மடத்திலேயே அமர்ந்து யோகம் மேற்கொண்டார்.





அப்போது அவரது யோகத்தில் சிவபெருமான் வியாபகமாய்த் தோன்றி, "இந்த உடலே உனக்கழகாம். திருமந்திரம் கூறி நவகோடி சித்தருடன் இங்கிரு" என்றருளினார்.

**திருவாவடுதுறையில் திருமூலர்**

தெளிவுற்ற திருமூலர் திருவாவடுதுறை திருக்கோயில் வந்தார். அங்கு அகத்தியர், போகர் முதலானோர் எதிர் கொண்டழைத்தனர். திருமூலர் கோமுத்தித் தீர்த்தம் நீராடி, திருநீறு அணிந்து உருத்திராக்க மணி வடங்கள் பூண்டு காவியுடை உடுத்தி, கோமுத்தி ஈசுவரர், ஒப்பிலாமுலையம்மை, விநாயகர், முருகன் ஆகியோரை வணங்கிப் போற்றினார்.

பின்னர் அவ்வரசவனத்தின் வாயு மூலையில் ஒரு அரசமரத்தின் கீழிருந்த மேடையில் கிழக்குத் திசை நோக்கி, கைகளைத் தன் தொடை மீது மேல்நோக்கி மலர்த்தி வைத்து கண்கள் மூக்கின் நுனியைப் பார்க்க, பத்மாசனத்தில் யோகம் புரியலுற்றார்.

**திருமந்திரம் மலர்ந்தது**

ஆண்டுக்கு ஒருமுறை யோகம் களைந்து கண்விழித்து, சரியை முதலான நான்கு வகை நெறிகளை யும் திருமந்திரமாகத் தமிழ்ப் பாடலை ஒவ்வொன்றாகக் கூற, அவற்றை அங்கிருந்த சீடர்களாகிய சித்தர் கூட்டம் சுவடிகளில் எழுதிவைத்தனர். இவ்வாறு 3000 தமிழ் மந்திரப் பாடல்களைக் கூறி 3000 ஆண்டுகள் இங்கிருந்தார்.

**சமாதித் திருக்கோயில்**

பின்னர் ஒரு ஐப்பசி - அசுவதி நன்னாளில் தாம் யோகிருந்த அவ்அரசமரத்தடியிலேயே ஜீவசமாதியாய் அமர்ந்தருளினார். அங்கிருந்த சித்தர்கள் கூட்டம் திருமந்திர நூலின் 'சமாதிக் கிரியை'யில் கூறியுள்ளவாறே திருமூலரின் திருஉடலை வைத்து அவ்விடத்திலேயே



சமாதித் திருக்கோயிலை எழுப்பித்து திருமூலரின் அழகிய கற்சிலையையும் பிரதிட்டை செய்தருளி அபிஷேக ஆராதனைகள் புரிந்து வழிபட்டனர்.

இன்றும் திருமூலரது ஜீவசமாதி அமைந்துள்ள இடத்தில் அழகிய சிறு தனிக்கோயிலும் முன்பக்கம் தியான மண்டபமும் உள்ளது. அமைதியான சூழலில் அமைந்துள்ள இத்திருமூலர் சித்தர் சமாதிக் கோயிலில் உள்ளூர் மற்றும் வெளியூர் அன்பர்கள் பலரும் வந்திருந்து தியானமும் யோகமும் திருமூலர் சன்னிதியில் செய்து மன அமைதி பெறுகின்றனர் என்பது நடைமுறை உண்மை.

மன்னராட்சிக் காலங்களில் 'திருமூலர் நாடகம்' இத்திருவாவடுதுறை திருக்கோயிலில் ஆண்டுதோறும் புரட்டாசி ரதசப்தமித் திருநாளில் நடைபெற்றதாக இக்கோயில் கல்வெட்டு தெரிவிக்கிறது.

**ஆதீனம் நடத்தும் திருமூலர் வழிபாடு**

திருவாவடுதுறை ஆதீனத்தின் நேரடி அருளாளுகையிலுள்ள இத்திருக்கோயிலில் ஆண்டு தோறும் தைமாதப் பெருவிழாவின் இரண்டாம் திருநாளில் 'திருமூலர் நாயனாரின் ஐதீகத் திருவிழா' பல்லாண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. அந்நாளில் திருமூலரின் (ஐம்பொன்) உற்சவத் திருமேனி திருவீதியுலா எழுந்தருளி, திருக்கோயில் வந்தவுடன் ஆவும் கன்றும் அருகிருத்தி (மூலன் உடலிலிருந்து பசுக்கள் மேய்த்ததன் நினைவாக) திருமூலர் வரலாறு படிக்கப் பெற்று திருமூலரின் திருமந்திரப் பாடல்களும் ஓதப் பெற்று வழிபாடுகள் நிகழும். இத்திருவிழாவில் பெருந் திரளான மக்கள் .கூடியிருந்து வழிபடுவர். அன்றைய தினம் ஆதீனத்தில் (குருபூசைப் பெருவிழாவின் 2ஆம் திருநாள்) திருமந்திரத்தில் சிறந்தார் ஒருவர்க்கு திருமூலர் நினைவாக சிறப்பு விருதும், ஒன்பதாம் திருநாளில்

திருமந்திர நூலில் ஒருபகுதி வெளியீடும் பத்தாம் திருநாளாகிய குருபூசை தினத்தில் திருமந்திரத்தில் தோய்ந்த மூதறிஞர் ஒருவருக்கு அறக்கட்டளை சார்பாக விருதும் ஸ்ரீலஸ்ரீ குரு மகா சன்னிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் ஆண்டுதோறும் சிறப்புற நடந்துவருகிறது.

திருமூலரின் குருபூசைத் திருநாளாகிய ஐப்பசி - சுவாதி நன்னாளில் திருமூலருக்குச் சிறப்பு அபிஷேக ஆராதனைகளும், ஆதீனப் பள்ளித் தமிழாசிரியப் பெரு மக்களால் திருமந்திர முற்றோதலும் திருவாணையின்படி செவ்வனே நடைபெறுகிறது. திருமூலர் ஞானசமாதித் திருக்கோயிலில் திருமூலர் சன்னிதியில் புதிதாக தியான மண்டபம் ஒன்று எழுப்பிக்க மகா சன்னிதானம் அவர்கள் திருவுளம் கொண்டுள்ளார்கள்.

**ஆதீனத்தின் திருமந்திரப் பதிப்புகள்**

திருமூலரின் திருமந்திர ஓலைச் சுவடிகள் இவ்வாதீன 'சரஸ்வதி மகால் நூல் நிலையத்தில்' பாதுகாக்கப் பெற்று வருகின்றன. திருமந்திர நூல் முழுமைக்கும் 'பஞ்சாக்கர தீப உரை' எனும் பெயரில் ஆதீன மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர்களால் விரிவுரை எழுதப்பெற்று தனித் தனி நூல்களாக (ஆதீன வெளியீடு) வெளிவந்துள்ளன. ஆதீனத்தின் இத்திருமந்திரப் பேருரை நூல்களே சைவப் பேருலகில் இன்றளவும் பெரிதும் போற்றப் பெறுகின்றன. திருமந்திரம் தொடர்பாக 85க்கும் மேற்பட்ட நூல்கள் ஆதீன வெளியீடுகளாக வெளிவந்துள்ளன.

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்" எனக்கொள்கை விளக்கம் தந்தருளிய திருமூலநாயனார் "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற உலகளாவிய உயர் சிந்தனையுடன் திருமந்திர நூலினை அருளியுள்ளார்.



திருப்பெருகும் சிவஞான நூலான திருமந்திர நூலினை அனைவரும் பொருளறிந்து படித்து பயன்பெற வேண்டும் என்பதை

மூலன் உரைசெய்த மூவாயிரம் தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந்து ஓதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவர் அன்றே.

என்ற திருமந்திரப் பாடல் நமக்குணர்த்துகிறது.



திருமூலர்

# திருமாளிகைத் தேவர் அருள் வரலாறு

'நவகோடி சித்தர்புரம்' என்ற பெயரையுடைய இத்தலத்தில் போகநாதர் என்னும் சித்தர் ஞானயோக சாதனை செய்து மகிழ்ந்திருந்தார். இவரது சீடர்களில் ஒருவர் திருமாளிகைத் தேவர். இவரோடு உடன் உறைந்த போகருடைய சீடர்களில் கருவூர்ச் சித்தரும் ஒருவர். திருமாளிகைத் தேவர் சைவ வேளாண்குலத்தினர். சோழ மன்னர்களின் தீட்சா குருவாக விளங்கியவர். திருவிடைமருதூரில் வாழ்ந்துவந்த பரி ஏறும் பெரியோர், தெய்வப் படிமப்பாதம் வைத்தோர், மாணிக்கக் கூத்தர், குருராயர், சைவராயர் எனப்படும் ஐந்து கொத்தாருள் ஒருவரான சைவராயர் வழியில் தோன்றியவர். இவர் தம் முன்னோர்கள் வாழ்ந்த மடம் மாளிகை மடம் (பெரிய மடம்) எனப்படும். அம்மடத்தின் சார்பால் இவர் திருமாளிகைத் தேவர் எனப்பட்டார் என்பர்.

**சிவப்பிரசாதச் சிறப்பு**

போகர் திருமாளிகைத்தேவர்க்கு நடராசப் பெருமானைப் பூசைசெய்யும் செயல் முறைகளையும், கருவூர்த்தேவர்க்கு பராசக்தியைப் பூசைசெய்யும் விதிமுறைகளையும் உபதேசித்தார். திருமாளிகைத் தேவர் தாம் பூசித்த நிர்மாலியத்தை கருவூர்த் தேவருக்குக் கொடுக்க அதனை அவர் வாங்கி உண்டார். அவ்வாறே கருவூர்த்தேவர் தாம் அம்பிகையைப் பூசித்த நிர்மாலியத்தைத் திருமாளிகைத் தேவருக்குத்தர அவர் அதனை வாங்க மறுத்தார். கருவூர்ச்சித்தர் இதனை அறிந்து மனம் சலித்துப் போகரிடத்தில் நிகழ்ந்ததைக் கூறினார். போகர் "திருமாளிகைத் தேவர் செய்ததே சரி என்று கூறி இறைவனைப் பூசிக்கின்ற பூசையே மிகச் சிறந்தது; அவர் நீர்தந்த பூசைப் பொருளை ஏற்றுக் கொள்ளாமலிருந்தது குற்றமில்லை" என்று கருவூர்த் தேவரைத் தேற்றினார். கருவூர்ச்சித்தர் தமது குரு

 

நாதருடைய உரையைக் கேட்டுத் தெளிந்து போகரையும் திருமாளிகைத் தேவரையும் வணங்கி அவர்களோடு உடன் உறைவார் ஆயினார்.

**தேவர் தொழுத போகர் திருவடி**

ஒரு நாள் போகர் தம்முடைய பாதுகையைத் திருமாளிகைத் தேவரிடம் கொடுத்து இதனைப் பூசித்துக் கொண்டு இத்திருவாவடுதுறை தலத்திலேயே இருந்து அன்பர்களுக்கு அருள் வழங்குக என ஆணைதந்து, தான் அத்தலத்தை விட்டு திருப்புகலூருக்குச் சென்றார். திருமாளிகைத் தேவர் இத்தலத்திலேயே அடியார்கள் பலரோடு மாசிலாமணியீசர் கோயிலுக்குத் தென்புறம் திருமடம் ஒன்று அமைத்துக்கொண்டு தங்கியிருந்தார்.

**சேந்தனாரொடு சேர்ந்திருந்தார்**

ஒருநாள் சேந்தனாரோடு சிதம்பரம் சென்று திருவிசைப்பாப் பதிகங்களினால் ஞானமாநடேசனைத் தோத்தரித்து மீண்டும் திருவாவடுதுறைக்கு எழுந்தருளி மாசிலாமணி ஈசரையும் அம்பிகையையும் திருவிசைப்பாப் பதிகம்பாடிப் போற்றி இத்தலத்திலேயே தங்கியிருந்தார்.

**கொட்டுத் தவிர்த்த விநாயகர்**

திருமாளிகைத் தேவர் ஒருநாள் காவிரியில் நீராடி, பூசைக்குரிய நறுமலர்களை எடுத்துக்கொண்டு, திருமஞ்சனக் குடத்துடன் தம் திருமடத்திற்கு வந்து கொண்டிருந்தார். எதிரே சாப்பறை முழங்க இறந்தவர் ஒருவரின் உடலை, சுடலைக்கு எடுத்துக்கொண்டு பலர் வருவதைப் பார்த்தார். வழி குறுகியதாக இருந்தது. விலகிச் செல்வதற்கும் இடமில்லை. பூசை செய்யும் ஆசாரத்தோடு செல்லும் தமது தூய்மைக்கு இழுக்காகு மெனக் கருதி, திருமஞ்சனக் குடம் முதலியவற்றை ஆகாயத்தில் வீசி அங்கேயே அவைகளை நிற்கச்செய்து, வழியின் மேற்புறத்தில் எழுந்தருளியிருந்த பிள்ளை யாரைத் தோத்தரித்தார். பிள்ளையார் அருளால் பிணம்

உயிர்பெற்று நடந்து சென்றது. எல்லோரும் வியப்புற்றனர். இவ்வாறு இறந்தவரை எழுப்பித்தந்த அவ்விநாயகருக்குக் கொட்டுத் தவிர்த்த விநாயகர் என்ற பெயர் இன்றும் வழங்கிவருகிறது.

**எண்ணத்தில் பதிந்தவை எதிரில் தோன்றின**

திருமாளிகைத் தேவரை, பிள்ளைப் பேறு இல்லாத அந்தண மாதர்கள் தங்கள் மனத்தால் தியானித்து அவர் அருளால் மகப்பேறு அடைந்தனர். அவர்கள் பெற்ற குழந்தைகள் எல்லாம் திருமாளிகைத் தேவரைப்போலவே இருந்தன. அதனைக் கண்ட அந்தணர்கள் ஐயுற்று அக்காலத்தில் ஆட்சி புரிந்த காடவர்கோன் கழற்சிங்கன் (கி.பி. 825-850) என்னும் பல்லவ மன்னனின் சிற்றரசனான நரசிங்கன் என்ற தங்கள் மன்னனிடத்தில் சென்று முறையிட்டனர். அதைக் கேட்ட நரசிங்கன் சினந்து திருமாளிகைத் தேவரைக் கட்டி இழுத்து வருமாறு ஏவலர் சிலரை அனுப்பினான்.

அரசன் ஆணைப்படி அவரைப் பிணித்துவரச் சென்ற ஏவலர்கள் மதிமயங்கித் தங்களில் ஒருவரை ஒருவர் கயிற்றால் கட்டிக்கொண்டு அரசனை அடைந் தார்கள். அதைக் கண்டு மேலும் சினமுற்ற மன்னன், படைத்தலைவர்கள் பலரை அழைத்து தேவரைக் கொண்டுவருமாறு அனுப்பினான். வந்த படை வீரர்கள் ஒருவரை ஒருவர் வெட்டிக்கொண்டு மாய்ந் தொழிந்தார்கள். இதை அறிந்த மன்னன் நால்வகைச் சேனைகளோடும் தானே திருமாளிகைத் தேவர் மேல் படை தொடுத்து வந்தான்.

குழந்தை தாயிடம் சலுகை கேட்பதுபோலத் தேவர் ஒப்பிலாமுலையம்மையிடம் சென்று விண்ணப் பித்தார். அம்பிகை மதில் நந்திகளையெல்லாம் அழைத்து ஒரு நந்தியாக்கி நரசிங்க மன்னனை இழுத்து வருமாறு பணித்தாள். நந்திதேவரும் அவ்வாறே சென்று அரசனது படைகளையெல்லாம் அழித்து அரசனையும் அமைச்சர்



களையும் இழுத்து வந்து நிறுத்தினர். அரசன் திருமாளிகைத் தேவர் பெருமையை அறிந்து அவரை வணங்கிக் குற்றம் பொறுக்குமாறு வேண்டினான். திருக்கோயிலுக்குச் சென்று இறைவனைப் பணிந்து நின்றான். திருமாளிகைத் தேவரும் தன்னை வணங்கிய மன்னனுக்கு, அருள்புரிந்து இறைவன் திருவருளை எண்ணி வியந்து குருநாதர் திருவடிகளை வணங்கினார். அரசன் அருள்பெற்றுச் சென்றான்.

திருவாவடுதுறைப் புராணத்தில் திருமாளிகைத் தேவர் திறமுரைத்த அத்தியாயம் என்ற பகுதியில் இவ்வரலாறு கூறப்பெற்றுள்ளது. இவ்வரசன் வந்து வணங்கிய இடம் நரசிங்கன்பேட்டை என வழங்குகிறது. இவ்வரலாற்றுக்கேற்ப இன்றும் திருவாவடுதுறைத் திருக்கோயில் திருமதிலில் நந்திகள் இல்லை. பெருமான் திருமுன்புள்ள நந்தியின் உருவம் மிகப் பெரிய உருவத்தோடு விளங்குகின்றது.

**அற்புதங்களில் சில :**

1. திருமாளிகைத்தேவர் ஒருசமயம் சுடுகாட்டில் எரிந்துகொண்டிருந்த சவத்தின் புகையை நறுமணம் கமழும்படிச் செய்தார்.

2. கொங்கணவர் என்ற சித்தருடைய கமண்டலத்தில் என்றும் வற்றாத தண்ணீரை வற்றச் செய்தார்.

3. சிவபெருமானுக்கு நிவேதனமாகித் தமக்கு வந்த பயிற்றஞ் சுண்டலை தம் திருமடத்தில் பாத்திகட்டி விதைத்துப் பலன்பெறச் செய்தார்.

4. இவர் திருவீழிமிழலையில் இருந்த காலத்தில் அங்கு நடந்த தேர்த்திருவிழாவின் பொழுது மக்களால் இழுக்கமுடியாது ஓடாதிருந்த தேரினுடைய வடத்தைக் கழற்றிவிட்டுத் தானே அந்தத் தேரினை ஓடுமாறுச் செய்தார். இன்னோரன்ன அற்புதங்கள் அனைத்தையும் தொகுத்து தொட்டிக்கலை ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் அருளிய பாடல்.

குடங்கர் விசும் பிடைநிறுவிக் குணபம் நடந்
திட இயக்கிக் கொடிஞ்சிப் பொற்றேர்
வடங்கழற்றி ஓட்டிமதில் நந்திகளை
வரவழைத்து வரைநன் காட்டின்
உடம்பின்எழு புகைமாற்றிக் கொங்கணர் பாத்
திரம்சுவற்றி உணவ தாய்வெந்
திடும்பயறு முளைசெய்தெமக்(கு) அருள்திருமா
ளிகைத்தேவர் இணைத்தாள் போற்றி.

திருவாவடுதுறை ஆதீனத் திருமடத்துள் திருமாளிகைத் தேவருக்குத் தனிக் கோயில் உள்ளது. இவர் தம் குருவின் மீது இருந்த பக்தியின் காரணமாக அவரது திருவடியினைத் தம் முன்னே வைத்துத் தாம் அதன் பின் யோக நிலையில் அமர்ந்த காட்சியில், இவ்வாதீனப் பிரதம பரமாசாரியராக விளங்கும் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் திருக்கோயிலின் இடது பாகத்திலே தனித் திருக்கோயிலில் இருந்து இன்றும் அருள் புரிகின்றார். அவருடைய திருவுருவம் நான்கு திருக்கைகளோடு கூடியதாய் அமைந்துள்ளது. இவர் குருபணிவிடை செய்யவும், சிவபூசை செய்தற்பொருட்டும் தமது தவவலிமையால் வேறு இரண்டு திருக்கைகளை உண்டாக்கிக் கொண்டார் என்பது செவி வழிச்செய்தியாகும். கோமுக்தீசுவரர்க்கு உச்சிகால பூஜை முடிந்தவுடன் திருமாளிகைத் தேவர்க்கும் அச் சிவாச்சாரியாராலே அபிஷேக ஆராதனைகள் செய்விக்கப்படுகிறது. அதன் பின்னரே மடாலயத்தில் மகேசுவரபூசை நடைபெறுவது வழக்கமாக இன்றும் இருந்து வருகிறது. இம்மரபை மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் தனிப்பாடலால் நாம் நன்கு அறியலாம்.

பேசு புகழ்ச்சுப் பிரமணிய தேசிகன்பொன்
வீசு கழ்ற்கடியேன் விண்ணப்பம் - நேசம்



வருதிருமா ளிகைத்தே வன்பூசை யாயே
கருதுபந்தி யாதல்வழக் கம்.

**திருவிசைப்பாவில் நான்கு பதிகம்**

திருமுறைகளில் 9ஆம் திருமுறையாக விளங்குவது திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பன. இத் திருமுறையை அருளிச் செய்த ஒன்பது அருளாளர்களில் இவரும் ஒருவர் ஆவர். இவ்வொன்பதின்மரும் அருளியது திருவிசைப்பா ஆகும். இதன் பாடற்றொகை 288. திருப் பல்லாண்டு அருளியவர் சேந்தனார். (13 பாடல்களை அருளினார்) ஆக இத்திருமுறை 301 திருப்பாடல்களைக் கொண்டதாகும். திருமாளிகைத் தேவர் திருவிசைப் பாவில் நான்கு பதிகங்களை அருளிச் செய்தார்.

---

## அணைத்தெழுந்த நாயகர்

எல்லா உலகங்களுக்கும் தலைவனும் உலகியல் பொருள்களால் முழுவதும் அறிதற்கு அரிதானவனுமான சிவபெருமான் ஆன்மாக்கள் மீதுகொண்ட அளப்பெருங் கருணையினாலே எளிவந்த பிரனாகவும் திருவிளையாடல்கள் பல புரிந்து அருள்பாலிக்கின்றார். எம்பெருமானின் அருள் விளையாட்டுகளில் ஒன்று, திருக்கயிலையில் பெருமாட்டியுடன் சதுரங்கம் (சொக்கட்டான்) விளயைாடியருளியமை ஆகும்.

அக்களியாட்ட அருள் நிகழ்வில் பெருமாட்டியின் பெரும் பிழைகளாக பெருமான் கூறியருளப் பெற்றமை இரண்டு.

1. அகில உலக தலைவனாம் சிவபெருமானையே தாம் வெற்றி பெற்றுவிட்டோம் என்று அதீத மகிழ்வில்திளைத்து அலட்சியத்துடன் இருந்தமை.

2. உலகமெங்கும் நிகழும் ஒவ்வொரு அசைவிற்கும் மூலகாரணனாகவும் சாட்சியாகவும் சிவபெருமானே இருக்க, அவருடன் பார்வதி தாம் நிகழ்த்தியருளும் விளையாட்டிற்குச் சாட்சியாய் தம் சகோதரர் திருமாலை அழைத்து இவ்விளையாட்டிற்கு நீரே சாட்சி இரும் என உமையம்மை இருத்தியமை.

இவ்விரு பெரும்பிழைகளுக்குத் தண்டணையாக "மாடேபோ" என்று திருவாய் மலர்ந்தருளினார் சிவபெருமான். அந்த அளவிலேயே தெளிவுற்ற தேவியானவள், பெருமானிடம் பணிந்து இதற்கு மாற்றாக சாப விமோசனம் கேட்டருளினர். எம்பெருமானும் பூலோகத்திலுள்ள துறைசை (திருவாவடுதுறை) எனும் தலத்திற்குச் சென்று வழிபட்டால் உனது பசுவுரு நீங்கும் என்று அருளினார்.

அதன்படி காசியில் பசுவுருவில் தோன்றிய உமையம்மை அங்கிருந்து ஒவ்வொரு சிவத்தலமாகத் தரிசித்து வந்து இறுதியில் திருக்குளம்பியம் எனும் தலத்திற்கு வடக்கேயுள்ள துறைசை எனும் இத்தலம் வந்தடைந்தார். இத்திருத்தலத்து ஸ்ரீ மாசிலாமணிப் பெருமானை கோரூபாம்பிகையாகிய உமையம்மை மனமுருகி வழிபட்டார்.

உமையின் வழிபாட்டில் மகிழ்ந்து இறைவன் இறைவியின் பசுஉருநீக்கி பழைய திருவுருவில் அவரை அணைத்து எழுந்தருளினார். இத்தலத்திலேயே அணைத்தெழுந்த நாயகர் எனும் திருப்பெயர் கொண்டு உமையொடு இணைந்திருந்து தம்பதி சமேதராய் அருள்பாலிக்கின்றார்.

இன்றும் இத்திருக்கோயில் வந்து தம்மை வழிபடும் கணவன் மனைவியர்க்கிடையே எழும் கருத்து வேறுபாடுகளையும், பிரிந்து வாழும் தம்பதியரின் மனக் கவலைகளையும், அவர்கள் ஜாதகங்களிலுள்ள தோஷங்களையும் நீக்கி இல்லற வாழ்வை இன்பமயமாக்கி அருள்பாலித்து வருகின்றார் ஸ்ரீ அணைத்தெழுந்த நாயகர்.



சிவபெருமான் தேவியை அணைத்தெழுந்ததும் இத்தலத்திலேயே இத்திருக்கோலத்திலேயே இருந்ததும் மக்களின் இல்லறவாழ்வு சிறக்கவே என்ற குறிப்பை நாம் உணர்ந்து வழிபடவேண்டும். இன்றும் தங்களுக்குள் எழுந்த கருத்து வேறுபாடுகளில் உழன்று இன்னலுறும் தம்பதியர் இத்திருவாவடுதுறை திருக்கோயில் வந்து அணைத்தெழுந்த நாயகரைத் தொழுது அர்ச்சித்து மனமுருக வேண்டி நலம் பெற்று நிம்மதியுடன் வாழ்கின்றனர் என்பது கண்கூடு.

### அணைத்தெழுந்த நாயகர் துதி

பிணைத்த மலர்க் கொன்றைஅணி பெருமானை
அமரர்தொழும் பிரானை, உள்ளக்
கணைத் திறந்து மெய்க்காட்சி காட்டிஅன்பர்க்(கு)
அருள்புரிமாக் கருணை யானைப்
பணைத்த தனக் குவடேந்தும் இமயமலைப்
பசுங்கொடியைப் பதுமக் கையால்
அணைத்திருந்த நாயகனைத் தொழுதுபுகழ்ந்து
இருதுணைத்தாள் அகத்துள் வைப்பாம்.

- துறைசைப் புராணம்.



வளர்ந்த நந்தியும்

படர்ந்த அரசும்







## பூச நட்சத்திர அன்பர்கள் பூசிக்க வேண்டியத் தலம்

பசுவுருவில் இருந்த உலகநாயகி உமையம்மை இத்தலத்தில் தம் சாபம் நீங்கப் பெற்று பழைய உருப் பெற்றமை ஒரு பூசத்திருநாளில் ஆகும். ஆதலால் பூசநட்சத்திரத்தில் பிறந்தவர்கள் இத்தலத்து இறைவன் ஸ்ரீ மாசிலாமணிப் பெருமானை வழிபட்டு தங்களின் துன்பங்கள் நீங்கப் பெற்று மனமகிழ்வுடன் வாழலாம். மேலும் ஒவ்வொரு மாதமும் பூச நட்சத்திர நன்னாளில் இக்கோயிலில் வந்து சிறப்பு வழிபாடு செய்வித்து வணங்கும் அன்பர்கள் தாங்கள் வேண்டும் வரங்களைப் பெற்று மகிழ்வர் என்பதும் இத்தலத்து புராணம் தரும் தகவல்.

பூச நட்சத்திர அன்பர்களுக்குரிய மரம் அரச மரம். இம்மரம் பிறமரங்களுக்கெல்லாம் அரசனாகப் போற்றப் பெறுகிறது. ஒரு அரசமரத்தை நட்டால் அவர்களின் சந்ததியினர் அனைவருக்கும் சொர்க்க பதவி கிடைக்கும் என விருட்ச ஆயுர்வேதம் என்னும் நூல் கூறுகிறது. அரசமரம் ம்மழையைக் கவர்ந்திழுக்கும் ஆற்றல் வாய்ந்தது. நீருண்ட கார் மேகங்களைக் கவர்ந்து இழுக்கவே, வேள்விகளில் அரசங்குச்சி (அரசஞ்சமித்து) பயன்படுத்தப் படுகிறது. மரங்களில் நான் அரசமரமாக இருக்கிறேன் என்று கீதையில் கண்ணன் கூறுகிறார். இன்னும் பல கிராமங்களில் ஊர்ப் பொது சபை கூடுவது அரசமரத்தின் கீழேதான். நியாயமான தீர்ப்புகள் அரசமரத்தடியில்தான் வழங்கப்பட்டு வந்தன.

அரச மரம்! இந்தப் பெயரிலேயே தெரிகிறது மரங்களுக்கெல்லாம் இதுதான் அரசன் என்று. தெய்வத் தன்மையும் மருத்துவக் குணமும் ஒருங்கே கொண்ட இம்மரத்தை ‘அச்வத்த விருட்சம்’ என்பர் வடநூலார். அரச மரத்தின் தெய்வாம்சத்தை விளக்கும் ஸ்லோகம் ஒன்று உண்டு.



" மூலதோ பிரம்ம ரூபாய
மத்யதோ விஷ்ணு ரூபிணே
அக்ரத: சிவரூபாய
வ்ருக்ஷ ராஜாய தே நம :"

அரசமரத்தின் வேர்ப்பாகம் பிரம்மாவின் ரூபம்; நடுப்பாகம் திருமால் ரூபம் ; உச்சி சிவஸ்வரூபம், மும்மூர்த்திகளும் இம்மரத்தில் விளங்குவதால் அரசமரத்தை வணங்கி அனைவரின் அருளும் பெறலாம்.

அரச மரத்தைக் காலை ஒன்பது மணிக்குள் ஏழுமுறை வலம்வந்து வணங்குதல் சிறப்பு. இரவில் இம்மரத்தைச் சுற்றக் கூடாது. இம்மரத்தைச் சனிக் கிழமையில் மட்டுமே தொட்டு வணங்கலாம். பிற நாட்களில் தொடக் கூடாது. அரசமரத்தைச் சுற்றி வந்து வணங்கும் போது அக்காற்று நம்மீது படுகிறது. அரசமரக் காற்று ஆயுளை அதிகரிக்கும்; நோய்களைத் தீர்க்கும்; பாவங்களைப் போக்கும்.

குழந்தைப்பேறு வேண்டுவோர் அரசமரம் சுற்றிப் பயன்பெறுவது தமிழகத்து தொன்று தொட்ட வழக்கம். அரசமரத்தைப் போதி மரம் என்று கூறுவதும் உண்டு. திருமூலர் ஆண்டுக்கு ஒரு பாடலாக 3000 பாடல்கள் எழுதியது அரசமரத்தின் கீழேதான்.

திருவாவடுதுறை திருக்கோயிலில் உள்ள அரசமரத்தின் கீழே சிவபெருமானும் நடனத் திருக் கோலத்தில் நடராசப் பெருமானாகக் காட்சி தந்தருளினார். அதனால் போதியம்பலம் என்றொரு பெயரும் இத்தலத்திற்கு உண்டு.

இத்தகு சிறப்பு மிக்க அரச மரத்தைத் தல விருட்சமாகக் கொண்ட இத்தலத்திற்கு வந்து இப்புண்ணிய அரசமரத்தைச் சுற்றி வணங்கி வழிபட்டு நல்லருள் பெற்று நாளும் இன்புற்று அனைவரும் நல்வாழ்வு பெறுவார்களாக.





# நந்தித்தலம்

**நந்திகள் – மூவர்**

சிவபெருமானின் வாகனமாக விளங்குகின்ற எருது (ரிஷபம்) விற்கு நந்தி என்ற பெயரும் உண்டு. மிகப் பழங்காலத்தில் - புராணகாலத்தில் திருக்கயிலையில் சிவபெருமானைத் தரிசிக்கும் தேவர்களையும் பிறரையும் வாயிலில் சிவசொரூபத்தில் கைப்பிரம்புடன் நெறிப் படுத்தி அனுப்பும் நந்திகேசுவரரை நந்தி என்ற பெயரால் அழைப்பர். இவரை அதிகார நந்தி என்பர். இன்றும் சிவன் திருக்கோயிலில் கோபுரவாயிலின் உட்புறப்பகுதியில் சிலாரூபமாக அதிகார நந்தி எழுந்தருளி சிவதரிசனம் செய்யவருவோரை நெறிபடுத்தியருளுகின்றார்.

இது தவிர "நந்தி" என்ற பெயர் சிவபெருமானுடைய பல திருநாமங்களில் ஒன்றாகவும் அமைந்துள்ளது. "நந்தி (சிவபெருமான்) நாமம் நமச்சிவாயவே" என்ற திருமுறைத்தொடரே இதற்குச் சான்று.

ஆனால் பிற்கால வழக்கில் சிவபெருமானின் வாகனமான காளைமாட்டிற்கு (வெண்ஆண் பசு) நந்தி என்ற பெயர் வழங்கலாயிற்று. இந்த வாகனநந்தி சாதாரண எருது அன்று. இதற்கென தனி புராண வரலாறு உண்டு. காண்போமா ?

**தருமநந்தி**

மகாப் பிரளய காலத்தில் சிவபெருமான் உமையம்மை காணுமாறு பிரளயத் தாண்டவம் நிகழ்த்திக் கொண்டிருந்தார். எல்லா உலகங்களும் உயிர்களும் அப்பிரளயத்தில் ஒடுங்கிக் கொண்டிருந்தன. அப்போது இந்நிகழ்வைக் கண்ட தரும தேவதையானது தாமும் அழிந்து விடுவோம் என்றஞ்சி சிவபெருமான் திருமுன்னர் சென்று, "லோக நாயகனே! எல்லாப் பொருள்களும் உயிர்களும் அழிந்தாலும் தருமம் அழியாமல் காக்க வேண்டியது தங்கள் கடமையல்லவா! ஆதலால்



இப்பேரூழிக் காலத்தில் நான் அழிந்துவிடாமல் இருக்க, தேவரீர் , அடியேனுக்கு அருள்புரிய வேண்டும்'' என்று பணிந்து போற்றி நின்றது. பரம கருணாமூர்த்தியான சிவபெருமானும் அத்தரும தேவதையை ரிஷபமாக ஆக்கி தனக்கு வாகனமாக ஏற்றுக் கொண்டருளினார். இதனால் "ரிஷபாந்திக மூர்த்தி'' என்ற திருப்பெயரும் ஏற்றருளினார். இவ்வடிவம் சிவபெருமானின் 64 மூர்த்தங்களில் ஒன்றாகப் போற்றப்படுகிறது.

**மால் நந்தி :**

தேவர்களுக்கும் பிற உயிர்களுக்கும் பெரிதும் துன்பங்கள் கொடுத்து வந்த தாரகாட்சன், கமலாட்சன், வித்யூன்மாலி என்ற மூன்று அரக்கர்களின் பொன், வெள்ளி, இரும்பு கோட்டைகளை அழிப்பதற்காக, சிவபெருமான் போருக்குத் தயாரானார். தரும நந்தியாகிய ரிஷபத்திலிருந்து இறங்கித் தேரில் திருவடி வைத்தருளினார். அப்போது அத்தேர்க்காலின் அச்சு முறிந்தது. இதனைக் கண்ட திருமால் உடனே ஓடி வந்து தான் ஒரு ரிஷபமாக மாறி சிவபெருமானைத் தாங்கினார்.

அந்நிலையில் திருமாலுக்கு சிவபெருமானையே தாம் தாங்கி சுமக்கிறோம் என்ற ஆணவம் வந்தது. சிவனைத் தாங்குகின்ற சக்தி தன்னைத் தவிர வேறுயாருக்கும் கிடையாது என்ற எண்ணம் மேலோங்கியது. இதனை அறிந்த சிவபெருமான் திருமாலின் ஆணவத்தை அகற்றிட திருவுளம் கொண்டார். அதன் காரணமாக, சிவபெருமானின் பாரம் அதிகமாக, அது திருமாலை அழுத்த தொடங்கியது. ரிஷபவடிவில் இருந்த திருமாலின் வாய், மூக்கு, செவிகளில் குருதி கொட்டியது. கண்களும் உடலும் சோர்வடைந்து தள்ளாடி தடுமாறி வீழ்ந்தார். பின்னர் சிவனருளால் தம் தவற்றை உணர்ந்த திருமால் சிவபெருமானிடம் பணிந்து தம்மை மன்னித்து

அருள்புரியுமாறு வேண்டினார். பெருமானும் திருமாலுக்கு பழைய பலத்தையும் கம்பீரத்தையும் கொடுத்தருளினார். அதுமுதலாக அத்திருமாலின் ரிஷப வடிவத்தைத் தன் வாகனமாக ஏற்றுக் கொண்டு அம்மையப்பராக ரிஷபாரூட மூர்த்தியாகக் காட்சி கொடுத்தருளினார்.

**புராண தத்துவம் :**

இவ்வாறு தர்மத்தினையும், திருமாலையும் விடை (ரிஷப) வடிவில் தமது வாகனங்களாகச் சிவபெருமான் ஏற்றுக் கொண்டார். தருமநந்தியை வாகனமாக இறைவன் ஏற்றுக் கொண்டமையால் எல்லா உலகங்களும் அழிந்தாலும் தருமம் மட்டும் என்றும் அழியாமல் சிவபெருமானின் திருவடியிலேயே நிலைத்திருக்கும். தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வினாலும் தருமம் மறுபடி வெல்லும், அது என்றும் நிலைத்திருக்கும் என்ற இயற்கை மருமத்தை உணர்தல் வேண்டும் என்பதன்னையே இத்தருமநந்தி நமக்கு உணர்த்துகிறது.

திருமாலினை விடையாக (ரிஷப) வாகனமாக ஏற்றுக் கொள்ளும் புராணச் செய்தியால், சிவபெருமான் ஒருவரே முழுமுதற்கடவுள் என்பதும், திருமால் முதலானோர் பெருமானுக்குக் கீழே அடிபணிந்து பணிசெய்யும் தெய்வங்களே என்பதும் மிகுதியான ஆணவம் எக்காரணத்தாலும் எவ்வடிவில் வந்தாலும் அது தன்னைச் சேர்ந்தாரை அழித்துவிடும் என்பதும் அறிய முடிகிறது.

எந்த ஒரு புராணச் செய்தியையும் இறைவனின் பெருமைகளைக் கூறுவதாக ஏற்றுக் கொள்வதுடன், அப்புராணக் கதையிலிருக்கும் உண்மைத் தத்துவத்தையும் உணர்தல் வேண்டும் என்று திருமூலரும் தமது திருமந்திர நூலில் எடுத்துரைக்கின்றார்.

அதனால் நந்தியின் உண்மைத் தத்துவங்களை அறிந்து அதனை வழிபட்டு பயன்பெறுவோம்.



**துறைசை நந்தி :**

சிவபெருமானின் வாகனமாக விளங்கும் பேறு பெற்ற நந்தி சிவன் திருக்கோயில்களில் சிவன் சன்னிதிகளில் கருவறை நோக்கி அமர்ந்த நிலையில் காணப்படும். இவ்வகை நந்திகள் கோயில்களில் கற்களாலோ செம்பினாலோ அமைந்திருக்கும் தஞ்சை பெரிய கோயிலில் ஒரே கருங்கல்லினால் ஆன 12 அடி உயர நந்தி அமைந்துள்ளது. பிறகோயில்களிலும் கல்நந்திகள் உண்டு.

திருவாவடுதுறை அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயிலுக்கு நந்தித்தலம் என்றதொரு பெயரும் உண்டு. சிவபெருமானின் திருமுன்னர் கொடிமரத்தருகே உள்ள மகா நந்தி பெரிய திருவுருவம் உடையது. 14 அடி 9 அங்குலம் உயரம். தனித்தனி செவ்வக வடிக கருங்கற்களினால் எழுப்பப்பெற்ற இந்த நந்தி மற்றையத் தலங்களில் இல்லாதது. மற்ற நந்திகளை விட மிகச் சிறப்பு வாய்ந்தது. தமிழகத்திலேயே மிக உயரமான கல்நந்தி இதுதான்.

எல்லா சிவன் திருக்கோயில்களிலும் உள்ள மூலவர் இலிங்க வடிவில் எழுந்தருளுகின்றார். அந்தந்தத் தலங்களிலுள்ள இறைவர்க்கு தனித்தனிப் பெயர்கள் உண்டு. ஆனால் திருவிடைமருதூர் சிவன் திருக்கோயிலிலுள்ள மூலவர் "மகாலிங்கம்" என்ற திருப்பெயரில் அருள்பாலிக்கிறார். இவ்வாறு மூலவருக்கு (லிங்கத்திற்கு) லிங்கம் என்ற திருநாமம் வேறு எந்தத் தலத்திலும் கிடையாது. இவ்வாறு அமைந்தமைக்கு ஒரு காரணமும் உண்டு. திருவிடைமருதூர் தலம் மூலவர் தலமாகக் கொண்டு, ஒவ்வாரு பரிவாரத் தெய்வத்திற்கும் ஒரு தலம் என்ற அமைப்பில் இத்தலத்தைச் சுற்றியுள்ள திருக்கோயில்கள் அமைந்துள்ளன.

அந்தவகையில் திருவிடைமருதூர் (மத்தியார்ச்சுனம்) நடுநாயகமாக அமைய, அதற்குரிய நந்தித்தலமாக

இத்திருவாவடுதுறை திருத்தலம் அமைந்துள்ளது. அதனாலும் இத்தலத்து மகாநந்தி சிறப்புடையது.

மேலும் திருமாளிகைத் தேவருக்காக இத்தலத்து இறைவன் திருவருளால் இக்கோயில் மதில்களில் உள்ள நந்திகள் எல்லாம் உயிர்ப்பெற்று திருமாளிகைத் தேவருக்கு ஆதரவாகப் போருக்குப் புறப்பட்டு சென்றதாக இக்கோயில் தலப்புராணம் கூறுகிறது. அதனால் இன்றும் இக்கோயிலின் மதில்களில் நந்திகள் கிடையாது என்பது சிறப்புச் செய்தி. அந்த நந்திகளுக்கெல்லாம் உள்ள வலிமைகளைத் தாமே மொத்தமாக பெற்று பெரியநந்தி யாக வீற்றிருக்கிறது இத்தலத்து மகாநந்தி.

பிரதோஷ காலங்களில் நந்தியையும் நந்தியின் வழி சிவபெருமானை வணங்குவதும் பிரதோஷ வழிபாட்டு மரபு. அப் பிரதோஷக் கால வழிபாட்டிற்குரிய சிறப்புத் தலம் இத்திருவாவடுதுறை திருக்கோயில்தான். இங்கு பிரதோஷக் காலங்களில் தொடர்ந்து மூன்று முறை வந்து வழிபடுவோர் தங்களின் தோஷங்களிலிருந்து விடுபட்டு நல்வாழ்வைப் பெறுவர் என்பது நடைமுறை உண்மை.

**பிரதோஷச் சிறப்பு**

சிவாலயங்களில் பிரதோஷ கால வழிபாடு சிறப்புடைய்தாயினும், இத்தலத்தின் மாசிலாமணிப் பெருமானையும், நந்திபெருமானையும் அந்நாளில் வழிபடுவது மிகுந்த சிறப்புடையதாகும்.

**நஞ்சுண்ட நீலகண்டர்**

“பிரதோஷம் என்பது பாற்கடல் கடையப் பெற்ற நிகழ்ச்சியை ஆதாரமாகக் கொண்டுள்ளது. முன் ஒரு காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நீண்ட போர் ஏற்பட்டது. மரணத்தைத் தவிர்க்கும் அமிர்தத்தைப் பெற விரும்பினர். அதனால் மந்திர மலையை மத்தாகவும், வாசுகி எனும் பாம்பைச் கயிறாகவும் கட்டி வால்புறம்



தேவர்களும், தலைப்புறம் அசுரர்களும் நின்று பாற்கடலைக் கடைந்தனர். வாசுகித் துன்பம் தாங்காது விஷத்தைக் கக்கவும், அதே சமயத்தில் பாற்கடலில் நஞ்சும் வெளிவந்தது.

இரண்டு விஷங்களும் உலகத்திற்கே கேடு விளைவிப்பனவாக எழுந்தன. தேவர்கள் கயிலை நாதனிடம் இதனை முறையிட்டு, 'எங்களைக் காப்பாற்றியருள வேண்டும்' என முறையிட்டனர்.

சிவபெருமான் தேவர்களின் துயரம் களைய திருவுளம் கொண்டு தம்மிடம் பணி செய்து வருகின்ற சுந்தரரை நோக்கிப் பாற்கடலில் எழுந்த நஞ்சினைக் கொண்டு வருக எனக் கட்டளையிட்டார்.

சுந்தரரும் அவ்வாறே நஞ்சினைத் தமது கரத்திலே ஏந்திக் கொண்டு வந்து கொடுக்க, பெருமானார் அதனையே அமிர்தம் போல உட்கொண்டார். நஞ்சைத் தம் கண்டத்திலே நிறுத்தியதனால் நஞ்சுண்ட நீலகண்டர் எனப் போற்றப்பட்டார்.

**பிரதோஷ காலம்**

ஒவ்வொரு மாதமும் வளர்பிறை தேய்பிறை இவ்விரண்டு காலங்களிலும் வரும் திரயோதசி திதியில் சூரியன் மறைவதற்கு முன் உள்ள மூன்றே முக்கால் நாழிகையும், சூரியன் மறைந்த பின் உள்ள மூன்றே முக்கால் நாழிகையும் சேர்ந்த காலம் ( சுமாராக பிற்பகல் நாலரை மணி முதல் ஏழு மணி வரையில் உள்ள காலம் ) பிரதோஷ காலமாகும். எனினும், சூரியன் மறைவதற்கு முன் உள்ள மூன்றே முக்கால் நாழிகையிலுள்ள நேரமே சிவதரிசனத்திற்கு ஏற்றதென ஆன்றோர்கள் வகுத்துள்ளார்கள். திரயோதசி ஒரே நாளில் முழு அளவில் எப்போதும் வருவதில்லை. சில சமயங்களில் இரண்டு நாட்களிலும் திரயோதசி வருவதுண்டு. இத்தகைய சூழ்நிலையில் எந்த நாளில் பிரதோஷ வழிபாடு செய்யவேண்டும் எனத் தீர்மானித்துக் கொள்ளல் வேண்டும்.

சனிக்கிழமையில் வரும் பிரதோஷம் மிகுந்த சிறப்புடையது. சிவபெருமான் ஆலகால விஷத்தை உண்டது சனிக்கிழமையில்தான். பின்னர் கயிலையில் தேவர்களுக்கு அருள்பாலிக்க சந்தியா தாண்டவம் புரிந்தருளினார்.

**பிரதோஷ விரதம்**

பரம கருணாமூர்த்தியாகிய சிவபெருமான் தேவர்களுக்கு ஏற்பட்ட துன்பத்தை நீக்கிக் கயிலையில் மாலை (4.30 மணி முதல் 6.45 மணி வரை) பிரதோஷ வேளையில் தம்முடைய வாகனமான ரிஷப தேவரின் இரு கொம்புகளுக்கு இடையில் நின்று அம்பிகையும், தேவர்களும் காண திருநடனம் ஆடினார். இந்தத் தாண்டவத்திற்கு சந்தியா தாண்டவம் எனப் பெயர். ஆகவேதான் பிரதோஷ காலங்களில் நாம் திருக்கோயில் சென்று சிவபெருமானை வழிபடும் சமயம் நந்தியின் இரு கொம்புகளுக்கிடையே பெருமானைத் தரிசிக்கவேண்டும் என்பர்.

சிவ விரதங்களில் மிகச் சிறப்புடையது பிரதோஷ விரதமாகும். இதனை முறைப்படி மேற்கொள்வோர் துன்பங்களிலிருந்து நீக்கம் பெறுவர் என்பது உறுதி.

பிரதோஷ நன்னாளில் பிரதோஷ வழிபாடு முடித்துக் கொண்ட பின்னர் உணவு அருந்தும் வழக்கம் மேற்கொண்டால் போதுமானதாகும். கோயிலில் பஞ்சாட்சர செபம் செய்வதும், பஞ்சாட்சரப் பதிகத்தைப் பாராயணம் செய்வதும் முறையாகும்.

**சோமசூக்தப் பிரதட்சணம்**

முதலில் இடபதேவரைத் தரிசிக்க வேண்டும். அங்கிருந்து சண்டேசுரரைத் தரிசித்து சென்ற வழியே திரும்பி வந்து மீண்டும் இடபதேவரைத் தரிசிக்கும் முறையே சோமசூக்தப் பிரதட்சணம் எனப்படும். அருணகிரிப் புராணம், வலம்புரிச் சருக்கத்தில் கீழ்க்



கண்டவாறு இச்சோமசூத்திரப் பிரதட்சணமுறை விளக்கப்படுகின்றது.

தெரிசித்துதிட விடையைச் சென்றிடஞ் சண்டேசன்
திருவடியைத் தெரிசித்து மீண்டு திடவிடையைத்
தெரிசித்துச் சென்று வலஞ்சோம திசை சேர்ந்து
மீண்டிடபந் தெரிசித்துத் திகழ் சண்டனடியைத்
தெரிசித்துப் பராசத்தி யெனும் சோமஞ் சேர்ந்து
மீண்டு திறற் சண்டனடி தரிசித்து விடையைத்
தெரிசித்துச் சிவலிங்கந் தெரிசித்துப் பணிக
விதுசோம சூத்திரமொன் றனந்த பலஞ்செயுமே.

## ஸ்ரீ நந்தி அஷ்டோத்ரம்

| | | | |
|---|---|---|---|
| ஓம் நந்திகேசாய | நம : | ஓம் மத்த ஸ்ரும் ஹிணே | நம : |
| ஓம் ப்ரம்ம ரூபிணே | நம : | ஓம் ஹாட கேசாய | நம : |
| ஓம் சிவத்யான பராயணாய | நம : | ஓம் பை மகுணாய | நம : |
| ஓம் தீக்ஷ்ண சுகாய | நம : | ஓம் விஷ்ணு ரூபிணே | நம : |
| ஓம் வேத பாதாய | நம : | ஓம் பருத்வீ ரூபிணே | நம : |
| ஓம் விருபாய | நம : | ஓம் நிதீசாய | நம : |
| ஓம் வ்ருஷகாய | நம : | ஓம் சிவ வாஹநாய | நம : |
| ஓம் துங்க சைலாய | நம : | ஓம் குலப்ரியாய | நம : |
| ஓம் தேவ தேவாய | நம : | ஓம் சாருகாசாய | நம : |
| ஓம் சிவப்ரியாய | நம : | ஓம் ஸ்ருங்கிணே | நம : |
| ஓம் விராஜமாநாய | நம : | ஓம் நவத்ருணப்ரியாய | நம : |
| ஓம் நடநாய | நம : | ஓம் வேதசாராய | நம : |
| ஓம் அக்னிரூபாய | நம : | ஓம் மந்த்ரசாராய | நம : |
| ஓம் தனப்ரியாய | நம : | ஓம் ப்ருத்யக்ஷாய | நம : |
| ஓம் சித சாமர தாரிணே | நம : | ஓம் கருணாகராய | நம : |
| ஓம் வேதாங்காய | நம : | ஓம் சிவாய | நம : |
| ஓம் கனகப்ரியாய | நம : | ஓம் லலாம கலாகாய | நம : |
| ஓம் கைலாச வாஸிநே | நம : | ஓம் சிவயோகிநே | நம : |
| ஓம் தேவாய | நம : | ஓம் ஜலாதிபாய | நம : |
| ஓம் ஸ்தித பாதாய | நம : | ஓம் சாரூபாய | நம : |
| ஓம் ஸ்ருதிப்பரியாய | நம : | ஓம் வ்ருசேசாய | நம : |
| ஓம் ஸ்வேதோபவீதிநே | நம : | ஓம் சோமசூர்யாக்கினி லோசநாய | |
| ஓம் கிம்கிணி தராய | நம : | | நம : |
| ஓம் நாட்ய நந்தகாய | நம : | ஓம் சுந்தராய | நம : |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓம் | சோமபூஷாய | நம : | ஓம் | சின்மைத்ராய | நம : |
| ஓம் | ஸ்வவக்காய | நம : | ஓம் | நாசாசூத்ரிணே | நம : |
| ஓம் | கலிநாசனாய | நம : | ஓம் | சநதைசாய | நம : |
| ஓம் | சுப்ருகாசனாய | நம : | ஓம் | திலதண்டுல பக்ஷனாய | நம : |
| ஓம் | மஹாவீர்யாய | நம : | ஓம் | வாரநந்திநே | நம : |
| ஓம் | ஹம்சாய | நம : | ஓம் | சரசாய | நம : |
| ஓம் | அக்னிமயாய | நம : | ஓம் | விமலாய | நம : |
| ஓம் | ப்ருபவே | நம : | ஓம் | பட்டசுதாய | நம : |
| ஓம் | வரதாய | நம : | ஓம் | காலகண்டாய | நம : |
| ஓம் | ருத்ரரூபாய | நம : | ஓம் | சைலாதிநே | நம : |
| ஓம் | மதுராய | நம : | ஓம் | சிலமநசிநந்தநாய | நம : |
| ஓம் | காமிகப்ரியாய | நம : | ஓம் | காரணாய | நம : |
| ஓம் | விசிஷ்தாய | நம : | ஓம் | ஸ்ருதிபக்தாய | நம : |
| ஓம் | திவ்யரூபாய | நம : | ஓம் | வீரகண்டாதராய | நம : |
| ஓம் | உஜ்வலிநே | நம : | ஓம் | தநந்யாய | நம : |
| ஓம் | ஸ்வாலாநேத்ராய | நம : | ஓம் | விஷ்ணு நந்திநே | நம : |
| ஓம் | சம்வ்ரதாய | நம : | ஓம் | சிவஸ்வாலா க்ருபிணே | நம : |
| ஓம் | காலாய | நம : | ஓம் | பத்ராய | நம : |
| ஓம் | கேசவாய | நம : | ஓம் | அனகாய | நம : |
| ஓம் | ஸர்வதைவதாய | நம : | ஓம் | வீராய | நம : |
| ஓம் | வைதவண்ராய | நம : | ஓம் | த்ருவாய | நம : |
| ஓம் | சிவாசிநாய | நம : | ஓம் | தாத்ரே | நம : |
| ஓம் | சிந்மயாய | நம : | ஓம் | சாஸ்வதாய | நம : |
| ஓம் | ஸ்ரும்கபட்டாய | நம : | ஓம் | ப்ரதோஷப்ரியரூபிணே | நம : |
| ஓம் | ஸ்வேத சாமரபூஷாய | நம : | ஓம் | வ்ருஷாய | நம : |
| ஓம் | தேவராஜாய | நம : | ஓம் | குண்டலத்ருதே | நம : |
| ஓம் | ப்ருபா நந்திநே | நம : | ஓம் | பீமாய | நம : |
| ஓம் | பந்திதாய | நம : | ஓம் | சிதவர்ண ஸ்வரூபிணே | நம : |
| ஓம் | பரமேச்வராய | நம : | ஓம் | ஸர்வாத்மனே | நம : |
| ஓம் | நிரூபாய | நம : | ஓம் | ஸர்வவிக்யாதாய | நம : |
| ஓம் | நிராகாராய | நம : | | | |



ஸ்ரீ கோரூபாம்பிகை



## குருத்துரோகம் தீர்த்தருளிய கோமுத்திநாதர்

அக்னி தேவன் செய்த குருத்துரோகத்தினால் அவனுக்கு உடலெங்கும் புண்கள் உண்டாகி வயிறு வீக்கத்துடன் மிகவும் துன்பப்பட்டான். பலகாலமாக இந்நோய் அவனை வாட்டியது. இவன் மீது மனமிரங்கிய முனிவர்கள் 'துறைசை' நகர் சென்று கோமுக்திநாதரை வழிபடுதலே இந்நோய்க்குப் பரிகாரமாகும் என்று அக்னியிடம் கூறினர்.

அக்னிதேவனும் தம் மனைவியராகிய 'சுவதா', 'சுவாகா' என்ற இருவருடனும் இத்தலம் வந்தடைந்தான். முறைப்படி கோமுக்தித் தீர்த்தத்திலும் காவிரியிலும் நீராடி, கோபுர தரிசனம் செய்து கோபுர வாயிலில் வீற்றிருந்தருளும் துணை வந்த விநாயகரை வழிபட்ட நிலையிலேயே அக்னித் தேவனின் உடற்பிணிநீங்கி, குருத்துரோக வினையும் அகன்றது. பின்னர் மிகுந்த பக்தியுடன் ஒப்பிலா முலையம்மையையும் மாசிலாமணி ஈசரையும் தொழுது போற்றிப் பரவினர். இவ்வாறு இத்தலத்தில் மூன்று ஆண்டுகள் தொடர்ந்து தங்கி வழிபட்டு நற்பேறு பெற்றனர் என்று துறைசைப் புராணம் கூறுகிறது.

அதனால் தாம் பயின்ற ஆசிரியருக்கு அறிந்தோ அறியாமலோ செய்த தவறுகளுக்கும் குற்றங்களுக்கும் பரிகாரமாக இத்தலம் வந்து அம்மையையும் கோமுத்திநாயகரையும் முறைப்படி வழிபட்டால் அப்பாவங்கள் நீங்கும் என்பது ஐதீகம். இதற்கு அக்னித் தேவனே சாட்சி - சான்று.



ஸ்ரீ நடராஜப் பெருமான்

# வெண்தொழுநோய் நீக்கியருளிய வேதபுரத்து நாயகன்

திருவாவடுதுறை திருத்தலத்திற்கு 'வேதபுரம்' என்றொரு பெயரும் உண்டு. அசுரர்களை அழித்து தேவர்களுக்காக கோமுகாசுரனிடமிருந்து வேதங்களை மீட்டருளியதால் இத்தலத்திற்கு 'வேதபுரம்' என்ற பெயரும் வழங்கலாயிற்று.

வெண்தொழுநோயால் வேதனை உற்ற அகத்திய மாமுனிவர் தலங்கள் தோறும் சென்று சிவபெருமானை வழிபட்டு இறுதியாக வேதபுரமாகிய இத்திருவாவடுதுறை திருத்தலத்திற்கு வந்தார். முறைப்படி தீர்த்தமாடி இத்திருக் கோயிலை வலம் வந்து பரிவாரத் தெய்வங்களை வணங்கினார். பின்னர் கோமுத்திநாதர் திருமுன்பு பலவாறு துதித்து தன்குறை கூறிப் போற்றினார். இதனால் மனம் மகிழ்ந்த மாசிலாமணி ஈசர் தென்முகக் கடவுள் இருந்தருளும் இடத்தினைக் குறிப்பாலுணர்த்த, அகத்தியரும் தென்முகக் கடவுளைத் தொழுது தம் இன்னல்களை எடுத்துரைத்து அவற்றைக் களைய வேண்டி வழிபட்டார். இதனால் மகிழ்ந்த ஆலமர்ச் செல்வனார் அகத்தியரின் வெண்குட்ட நோயை நீக்கியருளினார். அகத்தியரும் அகம் மகிழ்ந்து போற்றினார்.

பின்னர் அழகிய விநாயகர் திருமுன்னர் சென்று அவர் திருவடி தொழுது நின்றார். சிவபெருமானின் அருளாணையால் அருள்மிகுந்த அழகிய விநாயகர், அகத்தியரின் தலைமீது தமது திருக்கரம் வைத்து திருவாக்கால் உபதேசித்துப் பாவகமும் செய்தார். பலவகை தீட்சைகளையும் செய்து அகத்தியரைத் தம் வலபால் இருத்த அவருக்குப் பஞ்சாக்கர மகிமையை விரிவாக எடுத்தோதி உய்யும் நெறிகாட்டியருளினார்.

உடலின் தோலில் வெண் புள்ளிகள் தோன்றி உடல் முழுதும் பரவி நிற்கும் வெண்தொழுநோய் உள்ளவர்கள்



இத்தலம் வந்து கோமுத்தீசுவரரை முறைப்படி வணங்கி தென்முகக் கடவுளாம் தட்சிணாமூர்த்திக்கு அபிஷேக, ஆராதனை, அர்ச்சனைகள் தொடர்ந்து செய்து வந்தால் வெண்குட்ட நோய் நீங்கும் என்பது இவ்வூர்ப் புராணம் தரும் செய்தி.

முந்தைய காலத்தில் இவ்வூரில் சித்தர்கள் பலர் வாழ்ந்து வந்தனர் என்றும் அவர்கள் மக்களின் நோய்களுக்கு மூலிகை மருந்துகளைக் கொடுத்து குணமாக்கினர் என்றும் குறிப்பாக வெண்குட்டத்திற்கு மருந்து தயாரித்து பலரையும் பயனடையச் செய்துள்ளனர் என்பதும் உள்ளூர் முதுமக்கள் கூறும் செய்தி. இன்றும் கூட இவ்வெண்தொழுநோய்க்கு மூலிகை மருந்து கொடுத்து இறையருளால் குணமாக்கும் வைத்தியர்கள் இவ்வூரில் உள்ளனர்.



ஸ்ரீ அணைத்தெழுந்த நாயகர்

# ஆவடுதுறைக் கோயிலின் அன்னதான வரலாறு

முன்னொரு காலத்தில் பிரம்மாவிடமிருந்து நான்கு வேதங்களையும் கோமுகாசுரன் கவர்ந்து சென்று கடலிலே ஒளித்துவிட்டான். அந்நாள் முதலாகப் பூலோகத்தில் மழை பெய்யவில்லை. தாவரங்கள் முதல் உயிர்கள் அனைத்தும் துன்பமுற்று வாடின.

திரு ஆவடுதுறை அரனார் கோமுத்திநாதர் இந்நிலைக்கு திருவுளம் இரங்கினார். கோமுகாசுரனை அழித்த கோமுக்திநாதர் நால்வேதங்களை மீட்டு உலகோர்க்கு உபதேசித்தருளினார். பின்னர் சனி, வருணன், இந்திரன் ஆகியோரால் மேகங்களை உண்டாக்கி மழை பொழியச் செய்தருளினார்.

இவ்வாறு சிவபெருமான் இடபவாகனம் ஏறி கோமுத்தித் தலமான திருஆவடுதுறை செல்லும் போது, இறைவன் திருமேனியில் தோன்றிய வியர்வைத் திருத்துளி பூமியில் விழுந்தது. உடன் அத்துளியானது ஒரு குழந்தையானது; சிகப்பான அக்குழந்தையை எடுத்து பூமிதேவி வளர்க்கலானாள். சிவப்பாக இருந்தமையால் 'செவ்வாய்' எனப் பெயர் பெற்ற அக்குழந்தை பூமாதேவியிடம் வளர்ந்து பெரியவனாகிறது.

தவவேடம் தாங்கிய செவ்வாய், திருவாவடுதுறை தலத்திற்கு வந்து 'இச்சா தீர்த்தத்திலே' நீராடி, துணை வந்த விநாயகரை வணங்கி, கோமுக்தீசுவரரையும் ஒப்பிலா முலையம்மையையும் தொழுது அரசவனத்தில் தவம் புரியலுற்றான்.

அப்போது பூமியில் மிக அதிகமாக கன மழை பெய்தது; பயிர்கள் அழிந்தன ; உயிர்கள் துன்புற்றன. முனிவர்களும் துறவிகளும் யாகம் முதலானவற்றை விட்டு ஸ்ரீ கோமுத்தீசுவரப் பெருமானைத் தரிசித்து மிகுதியான மழையை நீக்கியருளுமாறு மனமுருக வேண்டினர்.



அன்பர்களுக்கு திருவுளம் இரங்கிய கோமுக்தி ஈசர், அரசவனத்தில் தவம் புரியும் செவ்வாயை அழைத்து, "அன்பனே! உன் தவத்திற்கு மகிழ்ந்தோம். நீ நவக்கிரகங்களுள் செவ்வாய்க் கிரகமாகி, அதிகமழையை அடக்கி, மிதமாக பெய்யச் செய்து மக்களைக் காத்திடுக" என்று அருளினார்.

ஈசன் அருளியவாறே செவ்வாயும் இறைவனிடம் விடைபெற்று விண்ணடைந்து, 'வக்கிரன்' என்னும் செவ்வாய் பெயர் உடையவனாகி அதிக மழையைக் குறைத்து, நவக்கிரகங்களுள் ஒன்றாகி உருவமும் பெற்று விளங்கினான்.

செவ்வாய் அருள்பெற்ற திருவாவடுதுறையில் அவனுடைய நாளாகிய செவ்வாய்க்கிழமையில் அன்னதானம் செய்பவர்களுடைய பாவங்களை யெல்லாம் போக்கி நினைப்பனவற்றை நிறைவேற்றி அருள்புரிகிறார்.

### செவ்வாய்க் கிழமை அன்னதானச் சிறப்பு

ஆவடுதுறையில் செவ்வாய்க் கிழமையில் அன்னதானம்
கூவிநல் அடியார்க்கு ஈயில் கோடிபங்கு அதிகமாகும்
தூவிடை மாசிலாற்கும் துணை முலை ஒப்பிலாட்கும்
மேவு மங்களவாரத்து விரதத்தின் மகிழ்ச்சி மிக்காம்.

இவ்வாறு திருவாவடுதுறை திருக்கோயிலில் இத்தலத்து இறைவனை வணங்கி செவ்வாய்க் கிழமையில் விரதம் இருந்து 'அன்னதானம்' செய்பவர் கோடி புண்ணியம் பெறுவர் என்றும் இதனை ஒப்பிலா முலையம்மை உடனாகிய மாசிலாமணிப் பெருமானும் விரும்பி ஏற்பர் என்றும், இவ்விருவரும் செவ்வாய்க் கிழமை விரதத்தால் மிகவும் மகிழ்ந்து மக்களுக்கு வேண்டும் வரங்களை அளித்தருளுவர் என்றும் இவ்வூர் தலபுராணமான 'துறைசைப் புராணம்' 'செவ்வாய்க்கு அனுக்கிரகம் செய்த அத்தியாயம்' என்ற பகுதியில் 12 பாடல்களில் சிறப்பாக எடுத்துரைக்கிறது.

இன்றும் இத்திருக்கோயிலில் ஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் தினந்தோறும் அன்னதானம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இவ் அன்னதானப் புண்ணியக் கைங்கர்யத்தில் அன்பர்கள் பலரும் விருப்பத்துடன் பொருள் கொடுத்தும் புண்ணியம் பெறுகின்றனர்.

## 'ஆ' வணங்கும் ஆவடுதுறை

சைவ சமயத்தில் பசுவிற்குத் தனித்ததொரு இடம் உண்டு. விலங்குகளில் பசுவினைப் புனிதமுள்ளதாகக் கருதி வழிபடுவர். இப்பூவுலகத்திலும் கைலாயத்திலும் பசு சிறந்த முறையில் போற்றப்படுகிறது. ஆகமங்களில் பசுவின் பெருமை கூறப்பட்டுள்ளது போல் வேறு எந்த நூலிலும் கூறப்படவில்லை எனலாம். சைவசித்தாந்தம் உயிரினைப் பசு என்ற கலைச் சொல்லால் குறிப்பிடுகிறது.

### ஆ – ஐவகை

கயிலையில் சிவபெருமான் திருமுன்னர் உள்ள நந்தியைச் சார்ந்துள்ள பசுக்கள் ஐந்து. கபில வண்ணம் உடைய நந்தை, கருமை வண்ணம் உடைய பத்திரை, செவ்வண்ணமுடைய சுசீலை, விசித்திர வண்ணங் களுடைய சுமனை என்ற ஐந்து பசுக்களிலிருந்தே முறையே விபூதி, பசிதம், பஸ்மம், க்ஷாரம், ரக்ஷை என்னும் ஐந்து வகைப்பட்ட திருநீறு உண்டாயிற்று என பிருகஜ்ஜா பாலம் என்ற உபநிடதம் கூறுகிறது.

### தெய்வாம்சம் மிக்க பசு

பசுக்களின் அங்கங்களில் தேவர்களும் தெய்வங்களும் இருப்பதாக ஆகமங்கள் தெளிவாக எடுத்துரைக்கின்றன. பிரம்மாவும் திருமாலும் இரு கொம்புகளின் அடிப்பாகத்திலும், காவிரி முதலான புண்ணிய நதிகளும் சராசர உயிர் வர்க்கங்களும்

 

இருகொம்புகளின் நுனிகளிலும், தலையில் சிவபெருமானும், நெற்றியின் நடுவில் சிவசத்தியும், மூக்கின் நுனியில் முருகப் பெருமானும், மூக்கினுள்ளே வித்தியாதரர்களும், இரண்டு கண்களுக்கும் நடுவில் அசுவினி தேவரும், இரண்டு கண்களில் சூரியசந்திரரும், பற்களில் வாயு தேவனும், நாவில் வருண தேவனும், நெஞ்சில் கலைமகளும், கழுத்தில் இந்திரனும், முரிப்பு எனப்படுகின்ற கொண்டைப் பகுதியில் பன்னிரு ஆதித்தர்களும், நான்கு கால்களில் அனிலன் எனப்படும் வாயுதேவனும், முழந்தாளில் மருத்துவ தேவரும், குளம்பின் நுனிகளில் நாகர்களும், குளம்பின் நடுவில் கந்தர்வர்களும், குளம்பின் மேற்பகுதியில் அரம்பையர் களும், முதுகில் ருத்திரர்களும், குதத்தில் இலக்குமியும், ரோமங்களில் மகா முனிவர்களும் எல்லா அங்கங்களிலும் கற்புடைய மங்கையர்களும் பொருந்தியிருப்பதாக ஆகமங்கள் கூறுகின்றன.

**கோபூசை**

ஆன்மாக்களின் பொருட்டே சிவபெருமான் பசுக்களைப் பூமியில் பிறக்கச் செய்துள்ளார் என்று சாத்திரங்களில் கூறப்பட்டிருப்பதால் மனிதர்கள் நாள்தோறும் தாம் செய்யும் சிவ வழிபாட்டின் நிறைவில் கபிலபூசை எனப்படும் கோபூசை செய்தல் வேண்டும் என்று ஆகமங்கள் கூறுகின்றன. இன்றைக்கும் புதிதாகக் கட்டி குடிபுகும் வீடுகளில் முதலில் பசுவினைப் புது மனையில் உட்புகச் செய்த பின்னரே கிரகஸ்தன் உள்ளே செல்லுதல் என்பது வழக்கம். அதாவது எல்லாத் தெய்வங்களும் புதிய வீட்டின் உள்ளே சென்று சகல தோஷங்களை நிவர்த்தி செய்வதுடன் நிறைந்த செல்வங்களுடன் சிறப்புற விளங்கச் செய்யும் என்பது இந்நிகழ்வின் உட்கருத்து.





**'ஆ' வணங்கும் ஆவடுதுறை**

திருவாவடுதுறைக்கும் மாடுகளுக்கும் (எருது, பசு) நிறையவே தொடர்பு உண்டு. ஒரு காலத்தில் ஆக்கள் (பசுக்கள்) நிறைந்துள்ள ஆற்றுத் துறையாக இருந்தமையால் தான் ஆ அடுதண் துறை என இவ்வூர் வழங்கலாயிற்று. உமையம்மை 'ஆ' வடிவத்தில் இத்தலத்து இறைவனை வழிபட்டு அரனோடு அணைந்த மையாலும் ஆவடுதுறை எனலாயிற்று. திருமூலர் இத்தலத்திற்கு வந்தபோது ஆவினங்கள் நிறைந்திருந்தமைக் கண்டார்;அவற்றின் துயர்களைக் களைந்தார் என்றும் தலவரலாறு கூறுகிறது.

இத்தகு சிறப்பு மிக்க பசுக்களுக்கு அருள்புரியும் ஈசர் இத்தலத்து கோமுத்திநாதர். இப்பெருமான் பசுக்களுக்கு மட்டுமன்றி ஆண்பசுவாகிய காளைக்கும் (ரிஷபத்திற்கும்) இத்தலத்தில் அருள்புரிந்த வரலாறு உண்டு. அதனால் இவ்வூரிலுள்ள மக்களும் சுற்று வட்டாரத்தினரும் தங்கள் வீட்டு மாடுகளுக்கு நோய்கள் வந்தாலும், கன்று ஈனாதிருப்பினும் கோமாரி போன்ற மாட்டுநோய்கள் வந்தாலும் இக்கோயில் பெரியநந்திக்கு சிறப்புவழிபாடு நிகழ்த்தி பலன்பெறுகின்றனர்.





# கல்வெட்டுகள் காட்டும் கோமுக்தீசுவரர் கோயில்

பல நூறு ஆண்டுகளையும் கடந்து செய்திகளைத் தாங்கி நிற்பனவே கல்வெட்டுகள். இவை வரலாற்றுப் பெட்டகங்கள். குறிப்பாக, கோயில்களில் காணப்பெறும் கல்வெட்டுகள் குறிப்பிட்டக் கோயிலின் வரலாற்றுப் பழம்பெருமைகளையும் அக்காலத்து சமூக அமைப்பையும் பறைசாற்றும் கருத்துக் கருவூலங்கள். திருவாவடுதுறை திருக்கோயிலில் சோழர் காலத்து கல்வெட்டுகள் பல உள்ளன. இவற்றால் இக்கோயிலைப் பற்றிய பழஞ்செய்திகளை அறியமுடிகிறது.

**தென்கரைத் திரைமூர் நாடு**

சோழ நாட்டில் காவிரிக்கும் அரிசிலாற்றுக்கும் இடைப்பட்டப் பகுதியை 'உய்யக் கொண்டார் வளநாடு' என்று கல்வெட்டுகள் குறிக்கின்றன. இந்நாடு ஆக்கூர், அம்பர், குறும்பூர், மருகல், பாம்பூர், தென்கரைத் திரைமூர், திருநறையூர், திருவழுந்தூர், வெண்ணாடு, விளநாடு, பேராவூர் ஆகிய பகுதிகளை உள்ளடக்கியது.

இவற்றில் ஒன்றாகிய **தென்கரைத் திரைமூர் நாடு** நெற்குப்பை, சாத்தனூர், நடார், நல்லுச்சேரி, திருக் குரங்காடுதுறை, மகேந்திரபுரம், திருவாவடுதுறை ஆகிய ஊர்களைத் தன்னகத்தே கொண்டிருந்தது.

இத்திருவாவடுதுறை மஞ்சளாற்றுக்குத் தெற்கே உள்ள ஊர் சாத்தனூர். இவ்வூரில்தான் திருமூலர், மூலன் என்ற ஆயன் உடலில் புகுந்ததாக வரலாறு. அக்காலத்தியக் கல்வெட்டுகளில் திருவாவடுதுறை என்ற பெயரைக் குறிக்குமிடங்களில் "சாத்தனூர் திருவாவடுதுறை" என்றே பல இடங்களிலும் குறிப்பிடப் பட்டுள்ளன. சாத்தனூருக்கு சதுர்வேதி மங்கலம் என்ற பெயரும் உண்டு. இவ்வூருக்கு வடக்கில் 'சிற்றானைச்சூர்' என்ற ஊரும் இருந்ததாக கல்வெட்டுகள் குறிக்கின்றன.

**பழங்காலத்தில் கோயில் நிர்வாகம்**

திருவாவடுதுறையிலுள்ள ஸ்ரீ கோமுக்தீஸ்வரர் திருக்கோயிலைப் பழங்காலக் கல்வெட்டுகள், "திருவாவடுதுறை உடையார் கோயில்" என்றே குறிப்பிடுகின்றன. அக்காலத்தில் இக்கோயில் காரியங்களை, இவ்வூர்ச் சபையினர் கோயிலின் வடப் பக்கத்தில் இருந்த 'உலகளந்தான் மாடத்தில்' ஒருங்கு கூடியும், சங்கரதேவன் மண்டபத்தில் கூட்டம் குறைவறக் கூடியும் பேசி முடிவெடுத்தனர் என்று இக்கோயில் கல்வெட்டுகளால் அறிகிறோம்.

இத்திருக்கோயிலின் நிர்வாகப் பொறுப்பில் 'தென்கரை திருவழுந்தூர் நாட்டு வாய்தலைப்படி குலையரையர்' என்ற சபையினரும் இருந்தனர் என்பது கோயிலின் வடக்குப் பிரகாரத்திலுள்ள அஷ்ட புஜ துர்க்கா பரமேசுவரியின் கிழக்கு பக்கத்து கல்வெட்டு தரும் செய்தி.

**புத்தாக்கம் பெற்ற பழங்கோயில்**

தில்லைச் சிற்றம்பலத்திற்குப் பொன்வேய்ந்த முதல் பராந்தகச் சோழன் (கி.பி.907 - 948) தமது முப்பத்தெட்டாவது ஆட்சியாண்டில் (கி.பி. 945) இத்திருக்கோயிலைப் புதுப்பிக்க 500 கழஞ்சு பொன் கொடுத்தான். அவற்றைக் கொண்டு கற்றளிப்பிச்சன் என்பார் தமது தொண்டராகிய இளைய திருநாவுக் கரையர் உதவியுடன் இத்திருக்கோயிலைக் கற்றளியாக் கினார். இவ்விருவரின் உருவங்கள் கருவறை தென்புறச் சுவரில் தட்சிணாமூர்த்திக்கு இருபக்கங்களிலும் மெலிதான புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப் பட்டுள்ளன.

**கற்றளிப் பிச்சனாரின் கருங்கல் திருப்பணிகள்**

இக்கற்றளிப் பிச்சனார் இத்திருக்கோயிலில் சங்கு, காளம் போன்ற இசைக்கருவிகளை ஊதிப்பணிசெய்யும்



உவச்சர்களுக்கு நிவந்தமாக பதினொரு மா நிலம் கொடுத்தார் என்று கருவறை தென்புறச் சுவரிலுள்ள கல்வெட்டு குறிக்கின்றது. இக்கல்வெட்டு வாசகம் இதோ. "*ஸ்வஸ்தி ஸ்ரீ மதுரை கொண்ட கோப்பரகேசரி வன்மற்கு (முதல்பராந்தகன்) ஆண்டு இருபத்தைந்தாவது, தென்கரைத் திருவெழுந்தூர் நாட்டுப் பிரமதேயம் சிற்றானைச்சூர் சபையோம். இவ்வூர் கவிசங்கரன் மாறனிடைத் திரைமூர் நாட்டு பிரமதேயம் சாத்தனூர் திருவாவடுதுறை கற்றளி எடுத்த பித்தன், மஹா தேவருக்கு உவச்சப்புறமாக விலைகொண்டு நிலம் பதினொரு மாச் செய்யும் . . .*"

இக்கோயிலைக் கற்றளியாக்கிப் புகழ்கொண்ட 'கற்றளிப் பிச்சன்' இக்கோயிலில் தமிழ்ப் பதிகம் பாடுவோர்க்கும், திருமஞ்சனம் (அபிஷேகம்) ஆட்டுவார்க்கும், உவச்சர்களுக்கும், இங்குள்ள மடங்களுக்கும் சிற்றானைச்சூரில் நிலம் வாங்கி அளித்துள்ளான். இச்செய்தியைத் தரும் பழங்காலக் கல்வெட்டுவாசகம் இங்கே தரப்படுகின்றது. 1000 ஆண்டுகளுக்கு முந்தைய கல்வெட்டுத் தமிழ் நடையைப் படித்துப் பாருங்கள்.

"*ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேசரி வன்மற்கு யாண்டு மூன்றாவது திருவாவடுதுறை கற்றளிப்பிச்சநேசன், சிற்றானைச் சூரனான் விலைகள் கொண்டு மேற்புலத்து வடக்கடையைத் திருப்பதியம் பாடுவாரொருவற்கு அறுமாவும், இதன் தெற்கடைகாற் செய் (வயல்) திருமஞ்சனமாட்டுவார்க்குக்காலும், இதன் தெற்கடையைத் திருஉவச்சர்களுக்குக் காணிமடத்துக்கும் காலுமாக, நிவந்தம் செய்து கொடுத்தேன். கற்றளிப் பிச்சனின் இது பன்மாஹேஸ்வர ரக்ஷை*"

இக்கல்வெட்டு இன்றும் சுவாமி கோயிலின் அர்த்த மண்டபக் கிழக்குச் சுவரில் துவாரபாலகர்க்கும் வாயிலுக்கும் இடையில் வடபக்கம் உள்ளது.

**திருப்பணிகள் செய்த திருவாளர்கள்**

கற்றளிப் பிச்சன் தவிர இத்திருக்கோயிலில் திருப்பணிகள் செய்தவர்களின் பெயர்களும் உருவங்களும் கருவறை வெளிப்புறச் சுவர்களில் பொறிக்கப் பட்டுள்ளன. அவை வருமாறு :

1. வாமப் பூசையுடையான் எழுவன் சந்திசேகரன்.
2. பெரியவேளத்து வானல்லடிகள் நக்கன் (இவ்விருவரின் உருவங்களும் வடக்குப் பிரகாரத்தில் துர்க்கையம்மனின் கிழக்குப் பக்கச் சுவரில் உள்ளன)
3. பல்லவ மகாதேவியார் சிவகாமு (அர்த்த மண்டபத்தின் தென்புறத்து விநாயகர் திருமேனிக்குக் கிழக்கே உள்ள கல்வெட்டு)
4. ஸ்ரீ திருவாவடுதுறை உடையார் அடியான் அம்பலவன் திருவிசலூரரான் திருநாவுக்கரையன் (தட்சிணாமூர்த்தி திருமேனிக்கு மேற்கே இவரது உருவம் கைகளைத் தலைமேல் குவித்து வணங்கும் வண்ணம் உள்ளது.)
5. மிறைக் கூற்றத்து வீரமாங்குடி உடையான் ( இவரது உருவம் தட்சிணாமூர்த்திக்கு மேற்கே உள்ளது )
6. திருநரையூர் நாட்டுச் சிற்றடியான் தாமன் அம்பலவனான நமசிவாயன் ( சுவாமி கருவறை கிழக்கு வாயிலின் வடப்புறத்தில் இவரது உருவம் இறைவனைத் தொழுதவண்ணம் அமைந்துள்ளது ).

**திருவாவடுதுறை உடையார் – யார் ?**

பழங்காலக் கல்வெட்டுகளில் இத்திருக்கோயில் இறைவனின் திருநாமம் 'திருவாவடுதுறை உடையார்' என்றே பெரும்பாலும் குறிக்கப் பெற்றுள்ளது. திருவாவடுதுறையைத் தமக்கு உடைமையாக உடையவர் என்பது பொருள். *(பொதுவாக, உடையார் என்ற சொல் எல்லாவற்றையும் தம்மகத்தே உடைய சிவபெருமானையே குறிக்கும். )* இது தவிர திருவாவடுதுறைத்



தேவர், திருவாவடுதுறை ஆழ்வார், திருவாவடுதுறைப் பெருமானடிகள் என்றும் உள்ளன. மிகப் பிற்காலத்து கல்வெட்டுகளில்இறைவன் திருப்பெயர், 'கோமுக்தீஸ்வர்' என்றும் இறைவி திருப்பெயர், 'அதுலகுசநாயகி' என்றும் குறிக்கப்பட்டுள்ளன.

**உலாவரும் உற்சவமூர்த்திகள்**

இத்தலக்கல்வெட்டுகளில் குறிக்கப்பெற்றுள்ள ஐம்பொன் திருமேனிகளில் பல இன்றளவும் இத்திருக்கோயிலில் பாதுகாக்கப்பெற்று திருவிழாக் காலங்களில் எழுந்தருளச் செய்யப்படுகின்றன. அம்மூர்த்திகளின் பெயர்களும் (அக்கால) அளவுகளும்

1. சந்திரசேகர தேவர் (பீடமும் பிரபையும் உட்பட இரண்டு முழம் உயரம்) (பிரபை என்பது திருவாட்சி)
2. திரிபுவனசுந்தரர் (பீடமும் பிரபையும் சேர்த்து மூன்று முழம்)
3. கணபதியார் (பீடமும் பிரபையும் உட்பட ஒருமுழம்)
4. சந்திரசேகர தேவர் (பீடமும் பிரபையும் சேர்த்து ஒருசாணும் ஒரு விரலும்)
5. க்ஷேத்திரபால தேவர் (பீடம், பிரபை - சேர்த்து ஒரு முழம்)
6. க்ஷேத்திரபால தேவர் (பீடம் , பிரபை - சேர்த்து ஒரு சாண் நால்விரல் )
7. இடபவாகனத் தேவரும் பிராட்டியாரும் ( பீடம், பிரபையுடன் மூன்று முழம் )
8. பிச்சதேவர் ( மானும் பூதமும்பீடமும் பிரபையும் உட்பட இருமுழம் மூவிரல் )
9. அர்த்தநாரித் தேவர் ( பத்மத்தொரு முழமும் ஒரு ஒட்டையும்)
10. தட்சிணாமூர்த்தி (ஒரு முழம்)

11. பள்ளிக்கட்டு நம்பிராட்டியார் (பீடம் உட்பட இருமுழம்)
12. அஸ்திர தேவர் (நடுவுமாகத் தண்டொடும்)
13. இடபத் தேவர் (பீடம் உட்பட திருக்கொம்பு அளவும் ஈரொட்டை)
14. சண்டேசுவர தேவர் (பீடம் உட்பட ஒருமுழம்)
15. திருநாவுக்கரைய தேவர் (ஒரு முழம் நான்குவிரல்)
16. சிவ ஞானசம்பந்தடிகள் ( பீடம், பிரபை உட்பட ஒரு முழம் ஆறுவிரல்)
17. நம்பி ஆரூரனார் (பத்மத்தோடு ஒருமுழம் ஆறுவிரல்)
18. திருக்காளத்திப் பிச்சர் (தம்மையாக வார்த்த ஒருமுழம் உயரத்தவர்)
19. திருச்சிற்றம்புலத் திருமேனி, முதலாடி அருளும் உடையார் (பதுமமைந்த பீடமும் பிரபையும் உட்பட ஒரு முழம்)
20. (சிவகாமி) நம்பிராட்டியார் (பீடமும் பிரபையும் உட்பட ஒருமுழம் ஆறுவிரல்)

**ஏழுநாள் திருவிழா – எப்போது ?**

திருவாவடுதுறை திருக்கோயிலில் சோழர் காலங்களில் ஆண்டுதோறும் புரட்டாசி மாதத்தில் ஏழு நாட்கள் திருவிழா நடைபெற்று வந்தது. புரட்டாசி மாத மூல நட்சத்திரத் திருநாளில் திருக்கொடியேற்றம் தொடங்கி ஏழாம் நாளான பூரட்டாதித் திருநாளில் தீர்த்தவாரி நடைபெற்றது. இவ் ஏழுநாள் திருவிழாவையே 'ரத சப்தமி' என்ற வடமொழிப் பெயரால் குறிப்பர்.

இப்பெருவிழாவின் ஏழாம் திருநாளில் (தீர்த்தவாரி யன்று) திருமூலர் நாடகமும், ஆரியக் கூத்து ஏழு அங்கமும் இத்திருக்கோயிலிலேயே மிகச் சிறப்பாக நடைபெற்றன என்று இக்கோயிலின் கருவறை மேற்புறச் சுவரிலுள்ள கல்வெட்டுத் தெரிவிக்கிறது. இந்நாடகத்தையும் நடனத்தையும் அக்காலத்தே நடித்து வழங்கியவர்



வடுகமாங்குடி பாண்டிகுலாசனி என்ற கலைஞராவார். அவருக்குப் பின் அவைகளை நடித்தவர் சாக்கையர் குமரன் சீகண்டவன் ஆவார். அவருக்கு நிர்த்த போகமாக ஒருவேலி ஏழுமா நிலம் அளிக்கப்பட்ட செய்தியை முதலாம் இராஜராஜனின் (985-1012) ஒன்பதாமாண்டு கல்வெட்டொன்று கூறுகிறது. இத்திருக்கோயிலில் முதற் குலோத்துங்கச் சோழன் (1070-1120) காலத்தில் 'நானாவித நடன சாலை' என்ற பெயருள்ள நடன அரங்கம் இருந்ததாகக் இத்தலக் கல்வெட்டால் அறியமுடிகிறது.

இத்திருக்கோயில் கல்வெட்டுகளின் கையெழுத்துப் பிரதிகளை அண்ணாமலைப் பல்கலைக்கழகக் கல்வெட்டு அறிஞர் சுந்தரேச வாண்டையார் 1953ல் இவ்வாதீனத்தில் சமர்ப்பித்துள்ளார். இப்பிரதிகள் ஆதீன சரஸ்வதி மகால் நூலகத்தில் பாதுகாக்கப் படுகின்றன.

**தூண்களில் சிற்பங்கள்**

இத்திருக்கோயில் தூண்கள் பெரும்பாலும் செவ்வக வடிவத்தில் அமைந்தவையாகும். இவற்றில் பூ வேலைப்பாடுகளும், சிங்கம்,தாமரை மொட்டு முதலியன ஒரே நேர்க்கோட்டில் உச்சியில் அமைந்துள்ளன.

சுவாமி சன்னிதித் தூண்களில் புடைப்புச் சிற்பங்கள் இரண்டு அடி முதல் மூன்று அடி வரை அமைந்துள்ளன. மகாமண்டப இடப் பக்கத் தூண்களில் நின்ற கோலத்தில் அரசன், அமைச்சர், தம்பிரான் சுவாமிகள், ஸ்தபதி ஆகியோரின் சிற்பங்களும், ஸ்தபதியின் வலப் பக்கம் அளவு கோல் வடிவமும் உள்ளன.

தியாகராசர் சன்னிதியின் மகாமண்டபத் தூண்களில் இரண்டு அடி கொண்ட புடைப்புச் சிற்பங்களாக வியாக்ரபாதர், பதஞ்சலி, சுந்தரர், பரவையார் உருவங்கள் உள்ளன. முசுகுந்த மன்னன் உருவத்திற்கு எதிரே கூப்பிய கரத்துடன் மந்திரி போன்ற ஒரு சிற்பமும் அமைந்துள்ளது.

சுவாமி கோயிலில் சுப்பிரமணியர் சந்நிதிக்கு நேராக மேற்கு ஆவரணத் தூண்களில் இவ்வாதீன இரு மகா சந்நிதானங்களின் திருவுருவங்கள் சர்வாபரணங் களுடன் கிழக்கு நோக்கியும், 14ஆவது பட்டம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் திருவுருவமும் (1789 - 1843), தம்பிரான் ஒருவரும் நின்று கூப்பிய கரங்களுடன் காட்சியளிக்கின்றார்கள்.

அம்மன் சந்நிதி முன்னர் உள்ள மண்டபத் தூண்களில் கூப்பிய கரங்களுடன் இவ்வாதீன மகாசந்நிதானங்களின் திருவுருவங்களும், தம்பிரான் சுவாமிகளின் திருவுருவம் ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளன.

பெரியநந்தி முன் இருமருங்கிலும் 4 அடி உயரமுள்ள குலோத்துங்கன் உருவமும், வில்லுடன், அம்பையும் ஏந்திய ஒரு சிலையும் உள்ளன.

நந்தியின் பின்னால் பலிபீடத்தின் கீழ் ஒன்றரை அடி உயரமுள்ள நான்கு பூதகணங்கள் நாற்றிசைகளை நோக்கி நின்று கொண்டுள்ளனர். அவற்றின் எதிரேயுள்ள தூண்களில் மகாசந்நிதானங்கள் - ஸ்ரீ வேலப்ப தேசிகர், ஸ்ரீ பின்வேலப்ப தேசிகர் திருவுருவங்கள் கூப்பிய கரங்களுடன் சுவாமியினைத் தொழுதவண்ணம் காணப்படுகின்றன. ஒரு தூணில் இவ்வாதீனக் குலதெய்வமாகப் போற்றப்படும் திராவிட மாபாடியக் காரர் ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் திருவுருவமும் அமைக்கப்பட்டுள்ளது. இம்மண்டபம் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் காலத்தில் கட்டப்பட்டதாகத் தெரிகிறது.(சுமார் 210 ஆண்டுகளுக்கு முன்) சிற்பங்களின் கீழே பெயர்கள் காணப்படா விட்டாலும் தோற்றத்தின் மூலமாகவும் கட்டுமான விதத்திலும் அறியமுடிகிறது.

------



# கோபுரங்களும் விமானங்களும்

கோபுரம் என்பது இறைவன் எழுந்தருளி யிருக்கின்ற இடத்தைத் (கோயிலை) தூரத்திலிருந்தே தெரிவிக்கும் ஒரு சின்னமாக விளங்குகிறது. கோயிலின் நுழைவாயிலின் மேலே எழுப்பப் பெறும் உயரமான கட்டிடமே கோபுரம். இது அடித்தளம் அகலமாகவும் மேலே செல்லச் செல்ல குறுகியும் அமையும். கோபுரங்கள் பல நிலைகளைக் கொண்டதாகவும் உச்சியில் 3 முதல் 11 வரையிலான கலசங்களைக் கொண்டதாகவும் அமையும். 'கோபுரதரிசனம் கோடி புண்ணியம்' என்பர். கோபுரத்தைத் தூல லிங்கமாக எண்ணி வழிபடல்வேண்டும் என்று திருமூலரின் திருமந்திரம் குறிப்பிடுகிறது.

தமிழகத்தில் முதன்முதலில் கட்டப்பெற்ற கோபுரம் காஞ்சிபுரத்திலுள்ள ஸ்ரீ கைலாசநாதர் திருக்கோயிலின் கோபுரமேயாகும். தமிழகத்தில் முற்காலச் சோழர்கள் காலம் வரை சிறிய அளவில் கட்டப்பெற்ற கோபுரங்கள் பிற்காலப் பாண்டியர்கள் காலத்தில்தான் மிகஉயர்ந்த கோபுரங்களாக எழும்பின.

### ராஜகோபுரங்கள்

இத்திருவாவடுதுறைத் திருக்கோயிலில் பிற்காலச் சோழர்கள் எழுப்பிய மூன்று உயர்ந்த கோபுரங்கள் காணப்படுகின்றன. கிழக்கு நுழைவாயிலில் அமைந்துள்ள இராஜகோபுரம் ஐந்து நிலைகளையும் ஏழு கலசங்களையும் கொண்டதாகும். இக்கோபுரத்தில் நான்கு பக்கங்களிலும் ஏராளமான இத்தலம் தொடர்புடைய சுதைச் சிற்பங்கள் காணப்படுகின்றன. தியாகேசரை முசுகுந்த மன்னன் வழிபடல், திருஞான சம்பந்தர் பூதம் வாயிலாக பலிபீடத்தில் பொன் உலவாக்கிழி பெறுதல், திருமூலர் படரரசின்கீழ் யோகு புரிதல், தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைதல்

போன்ற இத்தல வரலாற்று நிகழ்வுகளை நம் கண்முன்னே கொண்டுவந்து நிறுத்துகின்றன இக்கோபுரச் சிற்பங்கள்.

இக்கோயிலின் இரண்டாவது, மூன்றாவது இராஜகோபுரங்களும் முறையே, மகா நந்தியை அடுத்த நுழைவாயிலிலும் அம்மன் சன்னிதியை அடுத்த சுவாமி கோயிலின் நுழைவாயிலும் அமைந்துள்ளன. இரண்டாவது இராஜகோபுரம் ஐந்து நிலைகளையும் ஐந்து கலசங்களையும் கொண்டுள்ளது. இரண்டாவது இராஜ கோபுரத்தின் முதல் நிலையில் நான்கு புறமும் துவார பாலகர்களும் இரண்டாம் நிலையில் சிவலிங்கத்தைக் கட்டியணைத்தவாறு மார்க்கண்டேயர் பயந்து இருத்தலும்அருகே சிவபெருமான் தமது திருப்பாதத்தால்; எமனை உதைத்தருளும் நிகழ்ச்சியும் மூன்றாம் நிலையில் கோருபாம்பிகையும் 4ஆம் நிலையில் நரசிம்ம அவதாரம் மலையில் அம்மனுடனும் அருகே சிவபெருமான் உமாதேவியாரும் ஐந்தாம் நிலையில் விநாயகர் சுப்பிரமணியரும் ஆகியவைகள் மேற்கு பக்கத்தில் சுதைச் சிற்பங்களாக உள்ளன. தெற்குப் புறத்தில் தட்சிணா மூர்த்தியின் பல்வேறு நிலைகளும் வடக்குப் புறத்தில் நான்முகன், ஆறுமுகன் சிலைகளும் காணப்படுகின்றன. மூன்றாவ்து இராஜகோபுரம் இரண்டு நிலைகளையும் ஐந்து கலசங்களையும் கொண்டதாக அமைந்துள்ளது.

**விமானச்சிறப்பு**

விமானம் என்பது மூலவருள்ள கருவறையின் கீழ்ப்பகுதி (அதிட்டானம்) முதல் உச்சி கலசம் முடிய உள்ளபகுதியாகும். இது அதிட்டானம், பித்தி, பிரஸ்தரம், கிரீவம், சிகரம், கலசம் என ஆறு அங்கங்களை உடையது. கருவறைக் கூரையின் மேல் யாளிவரிசை முதல், கண்டம் வரையிலான பகுதி மட்டும் விமானத்தளம் எனப்படும். இவ்விமானத்தளம் தமிழகக் கோயில்களில் ஒன்று முதல் பதின்மூன்று தளங்கள் வரை இடம்பெற்றுள்ளன. பெரும்பாலான சிறியக் கோயில்களில் ஏகதள



விமானங்களும் தஞ்சை பெருவுடையார் கோயில் போன்றவைகளில் பதிமூன்று தள விமானங்களும் அமைந்திருக்கும். ஒரு தளம் கொண்ட விமானம் 'ஏகதள விமானம்' என்றும், இரண்டு தளங்களைக் கொண்ட விமானம், 'துவிதள விமானம்' என்றும், மூன்று தளங்களைக் கொண்ட விமானம் 'திரிதள விமானம்' என்றும் குறிக்கப்பெறும்.

### இத்தலத்து இறைவன், இறைவி விமானங்கள்

திருவாவடுதுறை ஸ்ரீ கோமுக்தீஸ்வரர் திருக்கோயிலில் இருபது விமானங்கள் உள்ளன. சுவாமி விமானம் 'துவிதள விமானமாகும்', உச்சியில் ஒரு கலசம் உள்ளது. இவ்விமானத்தில் திருக்கயிலாயக் காட்சி சுதைச் சிற்பங்களாக அமைந்துள்ளன. நான்கு திசைகளிலும் அந்தந்தத் திசைக்குரிய விமான தேவதைகள் அமைக்கப் பட்டுள்ளன. ஏக கலசத்துடன் கம்பீரமாய் இவ்விமானம் காட்சியளிக்கிறது. இக்கோயிலின் அம்மன் ஒப்பிலா முலையம்மை தெற்கு நோக்கி தனிக்கோயில் கொண்டு அருள்பாலிக்கிறார். இக்கோயிலின் விமானம், 'துவிதள விமானமாகும்'. உச்சியில் மூன்று கலசங்கள் உள்ளன.

### மேலைப் பிரகாரத்து விமானங்கள்

இத்திருக்கோயிலில் சுவாமி, அம்மன் விமானங் களைத் தவிர அணைத்தெழுந்த நாயகர், ஆடல்வல்லான், ஆதி கோமுக்தீஸ்வரர், நால்வர் தனிக்கோயில், வரசித்தி நாயகர், கன்னிவிநாயகர், சுப்பிரமணியர், ஞானாம்பிகை, ஆடிப்பூர அம்மன், காளத்தீசுவரர், சண்டேசுவரர், தியாகராஜர், திருமூலர், யாகசாலைகள், வசந்தமண்டபம் என 20 விமானங்கள் உள்ளன. இவற்றில் அணைத் தெழுந்த நாயகர் விமானமும் நடராசப் பெருமான் விமானமும் தில்லைக் கோயில் விமான அமைப்பில் காணப்படுகின்றன. இவ்விமானங்களில் மும்மூன்று சுதையாலான கலசங்கள் உள்ளன. கோமுக்திநாயகரின்

மேற்குப் பிரகாரத்திலுள்ள கன்னிவிநாயகர், ஞானாம்பிகை, சுப்பிரமணியர், காளத்தீஸ்வரர் ஆகியோரின் விமானங்கள் தனித்தனியாக ஏகதள விமானங்களாக உள்ளன. இவற்றில் செப்புக் கலசங்கள் அமைந்துள்ளன.

**தியாகேசர் விமானம்**

இத்திருக்கோயிலில் தியாகேசப் பெருமானுக்கு தனிக்கோயில் உள்ளது. இக்கோயில் விமானம் ஏக தள விமானமாக அமைகிறது. இவ்விமானத்தில் கிழக்குத் திசைப் பகுதியில் தியாகேசரும் விநாயகரும் தெற்குப் பகுதியில் தட்சிணாமூர்த்தியும் மேற்குப் பகுதியில் திருஞான சம்பந்தரும் திருமாலும், வடக்குப் பகுதியில் பிரம்மா, சுந்தரர், முசுகுந்த மன்னனும் சுதைச் சிற்பங்களாக பொலிவுடன் அணி செய்கின்றனர்.

**வசந்த மண்டபம்**

கோயிலின் வடக்குப் பகுதியில் தலவிருட்சமாகிய அரசமரத்திற்கு வடமேற்கே நீண்டதொரு வசந்த மண்டபம் தெற்கு நோக்கி அமைந்துள்ளது. இம்மண்டபம் பெருவிழாக் காலங்களில் பஞ்சமூர்த்திகளுக்கு (திருவீதியுலா செல்வதற்கான) அலங்கார மண்டபமாகப் பயன்படுகிறது. இக்கோயிலின் பல்வேறு வாகனங்களும் இங்குதான் பாதுகாக்கப்படுகின்றன. இம்மண்டபத்தை மூன்றாம் குலோத்துங்கச் சோழன் (கி.பி.1178-1218) கட்டியதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. வௌவால் நெத்தி மண்டபமாக இது அமைந்துள்ளது. மண்டபத்தின் உச்சிப் பகுதியில் ஒன்பது கலசங்கள் காணப்படுகின்றன. இவை சுதையால் ஆனவை. இம்மண்டபத்து தூண்களில் யாளிச்சிற்பங்களும், யானை, நடனமாடும் பெண்கள் சிற்பங்களும் காணப்படுகின்றன.



# தலத்தைப் பற்றிய நூல்கள்

திருஞானசம்பந்தர் அருளிய பதிகம் - 1, திருநாவுக்கரசர் அருளிய பதிகம் -5, சுந்தரர் அருளிய பதிகம் - 2, சேந்தனார் அருளிய திருவிசைப்பா பதிகம் - 1 மற்றும் திருவாசகம், திருமந்திரம், பெரிய புராணம் முதலிய நூல்களில் இத்தலம் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

இத் திருவாவடுதுறை ஆதீனம் 10ஆவது பட்டம் ஸ்ரீவேலப்ப தேசிக மூர்த்திகள் ( கி.பி. 1678 - கி.பி. 1700 ) அருளாட்சிக் காலத்தவராகிய ஸ்ரீ சாஸ்திரம் சாமிநாத முனிவர் அருளிய துறைசைப் புராணம், *இத்தலத்தின் பெருமைகளை விரிவாக விளக்குவதாகும்.

இவ்வாதீன மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றியருளிய துறைசை யமக வந்தாதியும், இவ்வாதீனத்து இராயசம் ஸ்ரீ பொன்னு சாமிச் செட்டியார் இயற்றிய துறைசைச் சிலேடை வெண்பாவும், துறைசை வெண்பா அந்தாதியும், ஒப்பிலாமுலையம்மை பிள்ளைத் தமிழும், இத்தலத்தைப் பற்றிய சிற்றிலக்கியங்களாம். இப்பிள்ளைத் தமிழ் ஆதீன சரஸ்வதி மஹால் நூல் நிலைய ஆய்வு மையத்தில் உள்ளது. இந்நூல் ஆசிரியர் பற்றி ஏதும் தெரியவில்லை.

ஸ்கந்த புராணத்திலே ருத்ர ஸம்ஹிதை என்ற பகுதியில் இவ்வூர்ப் புராணம் கூறப்படுகிறது. ஆக்நேய புராணத்தில் இத்திருத்தலத்தின் சிறப்புகள் கூறப் பட்டுள்ளன. அகத்திய பக்த விலாசம், உபமன்யு பக்த விலாசம் என்ற நூல்களில் நாயன்மார்கள் இத்தலத்திற்கு வந்து வழிபாடாற்றிய செய்திகளைக் கூறும்போது தலச் சிறப்பும் கூறப்படுகிறது.

**திருவாவடுதுறைக்கோவை**

திருவாவடுதுறை யாதீனத்துத் தொட்டிக்கலை சுப்பிரமணியமுனிவர் இயற்றிய "திருவாவடுதுறைக் கோவை" "இது சிதம்பரம் ஸ்ரீ மீனாட்சி தமிழ்க் காலேஜ்

பிரின்ஸிபாலாகிய மகாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி உ.வே. சாமிநாதையர் நூல் அரும்பதவுரை முதலியவற்றுடன் சென்ன பட்டிணம் கமர்ஷியல் அச்சுக்கூடத்திற் பதிக்கப்பட்டது. அக்ஷய வருடம் ஆனி மாதம் 1926 இரண்டாம் பதிப்பு விலை அணா - 10" (முதல் பதிப்பு 1903 ) என்று முதல் பக்கத்தில் உள்ளது.

**திருவாவடுதுறைப் புராணம்**

இந்நூலின் ஆசிரியர் திருவாவடுதுறை ஆதீனத்து சாத்திரம் சாமிநாத முனிவர். இவ்வாதீனத்து பத்தாவது குரு மகா சந்நிதானம் ஸ்ரீ முன்வேலப்ப தேசிகர் (1678-1700) காலம் முதல் பன்னிரண்டாம் மகா சந்நிதானமாகிய ஸ்ரீ திருச்சிற்றம்பல தேசிகர் (1730-1770) காலம் முடிய வாழ்ந்தவர். சிவஞான சுவாமிகள் காலத்தவர். இவர் 18 காண்டங்களையுடைய வடமொழி ஸ்காந்தத்திலுள்ள 'ருத்திர சங்கிதை'யின் 'கோமுத்தி க்ஷேத்திர மகாத்மியத்தைத்' தமிழில் மொழி பெயர்த்து 'துறைசைப் புராணம் 'என்ற பெயரில் எழுதியுள்ளார். இந்நூல் மூன்று காண்டங்களையும், 68 அத்தியாயங்களையும் 2560 பாடல்களையும் கொண்டுள்ளது.

இந்நூலுள்ள ஓலைச் சுவடி ஒன்று, திருவாவடுதுறை ஆதீன சரஸ்வதி மகால் நூலகத்தில் பாதுகாக்கப் படுகின்றது. இதன் நீளம் 37 செ.மீ. அகலம் 3 செ.மீ. 184 ஏடுகளில் இருபக்கமும் (368 பக்கங்கள்) எழுதப் பட்டுள்ளன. ஒரு பக்கத்திற்கு 8 அல்லது 9 வரிகள் உள்ளன. இச்சுவடியில் சில பகுதிகள் பூச்சிகளால் அரிக்கப் பட்டிருந்தாலும் சுவடிமுழுமையும் நல்ல நிலைமையில் உள்ளது.

1959ல் சுவடியிலிருந்து காகிதத்தில் பிரதி செய்யப் பெற்ற கையெழுத்து பிரதி ஒன்றும் அந்நூலகத்தில் உள்ளது. 1961ல் இந்நூலின் உரைநடை வடிவம் நூலாக ஆதீன வெளியீடாக ( எண் : 147 ) "துறைசைப் புராணம்

 

(வசனம்)" என்ற பெயரில் வெளிவந்துள்ளது. 393 பக்கங்கள். 2005ல் 'திருவாவடுதுறைப் புராணம்' என்ற பெயரில் ஆதீன அனுமதியுடன் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் முனைவர்.வே.இரா. மாதவன் அவர்களால் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. மொத்தப் பக்கங்கள் 815. விலை ரூ. 250/-.

இந்நூல் வெளியீடு திருவாவடுதுறை ஆதீனத்தில் நடைபெற்றது. யானைமேல் இந்நூலை வைத்து திருவீதியுலா நடத்தி, சொற்பொழிவுகள் செய்வித்து, இப்பதிப்பாசிரியருக்கும் குரு மகா சன்னிதானம் அவர்களால் சிறப்பு செய்தருளப் பெற்றது.

## திருவாவடுதுறையில் உள்ள பிற கோயில்கள்

திருவாவடுதுறை ஊரின் நடுவில் 'ஆவடுதுறை அரனாரின்' பெரிய திருக்கோயில் உள்ளது. 'ஆஅடுதுறை' என்ற கோயிலின் பெயரே பிற்காலத்தில் 'திருவா வடுதுறை' என ஊரின் பெயராக அமைந்தது. இத்திருக் கோயிலைச் சுற்றி நான்கு புறமும் மடவிளாகமும், நான்கு திசைகளில் நான்கு பெரிய வீதிகளும் உண்டு. நான்கு மூலைகளிலும் ஆதீனத்திற்குச் சொந்தமான நான்கு விநாயகர் கோயில்கள் உள்ளன.

**ஸ்ரீ ஈசான்ய விநாயகர்**

வடக்கு வீதியும் கீழவீதியும் கூடுமிடத்தில் - ஈசானத் திசையில் (வடகிழக்கு) ஸ்ரீ ஈசான விநாயகர் திருக்கோயில் உள்ளது. ஸ்ரீ ஈசான விநாயகர் மேற்கு நோக்கி அருள்பாலிக்கிறார். கருவறையும் சுற்று மதில்களுடன் கூடிய பிரகாரமும் அழகிய சிறிய விமானமும் அமைந்த இத்திருக்கோயிலில் சங்கடஹர சதுர்த்தியில் சிறப்பு வழிபாடும், ஆவணி மாத விநாயகர்

சதுர்த்தியில் பத்து நாட்கள் திருவிழாவும் வடக்கு வீதி மற்றும் உள்ளூர் வெளியூர் அன்பர்களாலும் சிறப்பாக நடத்தப்பெறுகின்றன.

இத்திருக்கோயிலுக்கு 2002ஆம் ஆண்டு நவம்பர் பதினோராம் நாளில் (சித்ரபானு - ஐப்பசி - 24) மெய்கண்டார் ஆண்டு 780, திருவள்ளுவர் ஆண்டு 2033ல் விருச்சிக லக்னம், சஷ்டி திதி, உத்திராட நட்சத்திரம் கூடிய நன்னாளில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நிகழ்த்தியருளப் பெற்றுள்ளது.

**ஸ்ரீ அன்னைக்கு வழிகாட்டிய விநாயகர்**

கீழவீதியும் தெற்குவீதியும் கூடுமிடமாகிய அக்னி மூலையில் (தென் கிழக்கு) ஸ்ரீ அன்னைக்கு வழிகாட்டிய விநாயகர் திருக்கோயில் அமைந்துள்ளது. பசுவடிவில் வந்த பார்வதி தேவி திருக்கோழம்பம் திருத்தலத்தில் இறைவனை வழிபட்டு இத்தலத்து இறைவனை நாடி வரும் போது இவ்விடத்தில் இருந்து கோரூபாம்பிகையாகிய அன்னைக்கு (கோயில்) வழிகாட்டிய விநாயகர் இவர்தான் என்று உள்ளூர் கர்ணபரம்பரைச் செய்திகளால் அறியலாம். தற்காலத்தில் திருவாவடுதுறை மஞ்சளாற்றின் வடகரையில் தாமாகத் தோன்றியருளும் ஸ்ரீ வெள்ளை வேம்பு மாரியம்மன் திருக்கோயில் மாரியன்னைக்குச் செல்லும் பக்தர்களுக்கு வழிகாட்டும் விநாயகராகவும் அருள்பாலிக்கிறார்.

இவ்விநாயகர் திருக்கோயிலில், திருவள்ளுவர் ஆண்டு 2037 விய ஆண்டு ஆனித் திங்கள் 28ஆம் நாள் (12.07.2006) புதன் கிழமை காலை 9 மணிக்கு மேல் 10.30க்குள் திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெற்றது. சங்கடஹர சதுர்த்தியிலும் ஆவணி மாத விநாயகர் சதுர்த்தியிலும் சிறப்பு வழிபாடுகள் தெற்குவீதி சைவப்பெருமக்களாலும் பிற உள்ளூர் வெளியூர் அன்பர்களாலும் செய்யப் பெறுகின்றன. இவைதவிர ஆண்டுதோறும் மே மாதம் இரண்டாவது ஞாயிற்றுக்



கிழமையில் நடைபெறும் ஸ்ரீ வெள்ளை வேம்பு மாரியம்மன் திருக்கோயில் காவடி உற்சவமும் இவ்விநாயகர் திருக் கோயிலிலிருந்துதான் தொடங்குகிறது. அன்றையதினம் தெற்குவீதியும் கீழவீதியும் விழாக் கோலம் பூண்டு கோலாகலமாகத் திருவிழா நடைபெறுவது கண்கொள்ளாக் காட்சியாகும். அன்னைக்கு (அன்றைக்கு) வழிகாட்டிய விநாயகர் இன்றைக்கும் மக்களுக்கு நல்வழி காட்டி நலம் பல அருளுகிறார். தொடர்ந்து இக்கோயிலில் துண்டா விளக்கு ஒளிதருகிறது ; விநாயகர் அருள் தருகிறார்; மக்கள் நலம் பெறுகிறார்கள்.

**ஸ்ரீ மெய்க்கண் விநாயகர்**

தெற்குவீதியும் மேலவீதியும் கூடுமிடத்தில் நிருத்தி மூலையில் (தென்மேற்கு) ஸ்ரீ மெய்க்கண் விநாயகர் கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறார். இவ்விநாயகருக்கு ஆரம்ப காலத்தில் 'மெய்க்கும் விநாயகர்' என்றே பெயர் வழங்கிற்று. இவரிடம் மக்கள் வேண்டியவையாவும் மெய்க்கும்; பொய்க்காது என்ற பொருளில் இத்திருப்பெயர் அமைந்திருந்தது. மெய்க்கும் விநாயகர் என்ற திருநாமமே காலப் போக்கில் மெய்க்கண் விநாயகர்' எனத் திரிந்துவிட்டது என்பர் உள்ளூர்ப் பெரியோர்கள். பொதுவாக சிவன் திருக்கோயிலிலும் பிற இடங்களிலும் கன்னிமூலையில் விநாயகர் வைத்து வழிபடுவது என்பது பழங்கால வழக்கம். மற்றைய விநாயகர்களை விட நிருதிமூலை விநாயகர் விசேஷம். வீட்டிலும் இந்நிருதிமூலை குபேர மூலையாக போற்றப்படுகிறது. இம்மூலையில் பணம், காசு வைக்கும் பீரோக்களை வைத்தால் குபேர சம்பத்து பெருகும் என்பது வாஸ்து சாத்திர நூல் கூறும் தகவல். அந்த வகையில் இம்மூலையில் (கன்னிமூலை) அருளும் கன்னிவிநாயகரை வழிபட்டால் குபேரச் செல்வம் பெருகும் என்பது ஐதீகம். இந்த மெய்'க்கண் (மெய்க்கும்) விநாயகரை வழிபட்டு

செல்வ வளம் பெற்று சிறப்பான வாழ்வில் இன்புறும் மக்களின் பிரியமான விநாயகராக இவர் அருள் பாலிக்கிறார். இவ்விநாயகர் திருக் கோயிலிலும் தொடர்ந்து திருவிளக்கு ஒளிதருகிறது; மக்களின் வாழ்வொளி பெருகுகிறது.

**ஸ்ரீ ஞானசம்பந்த விநாயகர் திருக்கோயில்**

மேலவீதியும் வடக்குவீதியும் சந்திக்கும் வாயுமூலையில் ஸ்ரீ ஞானசம்பந்த விநாயகர் திருக்கோயில் பொலிவுற அமைந்துள்ளது. ஆதீனத்திற்குச் சொந்தமானது. கிழக்குப் பார்த்த சன்னிதி. நான்கு திருக்கரங்களுடன் அழகுறக் காட்சியருளும் இவ்விநாயகருக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் அருளாணையின் வழி நாள்வழிபாடும் சங்கடஹர சதுர்த்தி, ஆவணி மாத விநாயகர் சதுர்த்தி சித்ராப் பௌர்ணமி ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாடுகளும் மேலவீதி மற்றும் வடக்குவீதி அன்பர்களாலும் உள்ளூர் மக்களாலும் மிகவும் சிறப்பாக நடத்தப் பெறுகின்றன.

கருவறைக்கு வெளியே முன்மண்டபமும், மதில்களுடன் கூடிய சுற்றுப் பிரகாரமும் உள்ள இக்கோயிலில் ஒருநிலை கொண்டதாகவும் ஐந்து கலசங்களுடன் கூடிய கோபுரம் அமைந்திருப்பது தனிச்சிறப்பு. மேலும் நுழைவாயில் மேற்புறம் தேவியர்களுடன் கூடிய விநாயகர் மற்றும் முருகனின் திருவுருவங்கள் சுதைச் சிற்பங்களாய் உள்ளன.

தென்புற மேல்தலத்தில் திருக்கயிலையில் விநாயகர் ஞானப்பழம் பெறும் திருவிளையாடலைக் குறிக்கும் விதமாக மாம்பழத்துடன் கூடிய திருக்கரம் கொண்டு சிவபெருமானும் அருகே உமையம்மையும் வீற்றிருக்க எதிரில் விநாயகப் பெருமானும் முருகப் பெருமானும் அம்மையப்பரை நோக்கி நின்ற திருக் கோலங்களுடன் அமைந்திருக்க அருகே நாரத முனிவரும் அமைந்திருக்கும்



காட்சி அற்புதமானது. மேலும் வடக்குப்புற மேல் தளத்தில் வெளிப்பக்கம் நோக்கி கிழக்கிலிருந்து மேற்காக முறையே திருமுருகனும், விநாயகப் பெருமானும் அருகே கமண்டலத்தின் காவிரி நீரைக் கவிழ்த்து விடும் விநாயகரின் காகத் திருவுருவமும் லிங்கத்தின் பால்சொரிந்து நாவால் வருடும் கோரூபம்பிகைத் திருவுருவமும், ஆநிரைகளை கோல்கொண்டு மேய்க்கும் மூலனின் நின்றகோலமும் யோக நிலையில் கம்பீரமாக வீற்றிருக்கும் திருமூலரின் அமர்ந்த திருக்கோலமும் வரிசையாக தத்ரூபமாக அமைந்துள்ள சுதைச் சிற்பங்கள் கண்களுக்கும் கருத்திற்கும் ஒருங்கே விருந்தளிக்கின்றன. விநாயகரின் விமானத்திலும் சுதைச் சிற்பங்கள் உள்ளன. மேலும் இக்கோயிலின் முன்மண்டபத்து விதானத்தில் மகாலெட்சுமி, கணபதி, சரஸ்வதி, முருகன் ஆகியோரின் திருவுருவங்கள் வண்ண ஓவியங்களாக அழகுற அமைந்துள்ளன. இந்த அளவிற்கு சுதைச் சிற்பங்களும் வண்ணஓவியங்களும் நிறைந்துள்ள விநாயகர் தனித் திருக்கோயில் இவ்வூரில் வேறெங்கும் இல்லை எனலாம்.

இத்திருக்கோயிலில் விய ஆண்டு ஐப்பசி பன்னிரண்டாம் நாள் *(29.10.2006)* ஞாயிற்றுக் கிழமை சுக்கிலபட்சம், சப்தமிதிதி, உத்திராட நட்சத்திரம், அமிர்த யோகம், துலா லக்னம் கூடிய சுபயோக சுபதினத்தில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சிறப்புடன் நடைபெற்றது. இதற்கான கல்வெட்டு இத்திருக்கோயிலின் தென்புற வெளிப்பக்க மதில் சுவரில் உள்ளது.

இத்திருக்கோயிலில் ஆதீன அருளாணைவழி ஆவணி மாத விநாயகர் சதுர்த்திப் பெருவிழா பத்து நாட்கள் சிறப்புடன் நடைபெறுகிறது. ஆண்டுதோறும் சித்ராப் பௌர்ணமியில் சிறப்பு அபிஷேக அலங்கார, தீபாராதனைகள் நடைபெறுவதுடன் அன்றையதினம் அன்னதானமும் நடைபெறுகிறது.

**ஸ்ரீ தில்லை மகாகாளியம்மன் (மேலக்கடை)**

திருவாவடுதுறை திருத்தலத்தின் மேற்கு எல்லையில் மேலைக்கடைத் தெருவில் ஸ்ரீ தில்லை மகா காளியம்மன் திருக்கோயில் உள்ளது. இதுவும் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானதாகும். வடக்கு பார்த்த இக்கோயிலில் மகா காளியம்மன் எட்டுக் கரங்களோடு பக்தர்களுக்குத் திருக்காட்சியும் நடன உற்சவத்தில் தெருக் காட்சியும் கொடுத்து அருளுகின்றாள்.

கருவறைக்கு முன்னுள்ள அர்த்த மண்டபத்தில் கிழக்கு நோக்கி மகாகாளியம்மனின் உற்சவமூர்த்தி நான்கு திருக்கரங்களுடன் அருளுகின்றாள். இடப்பக்க மேல்கரத்தில் உடுக்கையும் கீழ்க்கரத்தில் கிளியும், வலப்பக்க மேல்கரத்தில் பாசமும் (கயிறு) கீழ்க்கரத்தில் கிண்ணமும் கொண்டு விளங்குகிறாள். திருவீதியுலா வரும் சமயத்தில் சர்வ அலங்காரங்களுடன் புறப்பாடு நிகழ்ந்து அருகிலுள்ள ஐந்து தெருக்களுக்கும் திருவீதியுலா வருவதுண்டு. இவ்உற்சவமூர்த்திக்கு அருகே வீதியுலா விற்கான நடனத் திருக்கோலத்திற்குரிய அம்மன் சிரசும் எட்டுக் கரங்களும் உள்ளன. இத்திரு நடன உற்சவம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் அருளாசியுடன் கடந்த முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக மேலக்கடைத் தெரு மற்றும் உள்ளூர்வாசிகளால் சிறப்புற நிகழ்த்தப் பெற்று வருகிறது. ஆண்டுதோறும் வைகாசி வளர்பிறையில் இத்திருநடனத் திருவிழா நடைபெறுகிறது.

இக்கோயிலின் அர்த்த மண்டபத்திற்கு வெளியே மகா மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தில் சன்னதியில் சூலமும் பலிபீடமும் உள்ளன. மேற்குப் புறத்தில் கிழக்குப் பார்த்த நிலையில் ஸ்ரீ ஞானப்பிரகாச விநாயகர் சிறு தனிக் கோயில் உள்ளது. இவ்விநாயகர் பாசம், அங்குசம், தந்தம், கொழுக் கட்டையுடன் கூடிய நான்கு



திருக்கரங்களுடன் அருள்பாலிக்கிறார். இத்தனிச் சன்னிதி 1989ஆம் ஆண்டு எழுப்பப்பெற்று திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றதற்கான கல்வெட்டு இச்சன்னிதியில் காணப்படுகிறது.

கோயில் கருவறையின் ஏகதளவிமானத்தில் ஒரு கலசமும் நாற்புறமும் மகாகாளியம்மனின் திருவுருவச் சிலைகளும் காணப்படுகின்றன. நான்கு கோணத் திசைகளில் பூதகிகளும் சிங்கங்களும் சுதைச் சிற்பங்களாக உள்ளன. கோயிலின் நுழைவாயிலில் ஒருவளைவும் அதில் தில்லை மகா காளியம்மனின் சுதைச் சிற்பங்களும் அழகுற காட்சியளிக்கின்றன. 2004 ஆண்டு ஆவணி 26ஆம் நாளில் திருக்குட நன்னீராட்டு நிகழ்ந்துள்ளது. ஆண்டுதோறும் இத்தில்லை மகாகாளியம்மன் அதிக சக்தி படைத்ததாக உள்ளூர் தெருவாசிகள் கூறுகின்றனர். ஒருகாலத்தில் திருவாவடுதுறை நான்கு வீதிகளிலும் திருவீதியுலா வரும் சமயம், தமக்கு முன்னே ஒளிகாட்டி வழி சொல்லும் தீவர்த்தியின் (தீவட்டி) வெளிச்சம் எண்ணெய் தீர்ந்துபோய் நின்றுவிட, இம் மகாகாளியம்மன் அருள்வாக்கின்படி பக்கத்திலுள்ள குளத்து நீரை முகந்து தீவர்த்தியில் ஊற்றிட அத்தீவர்த்தியின் சுடர் மேலும் ஒளிவிட்டுப் பிரகாசமாக எரிந்தது என்பது உள்ளூர் மக்களின் செவிவழிச் செய்தி.

### ஸ்ரீ காமாட்சியம்மன் திருக்கோயில்

திருவாவடுதுறை திருக்கோயிலின் புறத்தே வடமேற்கு மூலையிலுள்ள தெருவில் அருள்தரு காமாட்சியம்மன் திருக்கோயில் உள்ளது. திருவாவடு துறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. கிழக்குப் பார்த்த சன்னிதி. நான்கு திருக் கரங்களுடன் நின்ற திருக் கோலத்தில் அம்மன் அருள்புரிகிறாள். கருவறைக்கு முன்னுள்ள அர்த்த மண்டபத்தின் தென்புறத்தில் விநாயகர் திருமேனியும் வடபுறத்தில் ஸ்ரீ காமாட்சியம்மனின் பழைய கல் திருமேனியும் உள்ளன.

முன் மண்டபத்தில் சன்னிதியின் நேர் எதிரே நந்தியும் பலிபீடமும் உள்ளன. மூன்று கலசங்களுடன் கூடிய விமானமும் சுற்று மதில்களுடன் கூடிய உட்சுற்றுப் பிரகாரமும் இரும்பு கம்பிகளுடன் கூடிய நுழைவாயிலும் உள்ளன. இத்திருக்கோயிலில் 1988 ஆண்டு ஜூன் மாதம் 27ஆம் நாள் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெற்றதற்கான கல்வெட்டு உள்ளது. இத்திருக்கோயிலின் தினந்தோறும் ஒருகால பூஜை நடைபெறுகிறது. நவராத்திரியில் ஒன்பது நாட்கள் தெருவாசிகள் மற்றும் உள்ளூர் பக்தர்களின் துணையொடு சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**ஸ்ரீ ஐயனார் திருக்கோயில்**

திருவாவடுதுறை கீழவீதியின் வடக்குப் புறத்து முதன்மைச் சாலையில் ஐயனார் திருக்கோயில் உள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. கருவறையில் ஐயனார் வலக்கையில் சாட்டையுடனும் மேடைமேல் குத்திட்டு வைத்துள்ள இடமுழந்தாளின் மேல் இடக்கரத்தை வைத்தும் வலக்காலைத் தொங்கவிட்டும் கிழக்கு நோக்கி அருளுகிறார். சன்னிதியில் கருங்கற்களாலான குதிரை, யானைச் சிலைகளும் பலிபீடமும் உள்ளன. கோயிலைச் சுற்றி நாற்புறமும் மதில்களுடன் கூடிய பிரகாரம் உள்ளது. ஏகதள விமானம். கோயிலின் நுழைவாயிலின் மேற்புறமும் கருவறையின் மேற்புறமும் கிழக்கு நோக்கி ஐயனாரின் சுதைச் சிற்பங்கள் உள்ளன.

கோயிலுக்கு வெளியே சாலையின் எதிரே ஐயனார் கோயிலை நோக்கிய வண்ணம் குதிரை, யானைகளின் சுதை உருவங்கள் (சுமார் 8 உயரம்) உள்ளன. ஸ்ரீ ஐயனார் திருக்கோயில் சித்திரபானு ஆண்டு ஐப்பசித் திங்கள் இருபத்து நான்காம் நாள் (10.11.2002 ) ஞாயிற்றுக் கிழமை விருச்சிக லக்கினம், சஷ்டி திதி, உத்திராட நட்சத்திரம் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 7.15க்கு



மேல் 8.30க்குள் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெற்றது. இதற்கான கல்வெட்டு இத்திருக் கோயிலின் கீழ்ப்புற மதில் சுவரின் வெளிப்பக்கத்தில் உள்ளது. தினந்தோறும் பூஜை நடைபெறுகிறது.

**ஸ்ரீ வடபத்ர காளியம்மன்**

திருவாவடுதுறை இந்தியன் ஓவர்சீஸ் வங்கித் தெருவில் (திருவாலங்காட்டுக்குச் செல்லும் வழியில்) ஸ்ரீ வடபத்ர காளியம்மன் திருக்கோயில் உள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. கருவறையில் சிலாரூபமாக வடக்குத் திசை நோக்கி அருள்பாலிக்கும் இப்பத்ரகாளியம்மன் எட்டுக் கரங்களுடன் மகிஷாசுர மர்த்தினி திருக்கோலத்தில் காட்சியளிக்கிறாள். வலப்பக்கக் கரங்களில் (மேலிருந்து கீழ்) சூலம் மழு, கத்தி, நாகம் ஆகியவையும் இடக் கரங்களில் தீச்சுடர், கேடயம், மணி, ரத்தக் கிண்ணம் ஆகியவையும் கொண்டுள்ளாள். சூலாயுதத்தால் தன் காலடியில் கிடக்கும் மகிஷாசுரனைக் கொல்லும் பாவனையில் காட்சியளிக்கிறாள். இவ்வம்மனின் இடது திருப்பாதம் மகிஷாசுரன் மீதும் வலத்திருப்பாதம் மடித்து சற்று உயர்த்தியபடியும் உள்ளன.

கருவறைக்கு வெளியே அம்மனுக்கு வலப்புறத்தில் சிறிய விநாயகரும் அருளுகிறார். சன்னிதியில் சூலமும் பலிபீடமும் உள்ளன. கருவறைக்கு மேலே மூன்று கலசங்களைக் கொண்ட ஏகதள விமானம் உள்ளது. விமானத்தின் கிழக்குப்புறத்தில் அங்குசம், பாசம், மலர், கரும்பு ஆகியவைகளை நாற்கரங்களிலும் கொண்ட ராஜராஜேஸ்வரியின் சுதைச் சிற்பம் உள்ளது. இருகால்களையும் சமமாக கீழே தொங்கவிட்டு பீடத்தில் அமர்ந்த நிலையில் உள்ளது. தெற்குப் புறத்தில் சூலம், பாசம் ஆகியவைகளை மேற்கரங்களிலும் வலக்கரத்தில் அபயமும் இடக்கரத்தில் வரதமும் கொண்டு இடக்காலை மடித்து வலக்காலை தொங்கவிட்டு அமர்ந்த





திருக்கோலத்திலுள்ள அம்மன் சிலையும், மேற்குப் புறத்தில் சக்கரம், சங்கு, அபயம், வரதம் ஆகியன கொண்டு நாற்கரங்களுடன் அமர்ந்த கோலத்திலுள்ள அம்மன் சிலையும் சுதைச் சிற்பங்களாக அமைந்துள்ளன. கிழக்குப்புற முன்மண்டப மேல்தளத்தில் மகிஷாசுர மர்த்தினியின் சுதைச் சிற்பம் அற்புதமான நிலையில் உள்ளது.

இத்திருக்கோயில் விபவ ஆண்டு ஆவணித் திங்கள் முப்பத்தோராம் நாள் *(16.09.1988)* திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பாக நடைபெற்றது. இன்றும் இத்திருக்கோயிலுக்கு தோஷப் பரிகாரம் செய்பவர்களும் குடும்ப ஒற்றுமை வேண்டியும் பலரும் வந்து சிறப்பு அபிஷேக ஆராதனைகள் செய்து பயன்பெறுகின்றனர்.

**ஸ்ரீ ( செக்கடி ) நினைத்ததை முடிக்கும் மகாமாரியம்மன் திருக்கோயில்**

திருவாவடுதுறை வடக்குப்புற எல்லையில் ஸ்ரீ நினைத்தை முடிக்கும் மகா மாரியம்மன் திருக்கோயில் உள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. உடுக்கை, பாசம், கத்தி, கிண்ணம் ஆகியவைகளைக் நாற்கரங்களில் கொண்ட இம்மகா மாரியம்மன் கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறாள்.

கருவறைக்கு வெளியே உள்ள அர்த்த மண்டபத்தில் தெற்குப் புறத்தில் விநாயகப் பெருமானும் வடக்குப் புறத்தில் இக்கோயிலின் பழைய மாரியம்மனும் உள்ளனர். சன்னிதியில் சூலமும் பலிபீடமும் உள்ளன. கருவறைக்கு மேலுள்ள ஏகதள விமானத்தில் நான்கு புறமும் மாரியம்மன் சுதைச் சிற்பங்களும் நான்கு மூலைகளில் விமான தேவதைகளும் எட்டு சிங்கச் சிற்பங்களும் பூதகிகளும் உள்ளன.

இத்திருக்கோயிலிலுள்ள மகா மாரியம்மன் ஏற்கனவே தெற்கு வீதி திரௌபதியம்மன் கோயில் அருகே



இருந்ததாகவும், பின்னர் ஆதீனத்து 17ஆவது குரு மகா சந்நிதானம் அவர்களின் அருளாட்சி காலத்தில் இவ்விடத்தில் கொண்டு வந்து வைத்து வழிபட்டதாகவும் செவிவழிச் செய்தி ஒன்றுண்டு. இத்திருக்கோயிலில் சுக்கில ஆண்டு ஆவணித் திங்கள் இருபத்தோராம் நாள் (06.09.1989)ல் திருக்குடநன்னீராட்டுப் பெருவிழா நடைபெற்றது. தினமும் பூஜை நடைபெறுகிறது. வருடாந்திர விழாக்களில் சித்ராப் பௌர்ணமியில் குத்துவிளக்கு வழிபாடு குறிப்பிடத் தக்கது. மாதந் தோறும் பௌர்ணமி பூஜையும் நடைபெறுகின்றன.

**ஸ்ரீ சித்திவிநாயகர் திருக்கோயில்**

திருவாவடுதுறை வடக்குப்புற எல்லையில் திருவாலங்காட்டிற்குச் செல்லும் தார்ச் சாலையோரம் கிழக்குபார்த்த இவ்விநாயகர் திருக்கோயிலில் பாசாங்குச அபய கரங்களுடன் சித்தி விநாயகர் அருள்பாலிக்கிறார். கருவறை மேலுள்ள ஏகதள விமானத்தில் நாற்புறங் களிலும் விநாயகர் திருவுருவங்கள் சுதைச் சிற்பங்களாக உள்ளன. கருவறைக்கு வெளியே முன் மண்டபம் உள்ளது. சிறிய மதில்களோடு கூடிய சுற்றுப் பிரகாரம் உள்ளது. நித்திய பூஜை நடைபெறுகிறது.

**அருள்மிகு வெள்ளை வேம்பு மாரியம்மன் திருக்கோயில்**

திருவாவடுதுறைக்கு தெற்கே உள்ள மஞ்சளாற்றின் வடகரையில் தெற்கு நோக்கி வெள்ளை வேம்பு மாரியம்மன் திருக்கோயில் உள்ளது. மூலத்தானத்திலுள்ள வேப்பமரத்தின் நடுவிலுள்ள கிளைகளின் வேப்பிலைகள் வெள்ளை வெளேர் என்று உள்ளன. இதுபோல் இப்பகுதியில் வேறெங்கும் கிடையாது. இங்கு சிலாரூபமாகவும் மாரியம்மன் காட்சியளிக்கிறாள். முதலில் 02.06.1992லும் இரண்டாவதாக 24.06.2005லும் மூன்றாவதாக 05.03.2018லும் திருக்குட முழுக்கு விழாக்கள்

நடைபெற்றன. இத்திருக்கோயிலில் விநாயகர் பெருமானும், பாலமுருகனும் பேச்சியம்மனும் அருளுகின்றனர்.

**திருவாலங்காடு ஸ்ரீ வடாரண்யேஸ்வரர் திருக்கோயில்**

திருவாவடுதுறை திருக்கோயிலின் வடகிழக்கே 1½ கி.மீ. தொலைவில் ஸ்ரீ வடாரண்யேஸ்வரர் திருக்கோயில் உள்ளது. மேற்கு நோக்கிய திருச்சன்னிதி. அம்மன் - வண்டார்குழலியார். தலவிருட்சம் - ஆலமரம். தீர்த்தம் - புத்திரகாமேஸ்வரத் தீர்த்தம். இக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது.

மூன்றாம் குலோத்துங்கச் சோழனால் கற்றளியாக்கம் பெற்ற இத்திருக்கோயில் புராணச் சிறப்பும் வரலாற்றுப் பெருமையும் கொண்டது. உமாதேவியார், பிரமன், இந்திரன், பரத மன்னன் போன்றாரால் வழிபடப்பெற்றத் திருத்தலம். பிரமன், இந்திரன் முதலானவர்களுக்குப் புத்திரப் பாக்கியம் அளித்தருளிய புத்திர காமேசுவரர் தனிச்சந்நிதி இக்கோயிலின் தனிச்சிறப்புகளில் ஒன்று.

இக்கோயிலிலுள்ள நடராசப் பெருமானின் திருவுருவத்தின் வலப்பக்கத்தில் திருமால் பஞ்சமுக வாத்தியம் வாசிக்கும் சிலை உள்ளது. தெற்கு பிரகாரத்திலுள்ள அறுபத்து மூவர் நாயன்மார்களின் சிலைகளுக்கு இடையில் இயமனும் அவன் மனைவி சுதர்மதாவும், சித்ரகுப்தனும் உள்ளனர். நீங்காத சுரநோயைத் தீர்த்தருளும் சுரவரதேசுவரர் தனிச் சன்னிதியும் இங்குண்டு. இக்கோயிலை எழுப்பிய சோழமன்னனின் சிலை ஒன்று இங்குள்ளது. இம்மன்னது தலையில் சிவன் திருவடி அமைந்துள்ளது. பத்மாசனத்தில் திருஞான சம்பந்தரும், பரவையார், சங்கிலியார் உடனாய சுந்தரமூர்த்தி நாயனாரும் சிலாரூபங்களாக இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ளனர்.



10.06.1987ல் இத்திருக்கோயிலிலுள்ள விநாயகர், முருகன், அம்மன் கோயில்களில் குடமுழுக்குவிழா நடைபெற்றுள்ளன. அதன்பிறகு திருக்கோயில் முழுவதும் திருப்பணிகள் செய்யப் பெற்று திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாணை வழி மிகு சிறப்புடன் நடைபெற்றது.

## திருவாவடுதுறை ஊராட்சி

திருவாவடுதுறை கிராமம் கிழக்கே குச்சிப் பாளையம், தெற்கே மல்லார்பேட்டை, மேற்கே தி. மேலக்கடை (நரசிங்கன்பேட்டை), வடக்கே திருவாலங் காடு என நான்கு எல்லைகளைக் கொண்டுள்ளது. இவ்வூரில் தார்ச்சாலைகள், கற்சாலைகள், மண்சாலைகள், சிமெண்ட் சாலை என 61 தெருக்கள் உள்ளன. மொத்தம் 2010 வீடுகள் உள்ளன. எல்லாத் தெருக்களுக்கும் குடிநீர் வசதி செய்து கொடுக்கப்பட்டுள்ளது. அடிபம்பு, போர்பம்பு என 56ம், விசைப் பம்புகள் 16ம் உள்ளன. 71 தெரு மின்விளக்குகள் பொருத்தப்பட்டு நல்ல நிலையில் பராமரிக்கப்பட்டு வருகின்றன.

**குளங்கள்**

இயற்கை வளத்துடன் உள்ள இத்திருவாவடுதுறை கிராமத்தில் காவிரியாறு, மஞ்சள் ஆறு, வீரசோழன் ஆறு என மூன்று ஆறுகளும், திருக்குளம், அரியாண்டிக் குளம், கோட்டு மாங்குளம், முடுக்குத் தெரு குளம், வடக்குத் தெரு தாமரைக் குளம், ரயிலடி அல்லிக்குளம், மறைஞான தபோவனக்குளம், புதுத்தெரு சுண்டிக்குளம், பள்ளிவாசல் குளம், பள்ளிக் கூடத்துக் குளம், செக்கடி மாரியம்மன் குளம், வண்ணான் குளம், கண்ணான் குளம், அம்மா குளம், தேரடி குளம், தெற்குவீதி அல்லிக்குளம்,

தெற்கு முகப்பு மடத்துக்குளம் என 17 குளங்களும் உள்ளன.

**கோயில்கள்**

புராதனமான ஆவடுதுறையரனார் (கோமுத்தீஸ்வரர்) திருக்கோயில் பெயரையே ஊரின் பெயராகக் கொண்ட இத்திருவாவடுதுறை திருத்தலத்தில் பெரிய கோயிலைச் சுற்றி சிறியதும் பெரியதுமாக பல கோயில்கள் உள்ளன. நான்கு முக்கிய வீதிகளின் மூலைகளில் ஈசான்யவிநாயகர் திருக்கோயில், அன்னைக்கு வழிகாட்டிய விநாயகர் கோயில், மெய்க்கும் விநாயகர் கோயில், ஞானசம்பந்த விநாயகர் கோயில் என நான்கு விநாயகர் கோயில்கள் உள்ளன. இவை தவிர தெற்குவீதி மேல்புற எல்லையில் திரௌபதியம்மன் கோயில், அதன் மேற்கே மாரியம்மன் கோயில், மேலக்கடை தில்லை மகா மாரியம்மன் திருக்கோயில், சப்பாணித் தெரு பிரஹன்ன நாயகி (காளியம்மன்) கோயில், காமாட்சியம்மன் கோயில், வடக்குவீதி வீரப்த்திரர் கோயில், கீழவீதி ஐயனார் கோயில், இந்தியன் ஓவர்சீஸ் வங்கி தெருவில் வடபத்ர காளியம்மன் கோயில், வடக்கு எல்லையில் சந்தி விநாயகர் கோயில், செக்கடி ஸ்ரீ நினைத்ததை முடிக்கும் மகா மாரியம்மன் கோயில், மோட்டுத் தெரு பாப்பாமாரியம்மன் கோயில், முடுக்குத் தெரு பிள்ளையார் கோயில், இந்திராகாலனி பிள்ளையார் கோயில், குச்சிப்பாளையம் பிள்ளையார் கோயில், பரங்கிமேடு காளியம்மன் கோயில், கிழக்கு எல்லையில் பிடாரியம்மன் கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன. மேலும் வடக்குப் புறத்தில் திருவாவடுதுறை வளைவு (Arch) அருகே முனீசுவரர் கோயில், மேலத்தெரு காமன் கோயில், ரயில்வேகேட் முனீசுவரர், எனப் பல சிறுகோயில்களும் உள்ளன.

**அலுவலகங்களும் பள்ளிகளும்**

திருவாவடுதுறை ஊராட்சியில் அரசாங்க



அலுவலகங்கள் உள்ளன. அவையாவன : கீழவீதியில் ஊராட்சி ஒன்றிய அலுவலகம், கிராம நிர்வாக அலுவலகம், இரண்டு நியாயவிலைக் கடைகள், மாவட்டக் கிளை நூலகம் ( வேலை நேரம் காலை 9.00 - 12.30 மற்றும் 3 - 6. வெள்ளி, இரண்டாவது சனிக்கிழமை, அரசுப் பொது விடுமுறை நாட்கள் ஆகிய நாட்களில் நூலகம் விடுமுறை ) மேலக்கடை ஊராட்சி ஒன்றியத் தொடக்கப்பள்ளி, பள்ளிவாசல் தெரு தொடக்கப்பள்ளி, பெரியகோயிலுக்கு வடக்குப்புறமுள்ள அரசு உயர்நிலைப் பள்ளி, மதீனாத் தெரு தொடக்கப்பள்ளி, தெற்குவீதியில் திருவாவடுதுறை ஆதீனம் நடுநிலைப் பள்ளி, ஆதீன ஸ்ரீ நமசிவாயமூர்த்தி மழலையர் மற்றும் தொடக்கப் பள்ளி ஆகியவை உள்ளன.

**ஆதீன சரஸ்வதி மகால் நூல்நிலையம்**

இவ்வூரில் பழம்பெருமைவாய்ந்த திருவாவடுதுறை ஆதீனம் மடாலயத்தின் தெற்குப் புறத்தில் பழமைவாய்ந்த ‘ஆதீன சரஸ்வதி மஹால் நூல் நிலையம்’ உள்ளது. பழைய ஓலைச் சுவடிகள் பலவும் பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட பழைய புதிய நூல்களும் உள்ளன. (வேலை நேரம் காலை 9 - 12 மதியம் 2 - 5 ) இந்நூலகத்திற்கு வெளியூர், வெளி மாநிலங்களிலிருந்தும் தமிழறிஞர்களும், ஆராய்ச்சியாளர் களும், சோதிடர்களும், ஓலைச் சுவடி ஆய்வாளர்களும் தினந்தோறும் பெற்று படித்து குறிப்பெடுத்தும் பயன்பெறுகின்றனர்.விற்பனைக்கும் ஆதீன வெளியீடுகள் உள்ளன.

**திருவாவடுதுறை ஆதீனம் நடுநிலைப்பள்ளி**

திருவாவடுதுறை தெற்கு வீதியில் திருவாவடுதுறை ஆதீனம் நடுநிலைப்பள்ளி உள்ளது. இப்பள்ளி 02.12.1950ல் ஆதீனத்து இருபதாவது குரு மகா சந்நிதானம் ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள்





அவர்களால் தொடங்கியருளப் பெற்றுள்ளது. 2000ஆம் ஆண்டில் பொன்விழா கண்ட இப்பள்ளியில் 11.11.2009ல் அறுபதாம் ஆண்டு தொடக்கவிழா நடைபெற்றது. இருபத்து மூன்றாவது குருமூர்த்திகள் ஸ்ரீ சிவப்பிரகாச தேசிகர் அவர்களின் மணிவிழா நன்னாளாகிய அன்றைய தினத்தில் இப்பள்ளியில் புதிதானக் கட்டிடங்களும், மைதானமும் நுழைவு வாயிலும் மற்றும் கட்டிட விரிவாக்கமும் செய்தருளப் பெற்றுள்ளன.

இப்பள்ளி மாணவ மாணவிகளுக்கு ஏட்டு கல்வியுடன் வாரந்தோறும், தேவார, யோகப் பயிற்சி வகுப்புகளும், வியாழக்கிழமைகளில் கோமுத்தீசுவரத் திருக்கோயில் தரிசனமும் நடைபெறுகின்றன. மாணவர்கள் கல்வியிலும், நல்லொழுக்க நெறிகளிலும் சிறந்து விளங்குகின்றனர்.

## சித்தர்கள் வாழும் ஞானபூமி

திருவாவடுதுறை திருத்தலத்திற்கு 'நவகோடி சித்தபுரம்' என்றதொரு பெயரும் உண்டு. நவம் என்பதற்கு புதிய, ஒன்பது போன்று பல பொருள்கள் உள்ளன. புதிதுபுதிதாக சித்தர்கள் பலரும் கண்களுக்குப் புலப்பட்டும் புலப் படாமலும் இன்றும் இவ்வூரில் சஞ்சரிப்பதாக ஐதீகம் உண்டு. சித்தர்கள் எண்ணிக்கை அடிப்படையில் பலர் இருப்பதால் நவகோடி சித்தர்புரம் என்ற பெயர் வழங்கலாயிற்று என்றும் கூறுவர்.

இத்திருவாவடுதுறை திருத்தலத்திற்கு நவகோடி சித்தபுரம் என்றொரு பெயரும் உண்டு. அகத்தியர், திருமூலர், போகர், திருமாளிகைத் தேவர், கருவூர்ச் சித்தர், கொங்கணச் சித்தர் முதலான மாபெரும் சித்தர்கள் இத்தலத்தில் கோமுத்திநாததரை வழிபட்டு பல அற்புதங்களைச் செய்தருளிய திருத்தலம் இது. இன்றும் சித்தர்கள் பலர் இத்தலத்தில் உலவிவருவதாக ஐதீகம்.



நவகோடி சித்தர்கள் இத்தலத்தில் அருள்பெற்று சிறந்தமைக்கு புராண வரலாறும் உண்டு. முன்னொரு காலத்தில் திருக்கயிலையில் வாழும் நவகோடி சித்தர்கள் அனைவரும் ஒருங்கு கூடி ஒருநாள், கயிலை நாதனைப் பணிந்து, "கருணைக் கடலே! உமையொரு பாகனே! எங்களின் ஆணவ இருள் மலத்தைப் போக்கி ஆட்கொண்ட இக்கயிலை போல, பூலோகத்திலும் ஒரு தலத்தில் மகிழ்வுடன் நாங்கள் இறைபணி செய்ய எங்களுக்கு அருள வேண்டும்" என முறையிட்டனர்.

சிவபெருமானும் நவகோடி சித்தர்களைத் திருநோக்கம் செய்து, "சித்தர்களே! இத்திருக்கயிலை போல் பூலோகத்திலும் யாம் உமையொடு விரும்பித் தங்கியருளும் தலம் கோமுத்தித் தலமாகிய திருஆவடு துறை ஆகும். அத்தலத்திற்கு வருக" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

நவகோடி சித்தர்கள் திருவாவடுதுறைக்கு இறைவனின் அருளாணையின்படி வந்து அருள்மிகு ஆவடுதுறை அரனை முறைப்படித் தொழுது போற்ற, சிவபெருமானும் உமையன்னையொடு திருக்கயிலைக் காட்சியை அச்சித்தர்கள் குழாத்திற்குக் காட்டியருளி, சித்தி, முத்திகளை தந்தருளினார். அதனால் பெருமகிழ்வு எய்திய நவகோடி சித்தர்கள் இத்திருத்தலத்திலேயே போதி மரங்களின் நிழல்களில் தங்கி யோகிருந்தனர் என்று இவ்வூர் புராணமான 'துறைசைப் புராணம்' எடுத்துரைக்கிறது.

நவகோடி சித்தர்புரம் என்பதற்கேற்ப இத்தலத்தில் இன்றும் ஒன்பது சித்தர்களின் ஞானசமாதித் திருக் கோயில்கள் உள்ளன. இவர்களில் முதன்மையானவர் திருமூலர். இவர் இங்கு 3000 ஆண்டுகள் தவமிருந்து ஆண்டிற்கு ஒரு பாடலாக 3000 திருமந்திரப் பாடல்களை அருளி இத்திருக்கோயிலின் வாயுமூலையில் ஜீவ சமாதியாக எழுந்தருளுகின்றார்.

போகச் சித்தருடைய மாணாக்கராகிய திருமாளிகைத் தேவர் இத்தலத்தில் தங்கியிருந்து நாள்தோறும் காவிரியிலிருந்து தீர்த்தம் எடுத்துவந்து கோமுத்தி நாதரை அபிஷேகித்து வழிபட்டு பல அற்புதங்களைச் செய்தருளி, இக்கோயிலின் தென்பால் தனிக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார். தற்போது இவரது ஞானசமாதித் திருக்கோயில் ஆதீன மடாலயத்தில் நமசிவாய மூர்த்திகளின் ஞானத் திருக்கோயிலுக்கு வடபால் உள்ளது. தினந்தோறும் சிவாசாரியர்களால் வழிபாடு நடைபெறுகிறது. நாள்தோறும் இத்திருமாளிகைத் தேவரை வழிபாடு நிகழ்ந்த பிறகே ஆதீனக் குருமுதல்வராகிய ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளுக்கு நாள் வழிபாடு நடைபெறுகிறது.

சிவஞானமுடையார் என்ற சித்தர் இத்திருத் தலத்தில் வாழ்ந்து பல அருள் அற்புதச் செயல்களைச் செய்தருளினார். இவரின் ஞான சமாதி கோயில் திருமஞ்சன வீதியில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இன்றும் திருமாளிகைத் தேவர் வழிபாடு நிகழ்ந்தபின் அந்த சிவாசாரியராலேயே இக்கோயிலுக்கு வழிபாடு நிகழ்த்தப் பெறுகிறது.

மேலும் மேலாடு சித்தரின் ஞான சமாதி திருவாவடு துறையின் மேற்கு எல்லையில் உள்ளது. கரம் போக்குச் சித்தரின் ஞான சமாதி இவ்வூரின் வடக்கு எல்லையில் காவிரிகரைக்கருகில் உள்ளது. கொங்கணச் சித்தரின் ஞான சமாதி ஈசான திசையில் கொங்கணர் தோப்பில் உள்ளது. இங்கு சிவலிங்கம், கோயில், கோரூபாம்பிகை இருந்தன என்பர். முக்காடு சித்தரின் ஞான சமாதி கோயில் இத்தலத்தின் கீழ் எல்லையில் உள்ளது. அண்மையில் இக்கோயில் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் திருப்பணிகள் நிறைவேற்றப்பட்டு திருக்குடமுழுக்கு விழா நடைபெற்றுள்ளது. அரியக்குடிச் சித்தரின் ஞான சமாதி



இவ்வூரின் தென்கிழக்கு எல்லையில், அரியாண்டி குளத்தருகே உள்ளது. தற்போது இங்கு லிங்கம் ஒன்று மட்டுமே உள்ளது. மறைஞானசித்தர் சமாதி ஆதீன மறைஞான தேசிகர் தபோவனத்தில் உள்ளது. இங்கு ஆதீன இரண்டாவது குரு மகா சந்நிதானமாகிய மறைஞான தேசிகரின் சமாதித் திருக்கோயில் உள்ளது. குறிப்பாக இத்தபோவனத்தில் இன்றும் சித்தர்கள் நடமாட்டம் அதிகமாக உள்ளது. உணர்ந்தோர் அறிவர். அறிந்தோர் உணர்வர்.



திருமாளிகைத் தேவர்



திருமூலரின் ஞான
சமாதித் திருக்கோயில்

உ
சிவமயம்

# திருவாவடுதுறைத் திருப்பதிகங்கள்

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

### திருப்பதிக வரலாறு

ஆவடுதுறை எந்தையார் அடித்தலங்களே அந்தமில் பொருள் என்று எண்ணித் திருக்கோயிலை அடைந்து, "ஈய நிதி இலேன் உன் அடி அல்லது ஒன்று அறியேன்" என்று பேரருள் வினவிய இத்திருப்பதிகம் ஞானசம்பந்தர் தம் தந்தையார் செய்யும் வேள்விக்குப் பொன்வேண்டிப் பாடியருளியது.

நாலடி மேல்வைப்பு. பண் - காந்தாரப் பஞ்சமம்
திருச்சிற்றம்பலம்

*இடரினும் தளரினும் எனதுறுநோய்*
*தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்*
*கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை*
*மிடறினில் அடக்கிய வேதியனே*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.* 1

இதன் பொருள் : ஆவடுதுறை உறை அரனே! துன்பம், தளர்ச்சி, வினைத் தொடர்ச்சி ஆகிய எக்காலத்தும் உன்னுடைய திருவடிகளைத் தொழுதெழுவேன். திருப்பாற்கடலில் அமுதோடுகலந்து தோன்றிய நஞ்சை உண்டு உலகைக் காத்த வேதியனே! *வேள்விக்காகத் தந்தையார் கேட்கும் பொருளைத் தனையன் கொடுக்கமுடியாத நிலை உண்டானால் அடியவரை இறைவன் ஆட்கொள்ளும் நிலை இதுவோ என்று உலகம் கூறும். அதுவோ உனது இன்னருள்!

---

*நாலடிமேல்வைப்பாகவரும் இவ்வரிகளின் பொருளை ஏனையபாடல்தோறும் கூட்டுக.



*வாழினும் சாவினும் வருந்தினும்போய்*
*வீழினும் உனகழல் விடுவேன் அல்லேன்*
*தாழிளந் தடம்புனல் தயங்குசென்னிப்*
*போழிள மதிவைத்த புண்ணியனே*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.* 2

கங்கையும், இளம்பிறையும் விளங்குகின்ற சென்னியை உடைய புண்ணியனே! வாழ்வு, சாவு, வருத்தம், வீழ்வு ஆகிய எக்காலத்தும் உன் திருவடிகளை விடமாட்டேன்.

*நனவினும் கனவினும் நம்பாஉன்னை*
*மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்*
*புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த*
*கனல்எரி அனல்புல்கு கையவனே.*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.* 3

புனலையும் கொன்றைப்பூவையும் முடியில் அணிந்தும் கையில் தீயை ஏந்தியும் திகழ்பவனே! நனவு கனவு ஆகிய எக்காலத்திலும் உன்னை வழிபடுதலை மறவேன்.

*தும்மலொ டருந்துயர் தோன்றிடினும்*
*அம்மலர் அடியலால் அரற்றாதென் நாக்*
*கைம்மல்கு வரிசிலைக் கணையொன்றினால்*
*மும்மதில் எரிஎழ முனிந்தவனே*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.* 4

கையில் ஏந்திய வில்லில் தொடுத்த கணை ஒன்றால் மூன்று மதில்களை அழித்தவனே! தும்மல், இருமல், அரிய துன்பங்கள் ஆகியன வருங்காலத்தும் அழகிய மலர்போன்ற உன் திருவடிகளையல்லாது அரற்றாது என்நா.

*கையது வீழினும் கழிவுறினும்*
*செய்கழல் அடியலால் சிந்தைசெய்யேன்*
*கொய்யணி நறுமலர் குலாயசென்னி*
*மையணி மிடறுடை மறையவனே*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.* 5

கொய்யப்பட்ட அழகிய நறிய மலர்கள் விளங்கும் திருமுடியையும் நீலகண்டத்தையும் உடையவனே! கைப்பொருள் தவறினாலும், வேறுவகை இழப்புக்கள் உண்டானாலும் உனது சிவந்த திருவடிகளை அல்லது வேறொன்றையும் சிந்தை செய்யேன்.

*வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்*
*எந்தாய்உன் னடியலால் ஏத்தாதென்நா*
*ஐந்தலை யரவுகொண் டரைக்கசைத்த*
*சந்தவெண் பொடியணி சங்கரனே*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.* 6

ஐந்தலை நாகத்தை இடையில் கட்டி, சந்தனமும் திருநீறும் அணிந்து விளங்கும் சங்கரனே! எந்தையே! கொடிய துன்பம் உண்டானபோதும் அச்சம் உண்டானபோதும் உன் அடியல்லால் ஏத்தாது எனது நா.

*வெப்பொடு விரவியோர் வினைவரினும்*
*அப்பாவுன் அடியலால் அரற்றாதென்நா*
*ஒப்புடை ஒருவனை உருவழிய*
*அப்படி அழலெழ விழித்தவனே*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே.* 7

அழகில் தனக்குத்தானே ஒப்பாக விளங்கும் மன்மதனை எரித்தழித்தவனே! அப்பா ! கொடிய வெம்மையை விளைக்கும் தீவினை என்னைத் தாக்கினும் என்நா உன் திருவடிகளையே ஏத்தும்.



*பேரிடர் பெருகியோர் பிணிவரினும்*
*சீருடைக் கழல்அலால் சிந்தைசெய்யேன்*
*ஏருடை மணிமுடி யிராவணனை*
*ஆரிடர் படவரை அடர்த்தவனே*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே.* 8

அழகிய மணிமுடியை உடைய இராவணனை இடர்ப் படுமாறு அடர்த்த இறைவனே! பெருந்துன்பத் தோடு பிணிவந்தாலும் உனது சீருடைக்கழல்களை யல்லால் சிந்தைசெய்யேன்.

*உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்*
*ஒண்மல ரடியலால் உரையாதென்நா*
*கண்ணனும் கடிகமழ் தாமரைமேல்*
*அண்ணலும் அளப்பரி தாயவனே*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே.* 9

திருமாலும் பிரமனும் அளந்துகாண இயலாத அடி முடியுடையவனே! உண்ணும்போதும், பசி வரும் போதும், உறங்கும்போதும் நின் திருவடிகளையல்லாது என்நா உரையாது,

*பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்*
*அத்தாவுன் னடியலால் அரற்றாதென்நா*
*புத்தரும் சமணரும் புறன்உரைக்கப்*
*பத்தர்கட் கருள்செய்து பயின்றவனே.*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே.* 10

புத்த சமயத்தாரும், சமண சமயத்தாரும் புறங்கூறப் பத்தர்கட்கு அருள் செய்யும் பரமனே! அத்தா! பித்து ஏறி மயங்கிப் பிணிவாய்ப்பட்டு இடர் உறினும் உன் அடியல்லால் என்நா அரற்றாது.

*அலைபுனல் ஆவடு துறைஅமர்ந்த*
*இலைநுனை வேற்படை யெம்இறையை*
*நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன*
*விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார்*
*வினையாயினநீங் கிப்போய் விண்ணவர் வியனுலகம்*
*நிலையாகமுன் ஏறுவர் நிலமிசை நிலையிலரே.* 11

திருச்சிற்றம்பலம்

அலைபுனல் சூழ்ந்த ஆவடுதுறையிலமர்ந்த, இலைபோன்ற நுனியை உடைய முத்தலைச் சூலம் ஏந்திய எம் இறைவன்மீது ஞானசம்பந்தன் பொன்பெறும் பொருட்டுப் பாடிய இப்பதிகத்தை ஓதுபவர் வினைகள் யாவும் நீங்கி விண்ணவர் வியனுலகினை நிலையாகப் பெறுவர்.



திருஞானசம்பந்த சுவாமிகள்

உ
சிவமயம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய
## திருப்பதிக வரலாறு

திருநாவுக்கரசு நாயனார் திருவீழிமிழலையினின்று அரிதின்நீங்கி, பூவிற்பொலியும் புனற்பொன்னிக்கரை போய்ப் பணிவாராய்ப், பொற்பு அமைந்த ஆவுக்கு அருளும் ஆவடுதண்டுறையார் பாதம் அணைந்து இறைஞ்சி, ஞானபோனகர்க்குச் செம்பொன் ஆயிரம் பாவுக்கு அளித்த திறம் போற்றியது இத்திருப்பதிகம்.

### திருநேரிசை
திருச்சிற்றம்பலம்

*மாயிரு ஞாலமெல்லா மலரடி வணங்கும்போலும்*
*பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர்போலும்*
*காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க்கம்பொன்*
*ஆயிரங் கொடுப்பர்போலு மாவடு துறையனாரே.* 1

ஆவடுதுறை இறைவர், பரந்து விரிந்த இவ்வுலகம் ஏத்தும் அடிமலர்களை உடையவர். கங்கையைச் சடைமிசை வைத்தவர். கழுமல நகரில் தோன்றிய ஞானசம்பந்தர்க்கு ஆயிரம் பொன் கொடுத்தவர்.

*மடந்தைபா கத்தர்போலு மான்மறிக் கையர்போலும்*
*குடந்தையிற் குழகர்போலுங் கொல்புலித் தோலர்போலும்*
*கடைந்தநஞ் சுண்பர்போலுங் காலனைக் காய்வர்போலும்*
*அடைந்தவர்க் கன்பர்போலு மாவடு துறையனாரே.* 2

உமையம்மையை ஒருகூற்றில் உடையவர். மானைக் கையில் ஏந்தியவர். குடந்தை நகரில் விளங்குபவர். கொல் புலித்தோலை அணிந்தவர். நஞ்சுண்டவர். காலனைக் காய்ந்தவர். தன்னை அடைந்தவர்க்கு அன்பர்.

*உற்றநோய் தீர்ப்பர்போலு முறுதுணை யாவர்போலும்*
*செற்றவர் புரங்கண்மூன்றுந் தீயெழச் செறுவர்போலும்*
*கற்றவர் பரவியேத்தக் கலந்துலந் தலந்துபாடும்*
*அற்றவர்க் கன்பர்போலு மாவடு துறையனாரே.* *3*

நம்மை அடைந்த மும்மல நோயைத் தீர்ப்பவர். நமக்கு உறுதுணையானவர். முப்புரங்களைத் தீயெழச் செய்தவர்.கற்றவர்கள் பரவிஏத்த அற்றவர்கட்கு அன்பாய் விளங்குபவர்.

*மழுவமர் கையர்போலும் மாதவள் பாகர்போலும்*
*எழுநுனை வேலர்போலும் என்புகொண் டணிவர்போலும்*
*தொழுதெழுந் தாடிப்பாடித் தோத்திரம் பலவுஞ்சொல்லி*
*அழுமவர்க் கன்பர்போலு மாவடு துறையனாரே.* *4*

மழுவேந்திய மாதொருபாகர், கூரிதாய் எழுந்த முத்தலை வேலர், என்புமாலை அணிந்தவர். தொழுதெழுந்து ஆடிப் பாடித் தோத்திரம் பலவும் சொல்லி அழும் அடியார்களுக்கு அன்பர்.

*பொடியணி மெய்யர்போலும் பொங்குவெண் ணூலர்போலும்*
*கடியதோர் விடையர்போலுங் காமனைக் காய்வர்போலும்*
*வெடிபடு தலையர்போலும் வேட்கையாற் பரவுந்தொண்டர்*
*அடிமையை ஆள்வர்போலு மாவடு துறையனாரே.* *5*

திருநீறணிந்த மேனியர். முப்புரிநூல் அணிந்தவர். விடை ஊர்தி உடையவர். காமனைக் காய்ந்தவர். தலைமாலை அணிந்தவர். விருப்போடு தன்னைப் பரவும் தொண்டரின் அடிமையை ஆள்பவர்.

*வக்கர னுயிரைவவ்வக் கண்மலர் கொண்டுபோற்றச்*
*சக்கரங் கொடுப்பர்போலுந் தானவர் தலைவர்போலும்*
*துக்கமா மூடர்தம்மைத் துயரிலே வீழ்ப்பர்போலும்*
*அக்கரை யார்ப்பர்போலு மாவடு துறையனாரே.* *6*

வக்கரன் என்னும் அசுரனைக் கொல்லக் கண்மலர்



கொண்டு போற்றி வேண்டிய திருமாலுக்குச் சக்கராயுதம் கொடுத்தவர். தானம் புரிவோரின் தலைவர். மூடர்களைத் துயரிலே வீழ்த்துபவர். அக்குமணி மாலையை இடையிலே கட்டியவர்.

*விடைதரு கொடியர்போலும் வெண்புரி நூலர்போலும்*
*படைதரு மழுவர்போலும் பாய்புலித் தோலர்போலும்*
*உடைதரு கீளர்போலு முலகமு மாவர்போலும்*
*அடைபவ ரிடர்கள் தீர்க்கு மாவடு துறையனாரே.* 7

விடை உரு எழுதிய கொடியர். வெண்புரி நூலர். மழுப்படை உடையவர். புலித்தோலுடுத்தவர். கீளுடை அணிந்தவர். எல்லா உலகமும் ஆனவர். அடைபவர் இடர்களைத் தீர்ப்பவர்.

*முந்திவா னோர்கள்வந்து முறைமையால் வணங்கியேத்த*
*நந்திமா காளரென்பார் நடுவுடை யார்கணிற்பச்*
*சிந்தியா தேயொழிந்தார் திரிபுர மெரிப்பர் போலும்*
*அந்திவான் மதியஞ்சூடு மாவடு துறையனாரே.* 8

வானோர் முறைப்படி வணங்கி ஏத்த, நந்திதேவர் மகாகாளர் முதலிய சிவகணத்தவர் உடன் நிற்க, சிந்திக்காமல் தம்மை எதிர்த்த திரிபுரத்தவரை எரித்தவர். அந்திப் பிறையை அணிந்த திருமுடியர்.

*பானம ரேனமாகிப் பாரிடந் திட்டமாலும்*
*தேனமர்ந் தேறுமல்லித் திசைமுக முடையகோவும்*
*தீனரைத் தியக்கறுத்த திருவுரு வுடையர்போலும்*
*ஆனரை யேற்றர்போலு மாவடு துறையனாரே.* 9

பத்து அவதாரங்களுள் ஒன்றான ஏனமாய் உலகை இடந்திட்ட திருமாலும், நான்கு முகங்களை உடையபிரமனும் ஆகிய இருவரின் மயக்கத்தை அறுத்த திருவுருவை உடையவர். வெள்ளேறு ஊர்பவர்.

*பார்த்தனுக் கருள்வர்போலும் படர்சடை முடியர்போலும்*
*ஏத்துவா ரிடர்கள்தீர வின்பங்கள் கொடுப்பர்போலும்*
*கூத்தராய்ப் பாடியாடிக் கொடுவலி யரக்கன்றன்னை*
*ஆர்த்தவா யலறுவிப்பா ராவடு துறையனாரே. 10*

திருச்சிற்றம்பலம்

அருச்சுனனுக்கு அருள்புரிபவர். விரிந்த சடைமுடியை உடையவர். தன்னை ஏத்துவார் இடர்களைத் தீர்த்து இன்பங்கள் கொடுப்பவர். திருக்கூத்தாடுபவர். பாடுபவர். இராவணனை அடர்த்துப் பின் அருள்செய்தவர்.

**திருப்பதிக வரலாறு**

முதன்முறை துறைசையிற் போந்து பாடியருளியது இத்திருப்பதிகம். அடுத்த முறையிற் போந்துதான் 'மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும் போலும்' என்னுந் தொடக்கத்துத் திருப்பதிகம் பாடியருளியதாகக் கூறுவர்.

திருநேரிசை
திருச்சிற்றம்பலம்

*மஞ்சனே மணியுமானாய் மரகதத் திரளுமானாய்*
*நெஞ்சுளே புகுந்துநின்று நினைதரு நிகழ்வினானே*
*துஞ்சும்போ தாகவந்து துணையெனக் காகிநின்று*
*அஞ்சலென் றருளவேண்டு மாவடு துஞறயுளானே. 1*

ஆவடுதுறையுளானே! வலிமை உள்ளவனே! மணியும், மரகதக் கொத்தும் ஆனவனே! நெஞ்சுள் புகுந்து நின்று நினைப்பைத் தருபவனே! நான் இறக்கும்போது எனக்குத் துணையாகி வந்து அஞ்சல் என்று அருள்புரியவேண்டும்.

*நானுகந் துன்னைநாளும் நணுகுமா கருதியேயும்*
*ஊனுகந் தோம்புநாயே னுள்ளூற வைவர்நின்றார்*



*தானுகந் தேயுகந்த தகவிலாத் தொண்டனேனான்*
*ஆனுகந் தேறுவானே யாவடு துறையுளானே. 2*

ஆனுகந்து ஏறுவானே! நான் உன்னை விரும்பி அடையுமாறு நீ கருதியும் கூட நாயேன் ஊனுடம்பை உகந்து ஓம்புகின்றேன். என்னுள்ளே ஐம்பொறிகளாகிய கள்வர் உள்ளனர். அடியேன் உன்னை உகவாது என்னையே உகந்து திரியும் தொண்டன் ஆயினேன்.

*கட்டமே வினைகளான காத்திவை நோக்கியாளாய்*
*ஒட்டவே யொட்டிநாளு முன்னையுள் வைக்கமாட்டேன்*
*பட்டவான் றலைகையேந்திப் பலிதிரிந் தூர்கடோறும்*
*அட்டமா வுருவினானே யாவடு துறையுளானே. 3*

பிரம கபாலத்தைக் கையில் ஏந்தி ஊர்கள்தோறும் பலி யேற்றுழலும் அட்டமூர்த்தி வடிவினனே! என் உயிரோடு நீ ஒட்டும்படி நான் உன்னோடு ஒட்டி நாளும் உன்னை என்னுள்ளே வைக்கமாட்டாதவனானேன். துன்பங்கள் உளவாதற்குக் காரணமான வினைகளைத் தடுத்து என்னை ஆளாய்.

*பெருமைநன் றுடையதில்லை யென்றுநான் பேசமாட்டேன்*
*ஒருமையா லுன்னையுள்கி யுகந்துவா னேறமாட்டேன்*
*கருமையிட் டாயவூனைக் கட்டமே கழிக்கின்றேனான்*
*அருமையா நஞ்சமுண்ட வாவடு துறையுளானே. 4*

உண்ணுதற்கு அரியதான நஞ்சை உண்ட இறைவனே! ஒருமுறையேனும் உன் திருத்தலம் என்று பேசிச் சிவநல்வினை தேடிக்கொள்ளமாட்டேன். உன்னை நினைத்து உயர்ந்து வீட்டுலகை அடைய மாட்டேன். ஊனுடம்பைப் பேணிக் கட்டத்திலே கழிக்கின்றேன்.

*துட்டனாய் வினையதென்னுஞ் சுழித்தலை யகப்பட்டேனைக்*
*கட்டனா வைவர்வந்து கலக்காமைக் காத்துக்கொள்வாய்*





*மட்டவிழ் கோதைதன்னை மகிழ்ந்தொரு பாகம்வைத்து*
*அட்டமா நாகமாட்டு மாவடு துறையுளானே. 5*

உமையம்மையை ஒருபாகத்தே வைத்தவனே! எட்டுவகைப் பாம்புகளைப் பிடித்தாட்டும் இறைவனே! துட்டனாய் வினைகள் என்னும் சுழியிலகப்பட்ட என்னைப் பாசத்தால் கட்டப்பட்டவனாய் ஐவர் வந்து கலக்காமை ஆட்கொண்டருளுவாய்.

*காரழல் கண்டமேயாய் கடிமதிள் புரங்கள்மூன்றும்*
*ஓரழ லம்பினாலே யுகைத்துத்தீ யெரியமூட்டி*
*நீரழற் சடையுளானே நினைப்பவர் வினைகள் தீர்ப்பாய்*
*ஆரழ லேந்தியாடு மாவடு துறையுளானே. 6*

அரிய அழலை ஏந்தியாடும் ஆவடுதுறை இறைவனே! அழல்போன்ற கரிய நஞ்சைக் கண்டத்தில் உடையவனே! முப்புரங்களை ஓரழல் அம்பினால் எரித்தவனே! கங்கையைச் சூடிய அழல்போலும் சிவந்த சடையை உடையவனே! உன்னை நினைப்பவர் வினைகளைத் தீர்த்தருளுவாயாக.

*செறிவிலேன் சிந்தையுள்ளே சிவனடி தெரியமாட்டேன்*
*குறியிலேன் குணமொன்றில்லேன் கூறுமா கூறமாட்டேன்*
*நெறிபடு மதியொன்றில்லேன் நினையுமா நினையமாட்டேன்*
*அறிவிலே னயர்த்துப்போனே னாவடு துறையுளானே.7*

சிந்தையில் செறிவில்லாதேன். சிவனடிகளைத் தரிசிக்கமாட்டேன். குறிக்கோள் இல்லாதேன். குணம் இல்லாதேன். தோத்திரங்களில் கூறுமாறு உன்புகழ் கூறமாட்டேன் திருவருளில் செலுத்தும் அறிவிலேன். நினையுமாறு நினையமாட்டேன். இவ்வாறு செய்தலால் அறிவிலாத நான் அயர்த்துப் போனேன். என்னை ஆண்டருள்.

*கோலமா மங்கைதன்னைக் கொண்டொரு கோலமாய*
*சீலமே யறியமாட்டேன் செய்வினை மூடிநின்று*



*ஞாலமா மிதனுளென்னை நைவியா வண்ணம்நல்காய்*
*ஆலமா நஞ்சமுண்ட வாவடு துறையுளானே. 8*

ஆலகால விடத்தை உண்ட ஆவடுதுறை இறைவனே! மாதொரு கூறராய் விளங்கும் உமது திருக்கோலத்தின் உண்மையை அறியேன். யான் செய்த வினைகள் இவ்வுலகில் என்னைத் துன்புறுத்தாத வண்ணம் அருள்புரிவாயாக.

*நெடியவன் மலரினானுந் நேர்ந்திரு பாலுநேடக்*
*கடியதோ ருருவமாகிக் கனலெரி யாகிநின்ற*
*வடிவின வண்ணமென்றே யென்றுதாம் பேசலாகார்*
*அடியனே னெஞ்னுள்ளா ராவடு துறையுளானே. 9*

திருமாலும் பிரமனும் கீழும் மேலும் ஆகிய இருபாலும் தேடுமாறு எரியுருவாகி நின்றதன் தன்மை இத்தகையது என்று பேசுதற்கியலாதவர். அத்தகைய இறைவர் அடியேன் நெஞ்சினில் நிறைந்து விளங்குகின்றார்.

*மலைக்குநே ராயரக்கன் சென்றுற மங்கையஞ்சத்*
*தலைக்குமேற் கைகளாலே தாங்கினான் வலியைமாள*
*உலப்பிலா விரலாலூன்றி யொறுத்தவற் கருள்கள் செய்து*
*அலைத்தவான் கங்கைசூடு மாவடு துறையுளானே. 10*

திருச்சிற்றம்பலம்

திருக்கயிலையங்கிரிக்குச் சென்று உமையம்மை அஞ்ச மலையைத் தலைக்குமேல் தூக்கிப் பிடித்துத் தாங்கிய இராவணனின் வலிமைமாளக் கால்விரலால் ஊன்றி ஒறுத்துப் பின் அவனுக்கு அருள்கள் செய்தவர். கங்கையைத் தலையில் சூடியவர்.





## திருப்பதிக வரலாறு

ஆண்டஅரசு திருக்கோடிக்காவைப் பணிந்து ஆவடுதண்டுறையைச் சார்ந்து திருத்தாண்டகம் முன்னருளிச் செய்து திருத்தொண்டு போற்றிச் செய்வாராகிப் பலநாள் தங்கிப் பாடியருளியவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம்.

திருக்குறுந்தொகை
திருச்சிற்றம்பலம்

*நிறைக்க வாலிய ளல்லளிந் நேரிழை*
*மறைக்க வாலிய ளல்லளிம் மாதராள்*
*பிறைக்க வாலப் பெரும்புன லாவடு*
*துறைக்க வாலியோ டாடிய சுண்ணமே.* 1

தலைவனைக்கண்டு மயங்கிய தலைவியின் நிலையைத் தாய் கூறுவதாக அமைந்தது இப்பதிகம்.

இப்பெண் பிறையும் கங்கையும் அணிந்த திருவாவடுதுறை யிலுள்ள இறைவன் ஆடிய திருநீற்றைப் பூசிக்கொள்ளத் தகுதியுடையவளில்லை. அதனால்வரும் துன்பங்களை மறைக்கும் வல்லமை உடையவளுமில்லை.

*தவள மாமதிச் சாயலோர் சந்திரன்*
*பிளவு சூடிய பிஞ்ஞக னெம்மிறை*
*அளவு கண்டல ளாவடு தண்டுறைக்*
*களவு கண்டன ளொத்தனள் கன்னியே.* 2

இக்கன்னி ஆவடுதுறையிலுள்ள வெண்மையான பிறை மதியைச் சூடிய பெருமான் மீது கொள்ளத்தக்க அன்பின் அளவை அறிந்தாளில்லை. ஆயினும் அவனைக் களவொழுக்கத்தால் கூடுதற்கு முயல்வாரை ஒத்தவளாவாள்.

*பாதிப் பெண்ணொரு பாகத்தன் பன்மறை*
*ஓதி யென்னுளங் கொண்டவ னொண்பொருள்*



*ஆதி ஆவடு தண்டுறை மேவிய*
*சோதி யேசுட ரேயென்று சொல்லுமே.* 3

இப்பெண் ஆவடுதுறை இறைவனை மாதொரு கூறனே என்றும், வேதங்கள் பலவற்றை ஓதியவனே என்றும் என்னுள்ளம் கவர்ந்தவனே என்றும், ஒண்பொருளே என்றும், சோதியே என்றும் கூறுவாள்.

*கார்க்கொண் மாமுகில் போல்வதோர் கண்டத்தன்*
*வார்க்கொண் மென் முலை சேர்ந்திறு மாந்திவள்*
*ஆர்க்கொள் கொன்றைய னாவடு தண்டுறைத்*
*தார்க்கு நின்றிவள் தாழுமா காண்மினே.* 4

கரிய மேகம் போன்ற கண்டத்தை உடையவனும், உமையம்மையின் மென்முலையைச் சேர்ந்து இறுமாந்தவனும், நெஞ்சைப்பிணிக்கும் கொன்றைமலர் மாலையைச்சூடியவனும், ஆவடுதுறையில் விளங்குபவனு மாகிய இறைவன் அணிந்துள்ள மாலையைப் பெறும் வேட்கையளாயுள்ளாள் இத்தலைவி ; காணுமின்.

*கருகு கண்டத்தன் காய்கதிர்ச் சோதியன்*
*பருகு பாலமு தேயெனும் பண்பினன்*
*அருகு சென்றில ளாவடு தண்டுறை*
*ஒருவ னென்னை யுடையகோ வென்னுமே.* 5

கரியகண்டத்தன், ஒளிவடிவினன், பருகத்தக்க பாலும் அமுதமும் போன்றவன். ஆவடுதுறையில் விளங்கும் அவ்விறைவனை இத்தலைவி அருகிற்சென்று கண்டாளில்லை. ஆயினும் அவனே என்தலைவன் என்று கூறுகிறாள்.

*குழலுங் கொன்றையுங் கூவிள மத்தமும்*
*தழலுந் தையலோர் பாகமாத் தாங்கினான்*
*அழக னாவடு தண்டுறை யாவெனக்*
*கழலுங் கைவளை காரிகை யாளுக்கே.* 6





கொன்றைமலர் வில்வம் முதலியவற்றை முடிமீது சூடி கையில் தழலேந்தி மாதொரு கூறனாய்வரும் ஆவடுதுறை அழகனை அழைத்து அழைத்து இத்தலைவி தனது கைவளை கழல்கிறாள்.

*பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத்*
*தஞ்ச மென்றிறு மாந்திவ் ளாரையும்*
*அஞ்சு வாளல்ல ளாவடு தண்டுறை*
*மஞ்ச னோடிவ ளாடிய மையலே.* 7

இப்பெண் ஆவடுதுறையில் உள்ள மைந்தனாகிய இறைவனோடு கூடிய மயக்கத்தால், உமாதேவியாரைத் தன்பங்கிற் கொண்ட அப்பரமனைத் தஞ்சப் பொருளாகக் கொண்டு, இறுமாப்பு எய்தி, வேறுயாரையும் அஞ்சாதவள் ஆயினாள்.

*பிறையுஞ் சூடிநற் பெண்ணொ டாணாகிய*
*நிறையும் நெஞ்சமும் நீர்மையும் கொண்டவன்*
*அறையும் பூம்பொழி லாவடு தண்டுறை*
*இறைவ னென்னை யுடையவ னென்னுமே.* 8

இப்பெண், பிறைசூடி மாதொரு பாகராக விளங்குபவரும் ஆவடுதுறையில் எழுந்தருளியவருமாகிய இறைவர் என் நிறையையும் நெஞ்சத்தையும் கொண்டவர் என்றும், அவரே என்னை உடையவர் என்றும் கூறுவாள்.

*வையந் தானளந் தானும் அயனுமாய்*
*மெய்யைக் காணலுற் றார்க்கழ லாயினான்*
*ஐய னாவடு தண்டுறை யாவெனக்*
*கையில் வெள்வளை யுங்கழல் கின்றதே.* 9

உலகை அளந்த திருமாலும் பிரமனும் அடிமுடி காண முடியாதவாறு அழலுருவாய் நிமிர்ந்தவனே, ஆவடுதுறையில் விளங்குபவனே என்று கூறுதலால் இத்தலைவியின் கைவளைகள் கழல்கின்றன.



*பக்கம் பூதங்கள் பாடப் பலிகொள்வான்*
*மிக்க வாளரக் கன்வலி வீட்டினான்*
*அக்க ணிந்தவ னாவடு தண்டுறை*
*நக்க னென்னுமிந் நாணிலி காண்மினே.* *10*

திருச்சிற்றம்பலம்

நாணத்தைக் கைவிட்ட நிலையில் இத்தலைவி ஆவடுதுறை இறைவனை நோக்கிப் பூதங்கள் பாடப் பலிகொள்பவன் என்றும், இராவணனது வலிமையை அழித்தவன் என்றும், அக்குமணிமாலை அணிந்தவன் என்றும், திகம்பரன் என்றும் பலவாறு கூறுவாள்.

**திருப்பதிக வரலாறு**

நாயனார், புனற்பொன்னியிருகரையுஞ் சார்ந்து திருச்செம்பொன்பள்ளி முதலான தலங்களை வணங்கித் திருக்கோடிக்காவிலிருந்து முதன் முறையாக ஆவடுதண்டு றையைச் சார்ந்து தொழுது, "ஆவடுதண்டுறையாரை அடைந்து உய்ந்தேன்" எனப் பாடியருளியது இத்திருப் பதிகம்.

இத்திருப்பதிகம், ஆவடுதுறை இறைவனைக் கண்டு வணங்கிய மகிழ்ச்சிமீதூர அருளியது.

திருத்தாண்டகம்
திருச்சிற்றம்பலம்

நம்பனை நால்வேதங் கரைகண் டானை
ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக்
கம்பனைக் கல்லா லிருந்தான் றன்னைக்
கற்பகமா யடியார்கட் கருள்செய் வானைச்
செம்பொன்னைப் பவளத்தைத் திரளு முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை
அம்பொன்னை யாவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே

*1.* ஆவடுதுறையில் விளங்கும் அரன் நால்வேதம் கரைகண்டவன். ஞானப்பெருங்கடல், இன்பமய மானவன், ஏகம்பன், கல்லால் நிழற்கீழ் இருந்து அறமுரைத்தவன், கற்பகமாய் அடியார்கட்கு அருள் செய்பவன். செம்பொன், பவளம், முத்து, திங்கள், ஞாயிறு, தீ, நீர் ஆனவன். அவ்விறைவனை அடியேன் அடைந் துய்ந்தேன்.

மின்னானை மின்னிடைச்சே ருருமி னானை
வெண்முகிலாய் எழுந்துமழை பொழிவான் றன்னைத்
தன்னானைத் தன்னொப்பா ரில்லா தானைத்
தாயாகிப் பல்லுயிர்க்கோர் தந்தை யாகி
என்னானை யெந்தை பெருமான் றன்னை
இருநிலமும் அண்டமுமாய்ச் செக்கர் வானே
அன்னானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 2

2. மின்னும் இடியும் ஆனவன். வெண் முகிலாய் எழுந்து மழை பொழிபவன். தன்வயமுடையவன். தன்னொப் பாரில்லாதவன். தாயும் தந்தையும் ஆனவன். எனக்குரியன், எந்தையாகிய பெருமான், இவ்வுலகும் ஏனை உலகமும் ஆனவன். செக்கர்வான் போன்ற நிறத்தினன்.

பத்தர்கள் சித்தத்தே பாவித் தானைப்
பவளக் கொழுந்தினை மாணிக் கத்தின்
கொத்தினைத் தூநெறியாய் நின்றான் றன்னைச்
சொல்லுவார் சொற்பொருளின் தோற்ற மாகி
வித்தினை முளைக்கிளையை வேரைச் சீரை
வினைவயத்தின் தன்சார்பை வெய்ய தீர்க்கும்
அத்தனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே.3

3. அடியார் உள்ளத்தில் பாவிக்கப்படுபவன். பவளக் கொழுந்து மாணிக்கக் கொத்து போல்பவன்.



தூநெறியாய் நின்றவன். சொல்லுவார் சொற்பொருளின் தோற்றமானவன். வித்தும் முளையும் வேரும் சீரும் ஆனவன். வினைப்பயன்களைத் தீர்த்து அருள்புரிபவன்.

பேணியநற் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
பித்தராம் அடியார்க்கு முத்தி காட்டும்
ஏணியை யிடர்க்கடலுட் சுழிக்கப் பட்டிங்
கிளைக்கின்றேற் கக்கரைக்கே யேற வாங்குந்
தோணியைத் தொண்டனேன் தூய சோதிச்
சுலாவெண் குழையானைச் சுடர்பொற் காசின்
ஆணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 4

4. இளம்பிறை தவழும் செஞ்சடை முடியன், பித்தராய்ப் பத்தி செய்யும் அடியார்கள் முத்தியாகிய உயர்ந்த இடத்தை அடைதற்கு உதவும் ஏணிபோல்பவன், இடர்க்கடலுட்பட்ட அடியவரைக் கரையேற்றும் தோணிபோல்பவன். காதில் ஒளி பொருந்திய குழையை அணிந்தவன். பொற்காசைக் கண்டறிதற்கு உதவும் உரையாணி போன்றவன்.

ஒருமணியை உலகுக்கோ ருறுதி தன்னை
உதயத்தி னுச்சியை உருமா னானைப்
பருமணியைப் பாலோடஞ் சாடி னானைப்
பவித்திரனைப் பசுபதியைப் பவளக் குன்றைத்
திருமணியைத் தித்திப்பைத் தேன தாகித்
தீங்கரும்பி னின்சுவையைத் திகழுஞ் சோதி
அருமணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 5

5. ஒப்பற்ற மாணிக்கம் போன்றவன். உலகிற்கு உறுதிப் பொருளாய்த் திகழ்பவன். உச்சிப் பொழுதில் விளங்கும் கதிரவனைப் போன்றவன். இடியேறாகத் திகழ்பவன், பெரிய மாணிக்க மணிபோல்பவன்.

பாலோடு அஞ்சு ஆடியவன். தூயவன், பசுபதி, பவளக் குன்று, இயல்பாகவே ஒளியுள்ளமணி, தேனும் கரும்புமாய்த் தித்திப்பவன்.

ஏற்றானை யெண்டோ ளுடையான் றன்னை
யெல்லி நடமாட வல்லான் றன்னைக்
கூற்றானைக் கூற்ற முதைத்தான் றன்னைக்
குரைகடல்வாய் நஞ்சுண்ட கண்டன் றன்னை
நீற்றானை நீளரவொன் றார்த்தான் றன்னை
நீண்ட சடைமுடிமேல் நீரார் கங்கை
ஆற்றானை ஆவடுதண்டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே.6

*6.* இடபவாகனன், எண்தோள் உடையவன், நள்ளிரவில் நடனமாடுபவன், கூற்றமாயுள்ளவன், காலனை உதைத்தவன், கடல் நஞ்சுண்டகண்டன். நீறணிந்த மேனியன், நீண்ட அரவை இடையில் கட்டியவன். சடையில் கங்கை தரித்தவன்,

கைம்மான மதகளிற்றை உரித்தான் றன்னைக்
கடல்வரைவா னாகாச மானான் றன்னைச்
செம்மானப் பவளத்தைத் திகழும் முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயா னானை
எம்மானை என்மனமே கோயி லாக
இருந்தானை என்புருகும் அடியார் தங்கள்
அம்மானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 7

*7.* துதிக்கையை உடைய களிற்றை உரித்துப் போர்த்தவன். கடலும் மலையும் வானமும் ஆனவன். பெருமையை உடைய சிவந்த பவளமும் முத்தும் திங்களும் ஞாயிறும் தீயும் ஆனவன். எம்தலைவன், என் மனத்தைக் கோயிலாக் கொண்டவன். உருகிவழிபடும் அடியார்களின் தலைவன்.



மெய்யானைப் பொய்யரொடு விரவா தானை
வெள்ளிடையைத் தண்ணிழலை வெந்தீ யேந்துங்
கையானைக் காமனுடல் வேவக் காய்ந்த
கண்ணானைக் கண்மூன் றுடையான் றன்னை
பையா டரவமதி யுடனே வைத்த
சடையானைப் பாய்புலித்தோ லுடையான் றன்னை
ஐயானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 8

8. வாய்மையின் வடிவானவன். வஞ்சகரோடு விரவாதவன். வெற்றிடமும் தண்ணிழலும் ஆனவன். தீ யேந்தியவன். காமனைக் காய்ந்தவன். முக்கண்ணன். பாம்பையும் சந்திரனையும் சடைமீது தரித்தவன். புலித் தோலுடுத்தவன். அழகியன்.

வேண்டாமை வேண்டுவது மில்லான் றன்னை
விசயனைமுன் னசைவித்த வேடன் றன்னைத்
தூண்டாமைச் சுடர்விடுநற் சோதி தன்னைச்
சூலப் படையானைக் காலன் வாழ்நாள்
மாண்டோட வுதைசெய்த மைந்தன் றன்னை
மண்ணவரும் விண்ணவரும் வணங்கி யேத்தும்
ஆண்டானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 9

9.விருப்பு வெறுப்பு இல்லாதவன். அருச்சுனனைத் தளர்வித்து அருள் செய்தவன். தூண்டாத சோதி போன்றவன். சூலப்படைஉடையவன். காலனை உதைத்தவன். மண்ணோரும் விண்ணோரும் வணங்கும் தலைவன்.

பந்தணவு மெல்விரலாள் பாகன் றன்னைப்
பாடலோ டாடல் பயின்றான் றன்னைக்
கொந்தணவு நறுங்கொன்றை மாலை யானைக்
கோலமா நீல மிடற்றான் றன்னைச்

செந்தமிழோ டாரியனைச் சீரி யானைத்
திருமார்பிற் புரிவெண்ணூல் திகழப் பூண்ட
அந்தணனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 10

*10.* மாதொருபாகன், பாடலும் ஆடலும் பயின்றவன், கொன்றைமலர் சூடியவன், நீலகண்டன், தென்றமிழும் வடமொழியும் ஆனவன், சிறந்தவன், திருமார்பில் வெண்ணூல் பூண்ட அந்தணன்.

தரித்தானைத் தண்கடல்நஞ் சுண்டான் றன்னைத்
தக்கன்றன் பெருவேள்வி தகர்த்தான் றன்னைப்
பிரித்தானைப் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
பெருவலியால் மலையெடுத்த அரக்கன் றன்னை
நெரித்தானை நேரிழையாள் பாகத் தானை
நீசனேன் உடலுறுநோ யான தீர
அரித்தானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 11

*11.* கடல் நஞ்சுண்டு கண்டத்தில் தரித்தவன். தக்கன் பெருவேள்வியைத் தகர்த்து அவன் செருக்கினைப் பிரித்தவன். பிறை தவழ் சடையவன். இராவணனை நெரித்தவன், உமைபாகம் உடையவன். உடற் பிணிகளைப் போக்கியவன்.

திருச்சிற்றம்பலம்

**திருப்பதிக வரலாறு**

நாயனார், திருக்கோடிக்காவிலிருந்து ஆவடு தண்டுறையை அடைந்து தொழுது பாடியருளிய பல திருப்பதிகங்களுள் ஒன்று இத்திருப்பதிகம்,

இத்திருப்பதிகம் இறைவனை அடைக்கலமாக அடைந்து அபயம்வேண்டி அருளியது.



திருத்தாண்டகம்
திருச்சிற்றம்பலம்

திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க
உருவேஎன் னுறவேஎன் ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 1

1. ஆவடுதுறை உறையும் அமரர்களின் தலைவனே, என்பால் திருமகள் வருவதற்குரிய நல்லூழாக இருப்பவனே, என் செல்வமே, தேனே, வானோர்க்குத் திருவிளக்காய்த் திகழ்பவனே, அவ்விளக்கில் சோதியாய் விளங்குபவனே, ஒளிவடிவினனே, எனக்கு உறவானவனே, என் உடலும் உள்ளமும் உள்ளத்தினுள் விளங்கும் கருப்பொருளும் ஆனவனே, கற்பகமே, கண்ணே, கண்ணிற் கருமணியே, கருவிழிப்பாவையே அரிய வலிய வினைகள் என்னை அடையாவண்ணம் காத்தருளுவாயாக.

மாற்றேன் எழுத்தஞ்சும் என்றன் நாவின்
மறவேன் திருவருள்கள் வஞ்ச நெஞ்சின்
ஏற்றேன் பிறதெய்வம் எண்ணா நாயேன்
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்
மேற்றான் நீ செய்வனகள் செய்யக் கண்டு
வேதனைக்கே யிடங்கொடுத்து நாளும் நாளும்
ஆற்றேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 2

2. திருவைந்தெழுத்து ஓதுவதை நாவில் மாற்றேன். திருவருளை நெஞ்சில் மறவேன், வஞ்சனையை நெஞ்சில் ஏற்ற மாட்டேன். எம்பெருமான் திருவடிகளையே





யல்லாமல் பிற தெய்வம் எண்ணேன். இத்தகைய யான் வேதனைகளால் இடரப்பட்டு ஆற்றேனாயினேன். எனை அஞ்சல் என்று கூறி அருள்வாயாக.

வரையார் மடங்கை பங்கா கங்கை
மணவாளா வார்சடையாய் நின்றன் நாமம்
உரையா உயிர்போகப் பெறுவே னாகில்
உறுநோய்வந் தெத்தனையு முற்றா லென்னே
கரையா நினைந்துருகிக் கண்ணீர் மல்கிக்
காதலித்து நின்கழலே யேத்து மன்பர்க்
கரையா அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 3

3. பார்வதி பங்கனே, கங்கையின் மணவாளனே, நீண்ட சடைமுடி உடையவனே, உன் திருநாமத்தை உரைத்தபடி உயிர் போகப் பெறுமேயானால் எனக்கு அது ஒன்றே போதும். எத்தனைதுன்பங்கள் இப்போது வந்தாலும் அதற்காகக்கவலேன்; உன்னை உருகி வழிபடும் அன்பர்கட்கு அரசனே! அடியேனை அஞ்சல் என்று கூறியருளுவாயாக.

சிலைத்தார் திரிபுரங்கள் தீயில் வேவச்
சிலைவளைவித் துமையவளை யஞ்ச நோக்கிக்
கலித்தாங் கிரும்பிடிமேற் கைவைத் தோடுங்
களிறுரித்த கங்காளா எங்கள் கோவே
நிலத்தார் அவர்தமக்கே பொறையாய் நாளும்
நில்லா வுயிரோம்பு நீத னேநான்
அலுத்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 4

4. திரிபுரங்களைத் தீயில் வேவ வில்லை வளைத்தும், உமையவள் அஞ்ச யானையை உரித்துப் போர்த்தும் வீரச் செயல்கள் புரிந்தருளிய கங்காளா, எங்கள் தலைவனே, நிலத்துக்குச் சுமையாய் உயிரை ஓம்பி உடலை வளர்க்கும் அடியவனை அஞ்சல் என்றருளுவாயாக.



நறுமா மலர்கொய்து நீரின் மூழ்கி
நாடோறும் நின்கழலே யேத்தி வாழ்த்தித்
துறவாத துன்பந் துறந்தேன் றன்னைச்
சூழுலகில் ஊழ்வினைவந் துற்றா லென்னே
உறவாகி வானவர்கள் முற்றும் வேண்ட
ஒலிதிரைநீர்க் கடல்நஞ்சுண் டுய்யக் கொண்ட
அறவா அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே 5

5. நீரில் மூழ்கி நறுமலர் கொய்து நாடோறும் நின்கழல்களை ஏத்தி நீங்காத துன்பங்கள் பலவற்றைத் துறந்த எனக்கு இவ்வுலகில் ஊழ்வினைகள் வந்துற்றாலும் அதனால் விளைவதென்ன? வானவர் வேண்டியவண்ணம் கடலிடைத் தோன்றியநஞ்சை உண்டு காத்த அறவடிவினனே அடியேனை அஞ்சல் என்றருள்.

கோன்நா ரணன் அங்கந் தோள்மேற் கொண்டு
கொழுமலரான் தன்சிரத்தைக் கையி லேந்திக்
கானார் களிற்றுரிவைப் போர்வை மூடிக்
கங்காள வேடராய் எங்குஞ் செல்வீர்
நானார் உமக்கோர் வினைக்கே டனேன்
நல்வினையுந் தீவுனையு மெல்லாம் முன்னே
ஆனாய் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 6

6. திருமாலின் எலும்பைக் கதாயுதமாகக் கொண்டும், பிரம கபாலத்தைக் கையில் ஏந்தியும், யானைத் தோலைப் போர்த்தும் திரியும் இறைவனே! வினைக்கேடுடைய நான் உமக்கு என்ன உறவுடையேன். இருப்பினும் என் நல்வினை தீவினைகள் அனைத்துமாய் விளங்கும் நீ அடியேனை அஞ்சல் என்று அருளுவாயாக.

உழையுரித்த மானுரிதோ லாடை யானே
உமையவள் தம் பெருமானே இமையோர் ஏறே

கழையிறுத்த கருங்கடல்நஞ் சுண்ட கண்டா
கயிலாய மலையானே உன்பா லன்பர்
பிழைபொறுத்தி என்பதுவும் பெரியோய் நின்றன்
கடனன்றே பேரருளுன் பால தன்றே
அழையுறுத்து மாமயில்க ளாலுஞ் சோலை
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 7

7. மானின்தோலை உரித்து உடுத்தவனே, உமை பாகனே, இமையோர் தலைவனே, கடல் நஞ்சுண்ட கண்டனே, கயிலை மலையானே அன்பர்களின் பிழைகளைப் பொறுத்தல் உன் கடன் அல்லவா ? பேரருள் உன்னிடமல்லவா உள்ளது. ஆதலின் அடியேனை அஞ்சல் என்றருளுவாயாக.

உலந்தார் தலைகலனொான் றேந்தி வானோ
ருலகம் பலிதிரிவாய் உன்பா லன்பு
கலந்தார் மனங்கவருங் காத லானே
கனலாடுங் கையவனே ஐயா மெய்யே
மலந்தாங் குயிர்ப்பிறவி மாயக் காய
மயக்குளே விழுந்தழுந்தி நாளும் நாளும்
அலந்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 8

8. இறந்தவரின் தலையொன்றைக் கையில் ஏந்தி வானோருலகில் பலிதிரியும் பெருமானே, அன்பர்களின் மனத்தைக் கவரும் அன்பனே, கனல் ஏந்திய கையனே, அடியேன் மலத்தினை உடைய பிறவியாகிய இவ்வுடல் மயக்கத்திலே அழுந்தித் துயருற்றேன். அடியேனை அஞ்சல் என்றருளுவாயாக.

பல்லார்ந்த வெண்டலை கையி லேந்திப்
பசுவேறி யூரூரன் பலிகொள் வானே
கல்லார்ந்த மலைமகளும் நீரு மெல்லாங்
கரிகாட்டி லாட்டுகந்தீர் கருதீ ராகில்

 

எல்லாரு மென்றன்னை யிகழ்வர் போலும்
ஏழையமண் குண்டர்சாக் கியர்க ளொன்றுக்
கல்லாதார் திறத்தொழிந்தேன் அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 9

9. பல்லோடு கூடிய வெண்டலையில் ஊர்தோறும் சென்று பலிகொள்பவனே, மலைமகளும் நீயும் இடுகாட்டில் ஆடுவதை உகந்து கொண்டீர். நீவிர் இருவீரும் என்னை ஆளக்கருதீராகில் எல்லோரும் என்னை இகழ்வர். இளமைக் காலத்துச் சமண் சமயத்தைச் சார்ந்து கெட்டேன். அடியேனை அஞ்சல் என்று அருளுக.

துறந்தார்தந் தூநெறிக்கண் சென்றே னல்லேன்
துணைமாலை சூட்டநான் தூயே னல்லேன்
பிறந்தேன்நின் திருவருளே பேசி னல்லாற்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே
செறிந்தார் மதிலிலங்கைக் கோமான் றன்னைச்
செறுவரைக்கீ ழடர்த்தருளிச் செய்கை யெல்லாம்
அறிந்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 10

10. உண்மைத் துறவிகளின் நெறியில் சென்றேனல் லேன். துணைமாலை சூட்டும் தூயேனும் அல்லன். இவ்வுலகிற் பிறந்தநான் உன் திருவருளைப் பேசாத நாட்கள் எல்லாம் பிறவா நாட்கள். இலங்கை அரசன் இராவணனைக் கயிலைமலையின் கீழ் அடர்த்து அருள் செய்த உன்கருணையை அறிந்தேன். அடியேனை அஞ்சல் என்று அருள்வாயாக.

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியன

### திருப்பதிக வரலாறு

சுந்தரர், திருஅரிசிற்கரைப்புத்தூர் தொழுது பல பதிகளையும் வணங்கிக்கொண்டு திருவாவடுதுறை யடைந்து வலங்கொண்டு இறைஞ்சி, கோச்செங்கட் சோழரையும் சிறப்பித்துப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

மறைய வன்ஒரு மாணிவந் த்டைய
வார மாய்அவன் ஆருயிர் நிறுத்தக்
கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற்
கடந்த காரணங் கண்டுகண் டடியேன்
இறைவன் எம்பெரு மான்என் றெப்போதும்
ஏத்தி ஏத்திநின் றஞ்சலி செய்துன்
அறைகொள் சேவடிக் கன்பொடும் அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 1

*1. திருவாவடுதுறையில் விளங்கும் எங்கள் முதற்கடவுளே! மார்க்கண்டேயரைக் காத்தற்பொருட்டு காலனைக் காலாற்கடிந்த உன்றன் பேரருள்திறத்தை உணர்ந்து அடியேன் உன் புகழை ஏத்தி உன்னை அஞ்சலிசெய்து உன்திருவடிகளை அடைந்தேன். என்னை ஏற்றுக்கொண்டருள்க.*

தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென இயற்றச்
சுருண்ட செஞ்சடை யாய்அது தன்னைச்
சோழ னாக்கிய தொடர்ச்சிகண் டடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றியென் றன்பொடு புலம்பி
அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 2

 

2. தெளிவு பெற்ற சிலந்தி ஒன்று தன்வாயிலிருந்து உண்டாகிய நூலால் அழகிய பந்தரை இயற்றி அன்பு செய்ய, அச்சிலந்தியைக் கோச்செங்கட்சோழராய்ப் பிறக்கச்செய்த உன்திருவருளை அறிந்து அடியேன் எனது எதிர்வினைக்கு அஞ்சித் துணுக்குற்று உன் திருவடிமீது விழுந்து போற்றி உன்னை வந்தடைந்தேன். என்னை ஏற்றருள்வாயாக.

திகழும் மாலவன் ஆயிர மலரால்
 ஏத்து வான்ஒரு நீள்மலர் குறையப்
புகழி னால்அவன் கண்ணிடந் திடலும்
 புரிந்து சக்கரங் கொடுத்தல் கண் டடியேன்
திகழு நின்திருப் பாதங்கள் பரவித்
 தேவ தேவநின் திறம்பல பிதற்றி
அகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
 ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 3

3. திருவாவடுதுறை உறை இறைவா! திருமால் ஆயிரம் தாமரைகொண்டு அருச்சிக்க முனைந்தபோது ஒருமலர் குறையத் தம் கண்ணையே இடந்து அருச்சித்தலைக்கண்டு மகிழ்ந்து அவருக்குச் சக்கரப்படையை அளித்த உன் வள்ளன்மையை உணர்ந்து அடியேன் என் வல்வினைக்கஞ்சி உன்திருவடிகளைத் துதித்துவந்து அடைந்தேன் ; ஏற்றருள்வாயாக.

வீரத் தால்ஒரு வேடுவ னாகி
 விசைத்தொர் கேழலைத் துரந்துசென் றணைந்து
போரைத் தான்விச யன்றனக் கன்பாய்ப்
 புரிந்து வான்படை கொடுத்தல்கண் டடியேன்
வாரத் தால்உன நாமங்கள் பரவி
 வழிபட் டுன்திற மேநினைந் துருகி
ஆர்வத் தோடும்வந் தடியிணை அடைந்தேன்
 ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 4

4. ஆவடுதுறையில் விளங்கும் ஆதியே! நீ ஒரு வேடுவனாய் உருக்கொண்டு பன்றியைத்துரத்திச் சென்று அருச்சுனன் மீதுவைத்த அன்பால் அவனோடு போரிட்டு அவனுக்குப் பாசுபதக்கணையை அளித்தருளினாய். உன் தன்மையை உணர்ந்து அடியேன் அன்போடு உன்திருப் பெயர்களை ஓதி உன்திருவடி இணைகளை வந்தடைந்தேன். என்னை ஏற்றருள்க.

ஒக்க முப்புரம் ஓங்கெரி தூவ
உன்னை உன்னிய மூவர்நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுல காளப்
புகழி னால்அருள் ஈந்தமை யறிந்து
மிக்க நின்கழ லேதொழு தரற்றி
வேதியா ஆதி மூர்த்திநின் அரையில்
அக்க ணிந்தஎம் மானுனை யடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 5,6-10

5. உலகிற்கு முதலாகிய மூர்த்தியே! அரையில் என்பு அணிந்த பெருமானே! நீ முப்புரங்களிலும் ஒருசேர நெருப்பை எழுப்பியபோது உன்னையே நினைந்திருந்த மூவர்மட்டும் உய்ந்து மேலுலகை ஆளும்வண்ணம் அருள்செய்தாய், அவர்கட்கு அருள்செய்த அத்திறத்தை அறிந்து அடியேன் உன் திருவடிகளைத் தொழுது வந்தடைந்துள்ளேன். என்னை ஏற்றுக்கொண்டருள்க.

## திருப்பதிக வரலாறு

சுந்தரர், திருவரத்துறை பணிந்து பல பதிகளையும் வணங்கிக் கொண்டு அன்பருடன் பொன்னியாற்றில் நீராடி திருவாவடுதுறையணைந்து பாடியருளியது இத்திருப்பதிகம். (பெ.ஏயர்.பு. 296) இத்திருப்பதிகப் பாடல் முழுவதும் "இங்கெனக்கு ஆர் உறவு" என்று பாடியிருத்தல் கருதத்தக்கது. சுந்தரர் உடல்பிணி நீங்கவேண்டிப் பாடியருளியது.



பண் - தக்கேசி

கங்கை வார்சடை யாய்கண நாதா
கால காலனே காமனுக் கனலே
பொங்கு மாகடல் விடமிடற் றானே
பூத நாதனே புண்ணியா புனிதா
செங்கண் மால்விடை யாய்தெளி தேனே
தீர்த்த னேதிரு வாவடு துறையுள்
அங்க ணாஎனை அஞ்சலென் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 1

1. திருவாவடுதுறையில் விளங்கும் இறைவனே, கங்கை தங்கிய சடை உடையவனே, பூதகணங்களுக்குத் தலைவனே, காலனுக்குக் காலனே, காமனை அழித்தவனே, கடல் விடம் உண்டவனே, புண்ணியா, புனிதா, திருமாலாகிய விடையை உடையவனே, தெளிதேனே, புனிதனே, அமரர்கள் ஏறே, அங்கணா அடியேனை அஞ்சல் என்றருள்வாயாக.

மண்ணின் மேல்மயங் கிக்கிடப் பேனை
வலிய வந்தெனை ஆண்டுகொண் டானே
கண்ணி லேன்உடம் பில்லடு நோயாற்
கருத்த ழிந்துனக் கேபொறை யானேன்
தெண்ணி லாஎறிக் குஞ்சடை யானே
தேவ னேதிரு வாவடு துறையுள்
அண்ண லேஎனை அஞ்சலென் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 2

2. தெண்ணிலா விளங்கும் சடைமுடியனே, மானுட வாழ்க்கையில் மயங்கிக்கிடந்த என்னை வலியவந்து ஆண்டு கொண்டவனே. அடியேன் கண் இலேன் ஆயினேன். உடம்பில் தோன்றிய கொடிய நோயால் வருந்தி உனக்குச் சுமையானேன். எனக்கு உறவானவர் ஒருவரும் இலர். ஆதலின் அஞ்சல் என்றருள்க.

ஒப்பி லாமுலை யாள்ஒரு பாகா
உத்தமா மத்தம் ஆர்தரு சடையாய்
முப்பு ரங்களைத் தீவளைத் தங்கே
மூவ ருக்கருள் செய்ய வல்லானே
செப்ப ஆல்நிழற் கீழ்இருந் தருளுஞ்
செல்வ னேதிரு வாவடு துறையுள்
அப்ப னேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 3

3. ஒப்பிலாமுலையாளை ஒருபாகத்தே கொண்டவனே உத்தமனே, ஊமத்தைமலர் அணிந்த சடைமுடி உடையவனே முப்புரங்களை அழித்து அவற்றில் இருந்தவர்களில் மூவருக்கு மட்டும் அருள் செய்தவனே, எல்லோரும் புகழக் கல்லால் மர நிழற்கீழ் இருந்து அறம் அருளியவனே, ஆவடுதுறையில் விளங்கும் அப்பனே அஞ்சல் என்றருள்வாயாக.

கொதியி னால்வரு காளிதன் கோபங்
குறைய ஆடிய கூத்துடை யானே
மதியி லேன்உடம் பில்லடு நோயான்
மயங்கி னேன்மணி யேமண வாளா
விதியி னால்இமை யோர்தொழு தேத்தும்
விகிர்த னேதிரு வாவடு துறையுள்
அதிப னேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 4

4. மிக்க சீற்றத்தோடுவந்த காளியோடு கூத்தாடியவனே, அறிவிலேனாகியயான் உடம்பில் வந்து வருத்துகின்ற பிணியால் மனம் கலங்குகின்றேன். மாணிக்கமணி போல்பவனே, மணவாளக்கோலத்தினனே, விதிப்படி இமையோர் தொழுது ஏத்தும் விகிர்தனே! எனை அஞ்சல் என்றருள்வாயாக.



வந்த வாள்அரக் கன்வலி தொலைத்து
  வாழும் நாள்கொடுத் தாய்வழி முதலே
வெந்த வெண்பொடிப் பூசவல் லானே
  வேட னாய்விச யற்கருள் புரிந்த
இந்து சேகர னேஇமை யோர்சீர்
  ஈச னேதிரு வாவடு துறையுள்
அந்த ணாஎனை அஞ்சல் என றருளாய்
  ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 5

5. உலகமாகியவழிக்கு முதலானவனே, வெண்ணீற்றைப் பூசவல்லானே, வேடனாய் அருச்சுனருக்கு அருள் செய்தவனே, சந்திரனைத் தலையில் தரித்தவனே, இராவணனது வலியைத் தொலைத்து மேலும் அவனுக்கு வாழும்நாள் கொடுத்தவனே. திருவாவடுதுறையில் விளங்கும்அந்தணனே எனைஅஞ்சல் என்றருள்வாயாக.

குறைவி லாநிறை வேகுணக் குன்றே
  கூத்த னேகுழைக் காதுடை யானே
உறவி லேன்உனை யன்றிமற் றடியேன்
  ஒருபி ழைபொறுத் தால்இழி வுண்டே
சிறைவண் டார் பொழில் சூழ்திரு வாரூர்ச்
  செம்பொ னேதிரு வாவடு துறையுள்
அறவ னேஎனை அஞ்சல்என் றருளாய்
  ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 6

6. குறைவில்லாத நிறைவுடையவனே, நற்குணக் குன்றே! கூத்தனே, குழைக்காதனே! உனையன்றி வேறு உறவுடை யேனில்லை, ஆதலால் அடியேன் செய்த ஒரு பிழையைப் பொறுத்தால் உமக்கு இழிவுண்டாகுமா? அஞ்சல் என்றருளாய்.

வெய்ய மாகரி ஈருரி யானே
  வேங்கை யாடையி னாய்விதி முதலே

மெய்ய னேஅட லாழியன் றரிதான்
வேண்ட நீகொடுத் தருள்புரி விகிர்தா
செய்ய மேனிய னேதிக ழொளியே
செங்க ணாதிரு வாவடு துறையுள்
ஐய னேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 7

7. யானைத் தோலைப் போர்த்தவனே. புலித் தோலை உடுத்தவனே, விதிவிலக்குக்குத் தலைவனே, மெய்ப் பொருளானவனே, திருமாலுக்குச் சக்கரம் அளித்தவனே, சிவந்த திருமேனியை உடையவனே. ஒளிக்கு ஒளியாய் விளங்குபவனே, சிவந்த கண்களை உடையவனே! அடியேனை அஞ்சல் என்றருள்வாயாக.

கோதி லாஅமு தேஅருள் பெருகு
கோல மேஇமை யோர்தொழு கோவே
பாதி மாதொரு கூறுடை யானே
பசுப தீபர மாபர மேட்டீ
தீதி லாமலை யேதிரு வருள்சேர்
சேவ காதிரு வாவடு துறையுள்
ஆதி யேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 8

8. குற்றமற்ற அமுதம் போல்பவனே, அருள் வெள்ளம் பெருகும் தோற்றத்தை உடையவனே, தேவர்கள் வணங்கும் தலைவனே, மாதொருபாகனே, உயிர்கட்குத் தலைவனே, மேலானவனே, நன்மை பொருந்திய மலைபோல்பவனே, திருவருள் சேர்ந்த வீரனே, திருவாவடுதுறையுள் விளங்கும் ஆதியே என்னை அஞ்சல் என்றருள்வாயாக.

வான நாடனே வழித்துணை மருந்தே
மாசி லாமணி யேமறைப் பொருளே
ஏன மாஎயி றாமையும் எலும்பும்
ஈடு தாங்கிய மார்புடையானே



தேனெய் பால்தயிர் ஆட்டுகந் தானே
தேவ னேதிரு வாவடு துறையுள்
ஆனை யேஎனை அஞ்சல்என றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 9

9. வானநாட்டை உடையவனே, செல்லும் வழிக்குத் துணையானவனே, அமுதம் போல்பவனே, குற்றமில்லாத மாணிக்கமணியே, வேதப் பொருளாய் விளங்குபவனே, பன்றியின் கொம்பு ஆமைஓடு எலும்பு இவற்றை அணிந்தவனே, தேன் நெய் பால் தயிர் இவைகளால் மூழ்குவித்தலை விரும்புபவனே, ஆனைபோல்பவனே என்னை அஞ்சல் என்றருள்.

வெண்ட லைப்பிறை கொன்றையும் அரவும்
வேரி மத்தமும் விரவிமுன் முடித்த
இண்டை மாமலர்ச் செஞ்சடை யானை
ஈச னைத்திரு வாவடு துறையுள்
அண்ட வாணனைச் சிங்கடி யப்பன்
அணுக்க வன்றொண்டன் ஆர்வத்தால் உரைத்த
தண்ட மிழ்மலர் பத்தும்வல் லார்கள்
சாத லும்பிறப் பும்மறுப் பாரே. 10

10. வெண்டலை, பிறை கொன்றைமலர், பாம்பு, தேன் பொருந்திய ஊமத்தைமலர் இவற்றை விரவிக் கட்டிய இண்டை மாலையை உடைய சடைமுடி யானும், முதற்கடவுளும் திருவாவடுதுறையில் விளங்கும் சிவலோகனும் ஆகிய இறைவன் மீது அணுக்கராகிய வன்றொண்டர் பாடிய பாடல்கள் பத்தையும் கூறவல்லவர் சாதலையும் பிறப்பையும் அறுப்பார்கள்.

திருச்சிற்றம்பலம்

## சேந்தனார் திருவிசைப்பா – திருவாவடுதுறை

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பொய்யாத வேதியர் சாந்தைமெய்ப்
புகழாளர் ஆயிரம் பூசுரர்
மெய்யே திருப்பணி செய்சீர்
மிகுகா விரிக்கரை மேய
ஐயா திருவாவடுதுறை
அமுதேயென் றுன்னை அழைத்தக்கால்
மையார் தடங்கண் மடந்தைக்கொன்று
அருளா தொழிவது மாதிமையே. 1

மாதி மணங்கம ழும்பொழில்
மணிமாட மாளிகை வீதிசூழ்
சோதி மதிலணி சாந்தைமெய்ச்
சுருதி விதிவழி யோர்தொழும்
ஆதி அமரர் புராணனாம்
அணிஆ வடுதுறை நம்பிநின்ற
நீதி அறிகிலள் பொன்னெடுந்
திண்தோள் புணர நினைக்குமே. 2

நினைக்கும் நிரந்தர னேயென்றும்
நிலாக்கோலச் செஞ்சடைக் கங்கைநீர்
நனைக்கும் நலங்கிளர் கொன்றைமேல்
நயம்பேசும் நன்னுதல் நங்கைமீர்
மனக்கின்ப வெள்ள மலைமகள்
மணவாள நம்பிவண் சாந்தையூர்
தனக்கின்பன் ஆவடு தண்டுறைத்
தருணேந்து சேகரன் என்னுமே. 3

தருணேந்து சேகர னெயெனுந்
தடம்பொன்னித் தென்கரைச் சாந்தையூர்ப்



பொருணோர்ந்த சிந்தை யவர்தொழப்
புகழ்செல்வ மல்குபொற் கோயிலுள்
அருணோர்ந் தமர்திரு வாவடு
துறையாண்ட ஆண்டகை யம்மானே
தெருணோர்ந்த சித்தம் வலியவா
திலக நுதலி திறத்திலே. 4

திலக நுதல்உமை நங்கைக்கும்
திருவாவடுதுறை நம்பிக்கும்
குலக அடியவர்க் கென்னையாட்
கொடுத்தாண்டு கொண்ட குணக்கடல்
அதொன் றறிகின்றி லேமெனும்
அணியும்வெண் ணீறஞ் செழுத்தலால்
வலதொன் றிலள்இதற் கென்செய்கேன்
வயல் அந்தண் சாந்தையர் வேந்தனே. 5

வேந்தன் வளைத்தது மேருவில்
அரவுநாண் வெங்கணை செங்கண்மால்
போந்த மதிலணி முப்புரம்
பொடியாட வேதப்புர வித்தேர்ச்
சாந்தை முதல் அயன் சாரதி
கதிஅருள் என்னுமித் தையலை
ஆந்தண் திருவா வடுதுறை
யான்செய்கை யார்அறி கிற்பாரே. 6

கிற்போம் எனத்தக்கன் வேள்விபுக்கு
எடுத்தோடிக் கெட்டஅத் தேவர்கள்
சொற்போலும் மெய்ப்பயன் பாவிகாள்
என்சொல்லிச் சொல்லும்இத் தூமொழி
கற்போல் மனங்கனி வித்தஎம்
கருணாலயா வந்திடாய் என்றால்
பொற்போ பெருந்திரு வாவடு
துறையாளி பேசாது ஒழிவதே. 7

ஒழிவொன்று இலாஉண்மை வண்ணமும்
உலப்பிலள் ஊறின்ப வெள்ளமும்
மொழிவொன்றி லாப்பொன்னித் தீர்த்தமும்
முனிகோடி கோடியா மூர்த்தியும்
அழிவொன்றி லாச்செல்வச் சாந்தையூர்
அணிஆ வடுதுறை ஆடினாள்
இழிவொன்றி லாவகை யெய்திநின்று
இறுமாக்கும் என்இள மானனே. 8

மானேர் கலைவளை யுங்கவர்ந்து
உளங்கொள்ளை கொள்ள வழக்குண்டே
தேனே அமுதேஎன் சித்தமே
சிவலோக நாயகச் செல்வமே
ஆனேஅ லம்பு புனற்பொன்னி
அணிஆ வடுதுறை அன்பர்தம்
கோனேநின் மெய்யடி யார்மனக்
கருத்தை முடித்திடுங் குன்றமே. 9

குன்றேந்தி கோகன கத்தயன்
அறியா நெறியென்னைக் கூட்டினாய்
என்றேங்கி ஏங்கி அழைக்கின்றாள்
இளவல்லி எல்லைக டந்தனள்
அன்றே அலம்பு புனற்பொன்னி
அணிஆ வடுதுறை யாடினாள்
நன்றே இவள்நம் பரமல்லள்
நவலோக நாயகன் பாலளே. 10

பாலும் அமுதமும் தேனுமாய்
ஆனந்தந் தந்துள்ளே பாலிப்பான்
போலும்என் ஆருயிர்ப் போகமாம்
புரகால காம புராந்தகன்
சேலுங் கயலுந் திளைக்கும் நீர்த்
திருவா வடுதுறை வேந்தனோ (டு)
ஆலு ம்தற்கே முதலுமாம்
அறிந்தோம் அரிவைபொய் யாததே. 11

திருச்சிற்றம்பலம்



## துறைசைப் புராணத் துதிப்பாடல்கள்

திருவாவடுதுறை தலப் புராணத்தில் இத்தலத்து கடவுளர்களின் போற்றிப் பாடல்கள் பல உள்ளன. அவற்றுள் அழகிய விநாயகர் மீதுள்ள 10 பாடல்களும், மாசிலாமணியீசர் பற்றிய 34 பாடல்களும், ஒப்பிலாமுலையம்மை துதிப்பாடல்கள் 12ம் இங்கே தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஓதிப் பயன் பெறுக.

### 1. அழகிய விநாயகர் துதி ( தல விநாயகர் )

1. சங்கர ஞான புத்திர! சயிலமா தருள்கு மார!
துங்கவேள் முன்பு வந்த சுந்தர! சூர்ப்ப கர்ண!
பொங்கர வணிந்த தோள! புங்கவ! புனித போத!
ஐங்கர நாத! சோதி அழகிய கணேச போற்றி!

2. மூடிக வாக னா! நல் மோதக அத்த! வேத
பீடிக! ஏக தந்த! பிரணவா சன!சை யோக
ஓடுமும் மதவி லாச! உயர்சதா ரவிப்பிர காச!
ஆடவர் திலக! யோக அழகிய கணேச போற்றி!

3. இந்துசே கர!முக் கண்ண! இலகுசோ டசக ணேச!
தொந்திகொ ளுதர! நீண்ட துளைபெற துதிக்கை நாத!
சிந்துரா னனவி லாச! தேவநா யக!அ மோக!
அந்தமி லாத இன்ப அழகிய கணேச போற்றி!

4. கிம்புரித் தந்த! நால்வாய்க் கிளர்புகர் வதன! வீர!
நம்பினோர்க் கருள்செ யுங்கிரு பாகர! நாத கீத!
செம்பொன்மா மணிச்சி லம்பு கிண்கிணி சிறந்த பாத!
அம்பர வுருவ! மிக்க அழகிய கணேச போற்றி !

5. பாரத மேரு வென்னும் பருப்பத ஏட்டிற் கொம்பே
கூரெழுத் தாணியாக்கொண் டெழுதிய குழக! போரின்
நேருறுங் கசான னத்து நிசிசரன் தனையட் டியார்க்கும்
ஆரருள் புரிந்து காத்த அழகிய கணேச போற்றி!

6. சந்திரன் சாப நீசத் துவஞ்சதுர்த் தியில்வைத் தாண்ட
மந்திர வடிவ! காக வுருவமாய் மருவி மிக்க
செந்தமிழ் முனிக்க மண்ட லத்துநீர் சிந்திப் பொன்னி
அந்தமில் நதிய ழைத்த அழகிய கணேச போற்றி !

7. தகவொடு கவுரி தன்மேற் தரித்தசந் தனந்தி ரட்டு
மகவுரு வான தன்சீர் வடிவினை யழித்த முக்கட்
பகவனுக் கிணையா முக்கண் படைத்தேங் காயு
டைப்போர்க்கு
அகமகிழ்ந் துதவும் இன்ப அழகிய கணேச போற்றி!

8. இருங்கடம் பணியுந் தம்பி எழில்மயில் மீதி லேறிப்
பெருந்திருக் கயிலை சுற்றி வருமுனம் பிதாவைச் சுற்றித்
திருந்துள மகிழ்ச்சி கூரச் செய்தவர் திருக்கை யீந்த
அருங்கனி வாங்கி நூங்கும் அழகிய கணேச போற்றி!

9. முப்புரம் எரிக்கும் ஞான்றும் உன்றனை நினையா துங்கு
மெய்ப்பொடுஞ் செய்த தேரை விழவொடித் தளவி லாத
துய்ப்பொடு பூசை கொண்டு சுகித்துபின் அதற்கு வெற்றி
அப்பொழு தளித்து நின்ற அழகிய கணேச போற்றி !

10. செக்கர்மே னியனே! மிக்க சித்திமுத் திகட்கு வித்தாம்
விக்கின விநாய காய நமவென விளம்பிப் பூசித்து
எக்கணுள் ளோரும் ஏன்ற மாத்திரம் ஏத்து வாரேல்
அக்கணம் முன்னின் றாளும் அழகிய கணேச போற்றி!

(23. தேவர்கள் கணபதி பூசை செய்த
அத்தியாயம்,பா.16 - 25)

## 2. மாசிலாமணி ஈசர் துதி

கங்காத ரா!காள கண்டா!திரி யம்பகா! கால காலா!
துங்காபு ராந்தகா! தண்துறைசை நாய்கா! சுயம்ப்ர காசா!
சங்கார காரணா! சதாசிவா! சுராதிபா! சயில மாது
பங்கா!து ரந்தரா! சங்கரா! சுந்தரா! பரம நாதா!

( 7. மூர்த்திவிசேடம் உரைத்த அத்தியாயம், பா. 13 )



சந்திர சேகர! அம்பிகை நாயக! சங்கர புங்கவவற்
சுந்தர! இன்ப நிரந்தர! பூரண! காரண! வாரணநற்
சுந்தர! மங்கள கங்கை சுமந்தவ! தொண்டர்கள் கண்டுபுணர்
மந்திர ஞானப ரம்பரை யாதிப! வானவ! யாம் அபயம்.
உத்தம! அற்புத முத்தப ரப்பிரம! உற்பவ! மற்றகுண
வித்தக! வெட்டுரு வுற்றுள கர்த்த! விடைக்கொடி பற்றுகர
சத்துரு வானவ! சத்துரு வானவர் சத்திய மிரித்திடுகூர்
முத்தலை வேல்வலன் வைத்திடு கொற்றவ! முக்கண! யாம்அபயம்.

எயிலை எரித்திட முறுவல் படைத்தவ! யமனையு தைத்தவ! பொற்
சயிலம் வளைத்தவ! மதனை யழித்தவ! சதுர்மறை சொற்றவ! நல்
மயிலை உவப்பவ னுடன்மிகு மத்தள வயிறனை உய்த்தவ! வெண்
கயிலை மலைத்திரு மனையுறு சிற்பரை கணவ! உனக்கபயம்.

(10.அம்பிகை பகச்சாபம் ஏற்ற அத்தியாயம், பா.354 - 356)

சன்னதி யெதிர்போய் நின்ற தலைவனே போற்றி! போற்றி!
மின்னவிர் சடையாய் போற்றி! வேதநா யகனே போற்றி!
கன்னல்வில் மதனைக் காய்ந்த கண்ணுதல் நாதா போற்றி!
என்னையாள் இறைவ போற்றி! ஈசனே போற்றி! போற்றி!

உனைப்பிரிந் திருந்த வாற்றேன் உரிமைதந் தருள்வாய் போற்றி!
நினைப்பொழு தேனும் வேண்டேன் தேகத்தின் தன்மை போற்றி!
வினைப்பிணிப் பறவே உன்னை விரும்பினோர் தமக்கும் போற்றி!
மனத்தினுக் கதீத மாமென் மாசிலா மணியே போற்றி!

( 25. கோவுருவநாயகி மாசிலாமணியைத் தரிசித்த அத்தியாயம், பா. 18 - 19 )

கீற்றிளம் பிறையொளி கிடந்த சென்னிமேல்
ஆற்றையுஞ் சூடிய அழகன் ஆதியான்
ஏற்றின்மேல் வரும்அணைத் தெழுந்த நாயகன்
கூற்றுதை சேவடி குலாவிப் போற்றுவாம் !

பாலலோ சனன்செழும் பவள மேனியன்
ஆலகா லந்திகழ் அழகு கந்தரன்
ஏலவோ தியைஅணைத் தெழுந்த நாயகன்
கோலமா ரெழில்நலங் கும்பிட் டேத்துவாம் !

சுந்தர நாயகன் சுடர்கொள் முக்கணன்
கந்தனை யீன்றநற் கருணைக் குன்றனான்
இந்துவே ணியன்அணைத் தெழுந்த நாயகன்
பந்தம்நீக் கிடும்புகழ் பகர்ந்து வாழ்த்துவாம் !

திரிபுர மெரிசெய்த சிலையன் காமனை
ஒருகனல் விழியினால் உருவ ழித்தவன்
இருபதந் தரும்அணைத் தெழுந்த நாயகன்
அருள்நினைந் துருகிநல் லன்பு செய்குவாம் !

ஆரண முடிமிசை அமர்ந்த சோதியான்
காரண னாயுல கீன்று காப்பவன்
ஏரணைந் திடஅணைத் திருந்த நாயகன்
பூரண வடிவினைப் புகழ்ந்தி றைஞ்சுவாம் !

*(27.தேவி பசுத்துவம் நீங்கிப் பாகம் பெற்ற அத்தியாயம்,பா.52-56)*

புண்ணியனே தென்துறைசைப் பொருளே போற்றி!
புரமெரியப் புன்னகைசெய் புனிதா போற்றி !
எண்ணுமுயிர்க் குயிராகி அறிவாய இன்பமாய்
எங்குமாய் நிறைந்துநின்ற இறைவா போற்றி !
கண்ணொருமூன் றுடையஅருட் கனியே போற்றி!
கருதுவார் இருளகற்றும் கதிரே போற்றி !
பண்ணமர்சொல் ஒப்பிலா முலையாள் மேவும்
பங்கனே போற்றி ! பரா பரனே போற்றி !

புளகமுற உளமுருகக் கண்ணீர் வாரப்
போற்றும்அடி யாரிடத்தில் புணர்வாய் போற்றி!
எழில்மதியும் சுரநதியும் பாம்பும் அக்கும்
என்பும்அணிந் திலகியசெஞ் சடையாய் போற்றி!
களபமலிந் திருமாந்து பனைத்து விம்மிக்
கதித்த ஒப்பி லாமுலையாள் கணவ போற்றி !
வளர்புகழ்சேர் ஆவடுதண் துறையி லென்றும்
மருவியருள் மாசிலா மணியே போற்றி !



வேதநெறி தழைத்தோங்க அருள்வாய் போற்றி !
மிகுசைவத் துறைவிளங்க அருள்வாய் போற்றி !
நீதிமிகும் தருமநெறி அருள்வாய் போற்றி !
நின்னடிமைத் திறம்விளங்க நினைவாய் போற்றி !
ஏதமற நாயேனை உனக்கெந் நாளும்
இடபவா கனமாய்க்கொண் டருள்வாய் போற்றி!
மாதவர்கள் போற்றுதிருத் துறைசை மேவி
வளரும்அருள் மாசிலா மணியே போற்றி !

*( 28. வேதபுத்திரனாகிய தரும தேவதைக்கு இடபவாகனப் பேறு அருளிய அத்தியாயம், பா.13-15)*

பிணைத்த மலர்த் தொங்கலிடும் அன்பருளம்
பிரியாத பிரானே ! முன்னாள்
இணைத்தசரா சரங்களெல்லாம் ஈன்றுகாத்
தருள்புரியும் இறைவா ! மிக்க
பணைத்தெழும்பூண் அதுலதன உமைபாகா !
தென்துறைசைப் பரனே ! மானை
அணைத்தசந்திர சேகரஉன் பரிபுரத்தாள்
கமலமலர் அகத்துள் வைப்பாம் !
மருளகற்றி இருள்புரக்கும் கருணையினால்
தேவியொடும் மைந்த ரோடும்
தெருளுமருட் பூதகணச் செல்வரொடும்
சந்திரசே கரரூ பங்கொண்டு
இருள்அகல்வித் தெமையாள் மாசிலா
மணிவடிவி லிருந்திங் கெய்தி
அருள்மிகுத்த தேரழுந்தூர் வந்திருந்தோன்
இருமலர்த்தாள் அகத்துள் வைப்பாம் !

*( 29. சோமுகனைச் சங்கரித்து வேதம் வரவழைத்த அத்தியாயம், பா. 36, 37 )*

ஆதி யந்தமி லாத சுந்தர அங்க ணாபரி பூரணா!
நாத விந்துவை யுங்க டந்தருள் நாத! மெய்க்கிரு பாகரா!
வேத மந்திர ரூப தந்திர வீர பூத கணாதிபா!
மாது பங்குறை போதி யம்பல மாசி லாமணி நாயகா!

நாக பூடண நாக கங்கண நாத கீத மனோகரா !
வேக மன்மத கோடி ரூபநல் லிடப வாகன கேதனா !
சாக ரந்தரு நீல நஞ்சு தழைத்தி ருண்டொளிர் கந்தரா!
வாகு கொண்ட பினாக மேந்துகை மாசி லாமணி நாயகா!

முப்பு ரத்தை யெரிப்ப வோர்குறு மூரல் கொண்ட புராந்தகா!
வெப்பெ ழுந்து கரிந்து மன்மதன் வேக நோக்கும் விலோசனா!
செப்பு நான்மறை யுட்பொ ருட்சன காதி பர்க்கருள் தேசிகா!
மைப்பு யற்குழல் ஒப்பி லாள்புணர் மாசி லாமணி நாயகா!

கயிலை மாமலை மேவு காவல கங்கை நாயக மங்களா!
சயில மாமரு காபு லிக்குயர் சதுர்ம றைப்பொருள் தந்தவா!
அயில்கொள் நற்றிரி குல மேந்துகை யைமு கப்பர மேசுரா!
மயில்கெ டுத்தரு ளுயிர்பு ரக்கும்நன் மாசி லாமணி நாயகா!

ஐங்க ரக்கர டக்க டாம்பொழி யழகு குஞ்சரம் ஈன்றவா!
செங்கை யுற்றிடு முகிரி னாலயன் சிரம றுத்த செகாதிபா!
துங்க வுக்கிர நீள்வ ரிப்புலியின் தோலு டுத்திய உத்தமா!
மங்கை யுற்றிடு பங்க நற்சிவ மாசி லாமணி நாயகா !

சோமு காசுரன் தனைய டர்ந்தருட் சுருதி தந்திடு தூயவா!
காம தேனுவி னுருவ கற்றிநற் கவுரி யைப்புணர் காதலா!
தேம லர்க்கர மாத வத்தினர் சித்த முற்றிடு பூசிதா !
மாம முப்பொறி மான்பி டித்தகை மாசி லாமணி நாயகா!

சந்திர சேகர கங்கை சூடு சடாத ரா!கரு ணாகரா !
சிந்து ரத்துரி கொண்ட போர்வைகொள் தேவ தேவ! மகேசுரா!
கந்த னைத்தரு பால லோசன கால காலதிரி யம்பகா !
மந்த ரப்புயம் நான்கு கொண்டநல் மாசி லாமணி நாயகா!

அரியி டந்துகண் மலர்பு னைந்தடி பணிய ஆழி கொடுத்தவா!
விரத மங்கையர் துகில்ச ரிந்திட விரக மீந்த திகம்பரா!
பொருவில் மாமுனி மகவி னுக்கழி யாத மெய்யருள் புண்ணியா!
மருவும் ஆவடு துறைசை வாழ்திரு மாசிலாமணி நாயகா !

( 34. போதியம்பலத்துள் மகாதாண்டவம்
புரிந்த அத்தியாயம், பா. 41 - 48 )



நிரந்தநாற் சுருதி தேரும் நின்மல பகவ போற்றி !
வரந்தர விருந்து வாழும் மாசிலா மணியே போற்றி!
பொருந்தலர் புரமூன் றட்ட புண்ணியக் கடவுள் போற்றி!
திருந்துதென் துறைசை வாழுந் திரவியத் தியாக போற்றி!

காவிவேல் விழிக ளொப்பி லாமுலை கணவ போற்றி !
தாவில்செங் கழுநீர் மாலை தரித்தருள் புயத்தாய் போற்றி!
தூவுகட் பொழில்செவ் வந்தித் தோடணி குழையாய் போற்றி!
ஆவடு துறையுள் மேவும் அழகுபொற் தியாக போற்றி!

உகம்பல புரப்பாய் போற்றி! உயிர்க்குயி ரானாய் போற்றி!
நகங்கொடு மலரோன் சென்னி நறுக்கிய நாத போற்றி!
மகம்புரி தக்கன் மீதோர் மறிமுகம் படைத்தாய் போற்றி!
சகம்புகழ் துறைசை ஊரிற் சார்செம்பொற் தியாக போற்றி!

துளங்குவெண் மதியும் கொன்றைத் தொடையலும் அணிந்தாய் போற்றி!
களங்கமி லறிவோர் நெஞ்சங் கலந்திடு தலைவ போற்றி!
இளங்கொடி உமையாட் கென்றும் இன்பனே போற்றி! நாளும்
விளங்குதென் துறைசை வீதி விடங்கனே போற்றி! போற்றி!

போதகம் புரிவாய் போற்றி! போதியம் பலத்தாய் போற்றி!
மாதவர்க் கரசே போற்றி ! மாசிலா மணியே போற்றி!
கீதமோ டுறையும் நாகக் கிண்கிணிச் சரணா போற்றி !
மேதகு துறைசை வீதி விடங்கனே போற்றி! போற்றி !

( 37. முசுகுந்தச் சக்கரவர்த்தி பிள்ளைவரத்துக்கு வந்த அத்தியாயம், பா. 41 - 45 )

சச்சிதா னந்த ரூப சதாசிவ முதலே போற்றி !
பிச்சனேன் தனையாட் கொண்டு பிழைபொறுத் தாண்டாய் போற்றி !
செச்சைமா மலர்ப்பொன் மேனிச் சிவஞான முடையாய் போற்றி!
நச்சர வணிபொற் தியாக நாதனே போற்றி ! போற்றி!

செய்யனே போற்றி! செல்வத் திருவாரூர் அரசே போற்றி!
அய்யனே போற்றி! தென்ஆ வடுதுறை அமுதே போற்றி!

துய்யனே போற்றி! ஞானச் சுகமளித் தென்னை யாண்ட
மெய்யனே போற்றி! தியாக விடங்கனே போற்றி! போற்றி!

*( 39. முசுகுந்த சக்கரவர்த்தி சிவார்ச்சனை செய்து
முத்தி பெற்ற அத்தியாயம், பா. 13, 17 )*

அங்கண போற்றி! என்னை ஆண்டருள் அமல போற்றி!
செங்கணா போற்றி! வேதச் சிரப்பரம் பொருளே போற்றி!
கங்கண நாகச் செங்கைக் காதணி குழையாய் போற்றி !
மங்கையோர் பங்க போற்றி! மாசிலா மணியே போற்றி!

*( 50. அகத்தியருக்கு வெண்ணோய் அகற்றி
அருள்புரிந்த அத்தியாயம், பா. 12 )*

எனையும் பொருளாய்த் தடுத்தாட்கொண்டு
இன்பம் அருள்செய் எழில்மலையே !
பனிவெண் திங்கட் கொழுந்துதவழ்
படர்செஞ் சடைக்கா டுடையானே !
புனிதம் பெருகும் அதுலதனப்
பூவை கணவா ! ஏனமுமோர்
அனமுங் காணாக் குருமணியே !
அய்யா ! யானுன் அடைக்கலமே !

*(57.திருமூலதேவரைத் தடுத்தாட் கொண்ட
அத்தியாயம், பா.36 )*

தேவர்கள் தேவேபோற்றி! சிவபரம் பொருளே போற்றி!
மாவடு வகிர்கண் ஒப்பி லாமுலை மணாளா போற்றி !
பாவினுக் காயி ரம்பொன் பரிசருள் தியாகா போற்றி!
ஆவடு துறையுள் மேவும் அமலனே போற்றி ! போற்றி !

*( 68. மிதுலேசன் முனிவருடன் வந்து அர்ச்சித்து
முத்தி பெற்ற அத்தியாயம், பா. 21 )*

## அருள்தரு ஒப்பிலா முலையம்மன் துதி

தேவ தேவன் திருவருள் நாயகி! காவ லாயுல காள்கரு ணாகரி!
தாவில் சுந்தரி! சங்கரி! சாம்பவி! பாவ கோபி! பருப்பத வர்த்தனி!

 

சுத்த ஞான சுகோதய பூரணி! பத்த ரன்பிற் புதிந்தசிந் தாமணி!
முத்த மூரல் முகிழ்முலை முக்கணி !

( 11. தேவி காசியில் பசு உரு அடைந்த அத்தியாயம், பா. 34, 35 )

கயிலையில் சிவன் அம்பிகையைப் பிரிந்திருந்த பொழுது அவளை நினைத்து உருகிப் பாடுகின்றார்.

பசியகோ மளமே ! சுந்தர மயிலே !
பாகம்விட் டுஅன்றிடாக் குயிலே !
வசிகர முதலே ! எமதுயிர்த் துணையே !
வாழ்வெமக் காகிய மருந்தே !
கசிவுகொண் டமுதம் கான்றிடு மதியே !
கயிலையி ல்இருந்தொளிர் விளக்கே !
உசிதமெய் உமையே ! எம்மைவிட்டு
அகன்றெங் குற்றனை யோ

( 13. கயிலையில் சிவன் அம்பிகையை நினைந்து மோகித்திருந்த அத்தியாயம், பா. 2 )

போத நாயகி ! புராதன நாயகி ! புகழ்சேர்
சோதி நாயகி ! சுந்தர நாயகி ! தொகுமான்
சாதி நாயகி ! சதுர்மறை நாயகி ! தகைசேர்
ஆதி நாயகி ! அஞ்சினேம் யாங்கள்உன் அபயம் !

( 17. தேவர்கள் கயிலை அடைந்த அத்தியாயம், பா.19 )

அப்பணி சடையினான் அணைப்ப வோர்புறம்
துப்பிதழ் மானெனத் துலங்கு வாள்தனை
இப்பவம் அறஎமக் கிரங்கி ஆண்டருள்
ஒப்பிலா முலைபதம் உவந்து போற்றுவாம் !
மாவடு வகிர்விழி மயிலை ஐங்கரக்
கோவினை அருளிய குயிலைக் கோதிலாச்
சேவினி லான்அணைத் திருக்குஞ் செல்வியை
ஆவடு துறைசைவாழ் அனையைப் போற்றுவாம் !

பகிர்நில வணிசடைப் பரமன் பங்கினிற்
துகிர்கொள்வாய்க் கிளியெனத் தோன்று மங்கையை
அகிலகா ரணியைஅம் பிகையை அன்னையை
நிகரிலாத் தனத்தியை நினைந்து வாழ்த்துவாம் !

மறைபுகழ் மரகத மணியை மாதவர்க்கு
இறைவியை இமையன்ஈன் றெடுத்த கன்னியைப்
பிறையணி அரனிடம் பெறும்பி ராட்டியைத்
துறைசைவாழ் இறைவியைத் தொழுதி றைஞ்சுவாம்!

கதிமுத லாங்கயற் கருணைக் கண்ணியைப்
பதிமுத லோடுறும் பரையைப் பைந்தருப்
பொதியுரு வெழிலைஅம் புவியிற் காட்டிய
அதுலகு சாம்பிகை அடியை ஏத்துவாம் !

( 27. தேவி பசுத்துவம் நீங்கிப் பாகம் பெற்ற அத்தியாயம், பா.57 - 61 ).

தெரிவரிய பரையாகி விமலை யாகிச்
செப்பரிய இன்பவருட் செல்வி யாகி
விரியுமுயிர்த் தனுகரண புவன போக
மேவவருட் காரணியாய் விண்ணோர் போற்ற
வருமிமைய மடமகளாய்த் தேவி யாகி
வலியஎமைக் கருணையினால் வந்தாட் கொண்டெம்
உரியமன மொருகணமும் பிரிய மாட்டா
ஒப்பிலா முலைமயிலை யுரைத்து வாழ்வாம்.
மலமகலத் தனுவாதி யுடனே யொன்றாய்
மருவுமிரு வினைப்பயனும் வழாதுகூட்டி
நிலவுசரி யாதியொரு நான்குந் தானாய்
நின்றசெய்வித் துளத்தைவெளிப் படுத்திமிக்க
பலன்மருவு பதமுன்று மருளி யொத்த
பரிபாகங் கண்டுசிவ பாதம் நல்கி
உலகவுயிர்க் குயிராயைந் தொழில்செய் தாளும்
ஒப்பிலா முலைமயிலை யுரைத்து வாழ்வாம்.



வாக்குமனா தீதகோ சரமாய்ச் சத்தாய்
மனோலயத்தி லளவிலின்ப மயமாய்த் தோன்றிப்
போக்குவர வற்றுயிர்தா னாகி நிற்கும்
பூரணத்தின் திருநடங்கட் புலனாற் கண்டு
தேக்கிமகப் பிணிக்குமருந் தன்னை யுண்டு
திரள்முலைப்பால் வழியூட்டித் தீர்க்கு மாபோல்
ஊக்கமிகு மெங்கள்மல நோய்தீர்த் தாள
ஒப்பிலா முலைமயிலை யுரைத்து வாழ்வாம்.

*( 34. போதியம்பலத்துள் மகாதாண்டவம் புரிந்த அத்தியாயம், பா. 7 - 9 )*

அஞ்ச மே!அமு தே!அழ கே!அருட்
புஞ்ச மே!வால சுந்தரப் பூவையே!
வஞ்சி யே!ஒப்பி லாமுலை மங்கையே!
தஞ்சம் உன்பொற் சரணபங் கேருகம்!

*( 36. ஒப்பிலாமுலையம்மன் ஆடிப்பூரத் திருவிழாக் கொண்டருளிய அத்தியாயம், பா. 32 )*

## இத்தலம் தொடர்பான திருமந்திரப் பாடல்களில் சில

...

மாலாங்க னேஇங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சிலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. *77*

நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாளென் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவன் ஆவடு தண்டுறை
சீருடை யாள்பதம் சேர்ந்திருந் தேனே. *78*

சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவன் ஆவடு தண்டுறை

சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே. 79

இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே. 80

பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவம் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே. 81

ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பால் ஆட்டி நாதனை அர்ச்சித்து
நானும் இருந்தேன்நற் போதியின் கீழே. 82

ஓதிய வெண்ணெண் கலையின் உயர்கலை
ஆதியில் வேதமே யாமென் றறிகிலர்
சாதியும் பேதமும் தத்துவ மாய்நிற்பள்
ஆதியென் றோதினள் ஆவின் கிழத்தியே. 1121

ஆவின் கிழத்திநல் லாவடு தண்டுறை
நாவின் கிழத்தி நலம்புகழ்ந் தேத்திடும்
தேவின் கிழத்தி திருவாஞ் சிவமங்கை
மேவுங் கிழத்தி வினைகடிந் தாளே. 1122

----------

## இத்தலம் தொடர்புடைய பெரியபுராணப் பாடல்கள்

### திருஞானசம்பந்தர் புராணம்

. . . . . நம்ம லத்துயர் தீர்க்கவந்து அருளிய ஞானச்
செம்ம லார்திரு ஆவடு துறையினைச் சேர்ந்தார் . . .417



மூவ ருக்குஅறி வரும்பொருள் ஆகிய மூலத்
தேவர் தம்திரு ஆவடு துறைத்திருத் தொண்டர்
பூஅ லம்புதண் பொருபுனல் தடம்பணைப் புகலிக்
காவ லர்க்குஎதிர் கொள்ளும் ஆதரவுடன் கலந்தார்418

வந்து அணைந்தவர் தொழாமுனம் மலர்புகழ்ச் சண்பை
அந்த ணர்க்கெலாம் அருமறைப் பொருள்என வந்தார்
சந்த நித்திலச் சிவிகைநின்று இழிந்துஎதிர் தாழ்ந்தே
சிந்தை இன்புற இறைவர்தம் கோயில்முன் சென்றார். 419

நீடு கோபுரம் இறைஞ்சி உள் புகுந்துநீள் நிலையான்
மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கி
ஆடும் ஆதியை ஆவடு துறையுள் ஆர் அமுதை
நாடு காதலில் பணிந்து எழுந்து அருந்தமிழ் நவின்றார்.420

அன்பு நீடிய அருவிகண் பொழியும் ஆர் வத்தால்
முன்பு போற்றியே புறம்புஅணை முத்தமிழ் விரகர்
துன்பு போம்மனத் திருத்தொண்டர் தம்முடன் தொழுதே
இன்பம் மேவிஅப் பதியினில் இனிது அமர்ந்து இருந்தார் 421

மேவி அங்குஉறை நாளினில் வேள்விசெய் வதனுக்கு
ஆவ தாகிய காலம்வந்து அணைவுற அணைந்து
தாவில் சண்பையர் தலைவர்க்குத் தாதையார் தாமும்
போவ தற்குஅரும் பொருள்பெற எதிர்நின்று புகன்றார்.422

தந்தை யார்மொழி கேட்டலும் புகலியார் தலைவர்
முந்தை நாளிலே மொழிந்தமை நினைத்துஅருள் முன்னி
"அந்தம் இல்பொருள் ஆவன ஆவடு துறையுள்
எந்தை யார்அடித் தலங்களன் றோ" என எழுந்தார். 423

சென்று தேவர்தம் பிரான்மகிழ் கோயில்முன்பு எய்தி
நின்று போற்றுவார் "நீள்நிதி வேண்டினார்க்கு ஈவது
ஒன்றும் மற்றுஇலேன் உன்அடி அல்லதுஒன்று அறியேன்"
என்று பேர்அருள் வினவிய செந்தமிழ் எடுத்தார். 424

எடுத்த வண்தமிழ்ப் பதிகநா வடியின்மேல் இருசீர்
தொடுத்த வைப்பொடு தொடர்ந்தஇன் இசையினால் துதிப்பார்

மடுத்த காதலில் வள்ளலார் அடியிணை வழுத்தி
அடுத்த சிந்தையால் ஆதரித்து அஞ்சலி அளித்தார்.425

நச்சி இன்தமிழ் பாடிய ஞானசம் பந்தர்
இச்சை யேபுரிந்து அருளிய இறைவர்இன் அருளால்
அச்சி றப்புஅருள் பூதமுன் விரைந்துஅகல் பீடத்து
உச்சி வைத்தது பசும்பொன்ஆ யிரக்கிழி ஒன்று. 426

வைத்த பூதம் அங்கு அணைந்துமுன் நின்றுநல் வாக்கால்
"உய்த்த இக்கிழி பொன்உல வாக்கிழி உமக்கு
நித்த னார்அருள் செய்தது" என்று உரைக்கநேர் தொழுதே
அத்த னார்திரு வருள்நினைந்து அவனிமேற் பணிந்தார்.427

பணிந்து எழுந்துகை தொழுதுமுன் பனிமலர்ப் பீடத்து
அணைந்த ஆடகக் கிழிதலை கொண்டுஅரு மறைகள்
துணிந்த வான்பொருள் தரும்பொருள் தூயவாய் மையினால்
தணிந்த சிந்தைஅத் தந்தையார்க்கு அளித்துஉரை செய்வார்.428

"ஆதி மாமறை விதியினால் ஆறுசூழ் வேணி
நாத னாரைமுன் னாகவே புரியுநல் வேள்வி
தீது நீங்கநீர் செய்யவும் திருக்கழு மலத்து
வேத வேதியர் அனைவருஞ் செய்யவும் மிகுமால்"429

என்று கூறி அங்கு அவர்தமை விடுத்தபின் அவரும்
நன்றும் இன்புறு மனத்தொடும் புகலிமேல் நண்ண
வென்றி ஞானசம் பந்தரும் விருப்பொடு வணங்கி
மன்றல் ஆவடு துறையினில் மகிழ்ந்து இனிது இருந்தார். 430

அண்ண லார்திரு ஆவடு துறைஅமர்ந் தாரை
உள்நி லாவிய காதலி னால்பணிந்து உறைந்து
மண்ணெ லாம்உய வந்தவர் போந்துவார் சடைமேல்
தெண்ணி லாஅணி வார்திருக் கோழம்பஞ் சேர்ந்தார்.431

## திருநாவுக்கரசர் புராணம்

ஆஉறும் அஞ்சு ஆடுவார் கோடி காவில்
அணைந்து பணிந்து ஆவடு தண் டுறையைச் சார்ந்தார். 190



"ஆவடுதண் டுறையாரை அடைந்துய்ந்தேன்" என்று
அளவில் திருத்தாண்டகமுன் அருளிச் செய்து,
மேவு திருக்குறுந்தொகை நேரிசையுஞ் சந்த
விருத்தங்கள் ஆனவையும் வேறு வேறு,
பா அலர் செந்தமிழ்த் தொடையால் பள்ளித் தாமம்
பல சாத்தி மிக்கெழுந்த பரிவினோடும்,
பூவலயத்தவற் பரவப் பலநாள் தங்கிப்
புரிவுறுவைத் திருத்தொண்டு போற்றிச் செய்வார்.

## ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்

உரவுநீர்த் தடம்பொன்னி அடைந்து அன்ப ருடன் ஆடி
அரவுஅணிந்தார் அமர்ந்ததிரு வாவடுதண்டுறை அணைந்தார். 295

அங்கு அணைவார் தமைஅடியார் எதிர்கொள்ளப் புக்கருளிப்
பொங்குதிருக்கோயிலினைப் புடைவலம்கொண்டு உள் அணைந்து
"கங்கைவாழ் சடையாய்! ஓர் கண்ணிலேன்" எனக் கவல்வார்
இங்குஎனக்குஆர் உறவு என்னும் திருப்பதிகம் எடுத்திசைத்தார்.

## திருமூலதேவ நாயனார் புராணம்

ஆவடுதண்டுறை அணைந்தங்கு அரும்பொருளை உறவணங்கி
மேவுவார் புறக்குடபால் மிக்குஉயர்ந்த அரசின்கீழ்த்
தேஇருக்கை அமர்ந்து அருளிச் சிவயோகம் தலைநின்று
பூ அலரும் இதயத்துப் பொருளோடும் உணர்ந்திருந்தார். 25

ஊன் உடம்பிற் பிறவிவிடம் தீர்ந்துஉலகத் தோர்உய்ய
ஞானம்முதல் நான்கும்மலர் நல்திருமந் திரமாலை
பான்மைமுறை ஓராண்டுக்கு ஒன்றாகப் பரம்பொருளாம்
ஏனஎயிறு அணிந்தாரை "ஒன்றவன்தான்" என எடுத்து. 26

முன்னியஅப் பொருள்மாலைத் தமிழ்மூவா யிரம்சாத்தி
மன்னியமூ வயிரத்தாண்டு இப்புவிமேல் மகிழ்ந்திருந்து
சென்னிமதி அணிந்தார்தம் திருவருளால் திருக்கயிலை
தன்னில் அணைந்து ஒருகாலும் பிரியாமைத் தாள் அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்

## அருணகிரிநாதர் திருப்புகழ்

தத்த தன தான தனத்தனத் தத்த தத்த
தத்த தன தான தனத்தனத் தத்த தத்த
தத்த தன தான தனத்தனத் தத்த தத்த தனதான

சொற்பிழைவ ராமல் உனைக்கனக் கத்துதித்து
நிற்பதுவ ராத பவக்கடத் திற்சு ழற்றி
சுக்கிலவ தார வழிக்கிணக் கிக்க ளித்து விலைமாதர்

துப்பிறைய தான இதழ்க்கனிக்குக் கருத்தை
வைத்துமய லாகி மனத்தைவிட்டுக் கடுத்த
துற்சனம காத கரைப்புவிக் குட்டமைத்த நிதிமேவு

கற்பக இராச னெனப்படைக் குப்பெருத்த
அர்ச்சுனந ராதி யெனக்கவி குட்பதித்து
கற்றறிவி னாவை யெடுத்தடுத் துப்படித்து மிகையாகக்

கத்திடுமெ யாக வலிக்கலிப் பைத்தொ லைத்து
கைப்பொருளி லாமை யெனைக்கலக் கப்படுத்து
கற்பனைவி டாமல் அலைத்திருக் கச்சலிக்க விடலாமோ

எற்பணிய ராவை மிதித்துவெட் டித்துவைத்து
பற்றியக ராவை யிழுத்துரக் கக்கிழித்து
எட்கரிப டாமல் இதத்தபுத் திக்கதிக்கு நிலையோதி

எத்தியப சாசின் முலைக்குடத் தைக்குடித்து
முற்றுயிரி லாமல் அடக்கிவிட் டுச்சிரித்த
இற்கணையி ராமர் சுகித்திருக் கச்சினத்த திறல்வீரர்

வெற்பெனம தாணி நிறுத்துருக் கிச்சமைத்து
வர்க்கமணி யாக வடித்திருத் தித்தகட்டின்
மெய்க்குலம தாக மலைக்கமுத் தைப்பதித்து வெகுகோடி

விட்கதிர தாக நிகர்த்தொளிக் கச்சிவந்த
ரத்தினப டாக பயிற்பரிக் குத்தரித்து
மிக்கதிரு வாவ டுநற்றுறைக் குட்செழித்த பெருமாளே



தான தானன தானன தத்தன
தான தானன தானன தத்தன
தான தானன தானன தத்தன தனதான

சோதி மாமதி போல்முக முங்கிளர்
மேரு லாவிய மாமுகை யுங்கொடு
தூர வேவரும் ஆடவர் தங்கள்முன் எதிராயே

சோலி பேசிமுன் னாளிலி ணங்கிய
மாதர் போலிரு தோளில்வி ழுந்தொரு
சூதி னால்வர வேமனை கொண்டவ ரொடுமேவி

மோதி யேகனி வாயுத ரந்தரு
நாளி லேபொருள் சூறைகள் கொண்டுபின்
மோன மாயவ மேசில சண்டைக ளுடனேகி

மோச மேதரு தோதக வம்பியர்
மீதி லேமய லாகிம னந்தளர்
மோட னாகிய பாதக னுங்கதி பெறுவேனோ

ஆதி யேயெனும் வானவர் தம்பகை
யான சூரனை மோதிய ரும்பொடி
யாக வேமயி லேறிமு னிந்திடு நெடுவேலா

ஆயர் வாழ்பதி தோறுமு கந்துர
லேறி யேயுறி மீதனை யுங்கள
வாக வேகொடு போதநு கர்ந்தவன் மருகோனே

வாதி னால்வரு காளியை வென்றிடு
வாதி நாயகர் வீறுத யங்குகை
வாரி ராசனு மேபணி யுந்திரு நடபாதர்

வாச மாமல ரானொடு செந்திரு
மார்பில் வீறிய மாயவ னும்பணி
மாசி லாமணி ஈசர்ம கிழ்ந்தருள் பெருமாளே

திருச்சிற்றம்பலம்

## இரதசப்தமித் தீர்த்தவாரித் திருவிழா

தைமாதம் சுக்கிலப் பட்சத்தில் வரும் சப்தமியை ரத சப்தமி என்பர். இந்நாள் மிகச் சிறந்த புண்ணியத் திருநாள். சூரியனுக்கும் அம்பாளுக்கும் மிகவும் உகந்த நன்னாள். இந்நாளில் தீர்த்தவாரி நடைபெறும். அதுசமயம் ஏழு எருக்கு இலைகளையும் ஏழு மஞ்சள் அட்சதையும் ஏழு அருகம் புல்லையும் சிரசில் வைத்து "ஸப்த ஸப்த ப்ரியே தேவி - ஸப்த லோக ப்ரதீபிகே - ஸப்த அர்க்கபத்ர ஸ்நானேன - மம பாபம் ஸ்யபோஹய" என்ற ஸ்லோகத்தைக் கூறி புனிதத் தீர்த்தத்தில் ஏழுமுறை மூழ்கி எழ வேண்டும் என்று ஆன்றோர் கூறுவர்.

திருவாவடுதுறை திருத்தலத்தில் தீர்த்தவாரிப் பெருவிழா (மகோற்சவம் ) பத்து நாட்கள் நடைபெறும். **முதல்நாள்** காலை துவஜாரோஹணமும், யாத்திரா தானமும் இரவு பஞ்சமூர்த்திகள் திருவீதியுலாவும் நடைபெறும். **இரண்டாம் திருநாளில்** காலை திருமஞ்சங்களில் பஞ்சமூர்த்திகளுடன் திருமூலர் திருமேனியும் எழுந்தருளி திருவீதியுலாக் கொண்டருளிய பின் இறைவன் சன்னிதியில் திருமூலர் சரித்திரமும் திருமந்திர விசேடங்களும் (ஐதீக விழா) நடைபெறும். **மூன்றாம் திருநாளில்** காலை சூரிய பிரபை, இரவு சந்திரப் பிரபை **நான்காம் திருநாளில்** காலை ஆட்டுக்கிடா வாகனம், இரவு யானை வாகனம்.

**ஐந்தாம் திருநாளில்** திருஞானசம்பந்தர் பஞ்சமூர்த்திகளுடன் பல்லக்கில் திருவுலாக் கொண்டருளிய பின் இறைவன் சன்னிதியில் இத்தலத்து திருப்பதிகம் ஓதுதல், பலிபீடத்தில் பூதம் வாயிலாக பொன் உலவாக்கிழி, தியாகேசர் வசந்த மண்டபத்திற்கு எழுந்தருளுதல். அம்மன் தாம் பெற்ற பசுவடிவத்தை நீக்கியருள வேண்டி கோமுக்தீஸ்வரரைப் பூசித்தல் இடப வாகனக் காட்சி மற்றும் சகோபுரம் கொண்டருளல்.



**ஆறாம் திருநாளில்** காலை மஞ்சம். மாலை ஸ்ரீ பிட்சாடனர் திருவீதிக்கு எழுந்தருளுதல். இரவு மஞ்சம். **ஏழாம் திருநாளில்** காலையும் இரவும் மஞ்சங்களில் பஞ்சமூர்த்திகள் புறப்பாடு. **எட்டாம் திருநாளில்** காலை மஞ்சம். இரவு குதிரை வாகனம். தியாகேசர் திருத்தேர் எழுந்தருளல். விநாயகர் தேர் வடம் பிடித்தல். ஒன்பதாம் திருநாளில் காலை திருத்தேர் உலா. பத்தாம் திருநாளில் (சப்தமிதிதி) தீர்த்தவாரிக்குப் பஞ்சமூர்த்திகள் எழுந்தருளல். இரவு தியாகேசர் பந்தர் திருக்காட்சி. பஞ்சமூர்த்திகள் திருவீதியுலாவும் நடைபெறும்.

விழா நாட்களில் பஞ்சமூர்த்திகள் (இறைவன், இறைவி, விநாயகர், முருகன், சண்டேசுவரர்) திருவீதியுலா மங்கள வாத்தியங்கள் முன்னே இசைக்க ஓதுவாமூர்த்திகளின் திருமுறை ஓதல் பின் தொடர நான்கு வீதிகளிலும் நடைபெறும். இத்திருக்கோயில் பெருவிழாவின்போது திருவாவடுதுறை ஆதீனத்திலும் தைமாத குருபூஜை பத்துநாள் விழா நடைபெறுவதால் இவ்வூரே திருவிழாக்கோலம் கொண்டிருக்கும். அடியார் பெருமக்களும் தமிழறிஞர்களும் சிவாச்சாரியர்களும் சித்தாந்தவாதிகளும் ஆய்வாளர்களும் ஆதீன அன்பர்களும் உள்ளூர் வெளியூர் மக்களும் ஊர் முழுதும் நிறைந் திருப்பர். ஆதீன மடாலயத்தில் சொற்பொழிவுகளும், பூஜைகளும் விருது வழங்கியருளுதலும் நூல் வெளியீடு களும் திருக்கோயிலில் கலை நிகழ்ச்சிகளும் மிகவும் சிறப்பாக மரபு மாறாமல் நடைபெறுகின்றன.

## கோயில்களில் கொடிமரம்

சிவபெருமானுக்கு ரிஷபக்கொடி, முருகனுக்கு சேவற்கொடி திருமாலுக்குக் கருடக்கொடி போன்று ஒவ்வொரு தெய்வத்திற்கும் தனித்ததொரு கொடி உண்டு. திருக்கோயிலில் சாந்நித்தியம் உடைய மூலவர்க்கு எதிரே கொடிமரம் அமைந்திருக்கும். இதனை வடமொழியில்

த்வஜஸ்தம்பம் என்பர். (த்வஜ் - கொடி ; ஸ்தம்பம் - பருத்துயர்ந்த கம்பம் )

வேதாகம சாத்திர விதிகளின்படி கோயில் கொடிமரங்களுக்கு மந்திர ஆற்றல் ஏற்றப்பட்டு நிறுவப் பட்டுள்ளன. கூறப்பட்டுள்ள திரவியங்கள் இதனடியில் இட்டு ஒரு நன்னாளில் வேதாகமங்களில் வல்லவர்களால் மங்கள இசை முழங்க வேத ஆகம ஒலிகளுடன் பிரதிட்டை செய்யப்படுகிறது.

பெருவிழாக் காலங்களில் முதல் நாளில் சிறப்பு வழிபாட்டுடன் திருக்கொடியேற்றம் நடைபெறுகிறது. மூலவரின் நேர் எதிரே ( சன்னிதியில் ) சூட்சும சின்னமாக அமைந்திருக்கும்.

கோயில்களில் கொடிமரத்துக்கு அடியில்தான் வடக்கு நோக்கி தலைவீழ்ந்து (அஷ்டாங்க, பஞ்சாங்க நமஸ்காரம்) செய்தல் வேண்டும். கோயிலின் உள்ளே எத்தெய்வத்திற்கு எதிரேயும் தரையில் வீழ்ந்து வணங்குதல் கூடாது. ஏன் என்றால் வெளியே கொடி மரத்திற்கு அடியில் வீழ்ந்து வணங்கும் போது தான் பின்புறம் (காலடி பக்கம்) தெய்வச் சன்னிதிகள் எவையும் இருக்காது. இது தவிர பிறிதொரு காரணமும் உண்டு. நமஸ்கரிக்கும் போது கொடி மரத்தினடியிலிருந்து வெளிவரும் கதிர்வீச்சுகள் நம் உடல் மீது பாய்கின்றன. அதனால் புத்தித் தெளிவும் மனத்தூய்மையும் உண்டாகும். பஞ்சபூதங்களில் ஒன்றான ஆகாயத்தில் அமைந்துள்ள பிரம்மத்தின் கதிர்களைக் திருக் கோயிலின் கும்பத்திற்குச் செலுத்தி, அங்கிருந்து கருவறை மூலவர்க்கு அதனை அளிப்பதும் கோயில் கொடிமரத்தின் சூட்சுமக் காரியமாகும்.

கொடி மரத்தில் தெய்வங்கள் சாந்நித்யம் கொண்டுள்ளன. கொடிமரம் உள்ள கோயில்கள் பழுது படாமல் மிகுந்த புனிதத் தன்மையுடன் சிறந்து விளங்கு கின்றன. திருக்கொடிமரத்து பாதத்தில் வணங்கும் போது சொல்லவேண்டிய வடமொழி ஸ்லோகம் ஒன்று உண்டு.

 

ஏகம் து பாதம் ; த்வி முகம் த்ரி நேத்ரம் ;
ரோமாவலீ ராஜித தர்ப்ப ரஜ்ஜிம்
ஸ்வேதாங்க ரூபம் ; ஸுக நாஸி காந்தம்
ஆரூட பத்மாஸன தண்ட ரூபம் .

கொடிமரம் இல்லாத திருக்கோயில்களில் பலிபீடத்தின் அடியில் வீழ்ந்து வணங்குதல் வேண்டும்.

திருச்சிற்றம்பலம்

**பொது நல வாழ்த்து**

ஞானநா யகன்தாள் வாழ்க!
நலந்தரு பொற்றாள் வாழ்க !
ஊனமில் துறைசை வாழ்க !
ஒப்பிலா முலைத்தாய் வாழ்க !
தேனுறை மலர்தூஉஞ் செம்பொற்
சிங்கமா பீடம் வாழ்க !
வானவர் முதலோர் வாழ்க !
வாழ்கசீர் அடியா ரெல்லாம் !

*- துறைசைப் புராணம்.*

